ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசார்யர் எழுதிய

# த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்

ஆளவந்தார்முதலான நம் பூர்வாசார்யர்களும், விசேஷித்து
ஸ்ரீபாஷ்யகாரரும் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களையுபஜீவித்து
திவ்ய ஸ்ரீஸூக்திகளருளிச் செய்திருக்கிறபடியை
வெகுவிரிவாக நிரூபிப்பது.

## ஸ்ரீராமாநுஜன் வெளியீடு

திருக்குடந்தை 112, கீழக்கடலங்குடியில் வாழும்
ஸ்ரீமான், ராவ்ஸாஹிப் S. ரங்கஸ்வாமி ஐயங்காரால்

சென்னை, ரத்தினம் பிரஸ் பிராஞ்சில் அச்சிடுவிக்கப்பட்டது

கிடைக்குமிடம்:
க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்
மேலேகண்ட திருக்குடந்தை விலாஸத்திலும் கிடைக்கும்

விலை ரூ. 1—8—0

ஜய வருஷ புரட்டாசித் திருவோணம்

1954

ஸ்ரீ:

# முன்னுரை

## (ஸ்ரீமான் ராவ்ஸாஹிப் S. ரங்கஸ்வாமி ஐயங்கார், கும்பகோணம்.)

திருக்குடந்தையில் வாழும் ப்ரஹ்மஸ்ரீ அக்னிஹோத்ரம் ராமாநுஜதாதாசாரியாரவர்கள் சென்ற ஜூலை மாதம் 25உ ஞாயிற்றுக்கிழமை வெளிவந்த ஹிண்டு தினசரிபத்திரிகையில், ஆழ்வார் திருவடிகளில் பக்தியே வடிவெடுத்தவரான ஸ்ரீமதுபயவே. D. ராமஸ்வாமி ஐயங்கார் (சென்னை அட்வொகேட்) அவர்களின் நம்மாழ்வார் திவ்யப்ரபந்த விஷயமான சிறு நூலொன்றுக்கு மதிப்புரை யெழுதுகையில் அந்த நூலாசிரியருக்கு ஆழ்வார் திருவடிகளிலிருக்கும் பக்தியைப் பாராட்டியெழுதிவிட்டு அநாவச்யகமாகவும் உண்மைக்கு மாறாகவும் சில விஷயங்கள் எழுதியிருந்தார்; (அதாவது) திவ்யப்ரபந்தம் வேதங்களைவிட உத்க்ருஷ்டமென்றோ இதுவும் ஒரு வேதமென்றோ சொல்லுவது தவறானதென்றும், ஸ்ரீராமாநுஜர் இந்த தமிழ்ப்ரபந்தங்களை ஆதரிக்கவில்லை யென்றும், அவர் வடமொழியிலுள்ள உபநிஷத்துக்களைத் துணைகொண்டு ஸ்ரீபாஷ்யாதிகளைச் செய்தாரேயொழிய திவ்யப்ரபந்தங்களைத் துணைகொள்ளவேயில்லை யென்றும் எழுதியிருந்தார். இது ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதி க்ரந்தங்களில் லவலேசமும் பரிசயமில்லாதவர்கள் எழுதக்கூடியதேயல்லது அவற்றில் சிறிதாவது பரிசயமிருந்தால் இப்படியெழுதக் கைவந்திராதென்று அப்போதே பல மஹான்கள் ஸாதித்தார்கள். உண்மையில் அக்னிஹோத்ரம் தாதாசாரியார் பரம்பரையில் பகவத் விஷயத்திற்போலவே ஸ்ரீபாஷ்யாதிகளிலும் ப்ரவேசபாக்ய மில்லாமையாலே அவர் எழுதியிருப்பதில் வியப்பொன்றுமில்லை யென்றும் பல பெரியார்கள் பணித்தார்கள்.

1-8-1954 ஞாயிற்றுக்கிழமையன்று வெளிவந்த ஹிண்டுவில் ஸ்ரீமான் M. V. V. K. ரங்காசாரியார் என்னுமொருவர் தாதாசாரியாருடைய வியாஸத்தை மறுத்து மிகவும் சுருக்கமாக ஒரு லெட்டர் வெளியிட்டிருந்தாலும், உபய வேதாந்தங்களையும் கரைகண்ட மஹாபுருஷர்கள் மூலமாக ஒரு சிறந்த க்ரந்தம் வெளிவரவேணுமென்கிற ஆவல் அடியேனுக்கு அபரிமிதமாக இருந்தது. "பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்களொருங்கவிடுவர்" என்று ஆசார்யஹ்ருதயத்திலும், "செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்று தேசிகப் பிரபந்தத்திலும் இருந்தாலும், அதை நன்றாக ஸமந்வயப்படுத்திக் காட்டவேணும்; ஒன்றிரண்டு விஷயங்களிற் காட்டினால் போதாது; பல விஷயங்களில் வித்வான்கள் சிறிதும் விவாதப்படாமல் உகந்து ஏற்றுக்கொள்ளும்படி காட்டவேணும். இதற்குத் தகுந்த உத்தமாதிகாரியான மஹாபுருஷர் உலகம்பரந்த புகழாளரான காஞ்சீபுரம் ஸ்ரீஸ்வாமியொருவரேயாதலால் அந்த ஸ்வாமி திருவடிவாரத்திலே அடியேன் பிரார்த்தித்தேன்; பிரார்த்தித்த வேளை மிக நல்லதாயிருந்தபடியால் அடியேனுடைய வேண்டுகோள் வெகுவிரைவாக நிறைவேறினது மல்லாமல் சதாதிகமாகவும் நிறைவேறிற்று. ஸ்ரீமத் ப்ரதிவாதிபயங்கர ஸ்வாமி த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வ மென்னுமிந்த மஹாக்ரந்தத்தை ஒரு வாரத்தில் ஸித்தப்படுத்தி யுபகரித் தருளினார். இதில் சிற்சில விஷயங்களை அடியேன் ஸ்வாமியினுடைய பத்ரிகையான ஸ்ரீராமாநுஜனிலும், அம்ருதலஹரியிலும் ஏற்கெனவே ஸேவித்திருந்தாலும் அனேகமான அபூர்வ விஷயங்கள் கொண்டு இந்த மஹாக்ரந்தம் அமைந்திருக்குமழகு அடியேன்போன்ற மிதமதிகளுக்கு நிலமன்றாகையாலே, உபயவேதாந்த ஸாகரபாரதர்சிகளான வித்வந்மணிகள் இதையநுபவித்து ஆனந்திக்கவேணுமென்று கருதி அடியேன் இதை முத்ரணம் செய்துவைக்கும் பாக்யம் பெற்றேன். இதனால் அடியேனை மிகவும் தந்யஜந்மாவாகவெண்ணிப் பரமானந்தமடைகின்றேன். இந்த க்ரந்தத்தை ஒரெழுத்துவிடாமல் வாசிப்பவர்களுக்கு ஆளவந்தார், கூரத்தாழ்வான் பட்டர்முதலான ஆசார்யர்களைக்காட்டிலும் ஸ்ரீபாஷ்யகாரரே திவ்யப்ரபந்தங்களை மிக அதிகமாக உபயோகங்கொண்டவரென்கிற உண்மை தெரிவதோடு, உபயவேதாந்த ரஹஸ்யார்த்தங்களெல்லாம் கையிலங்கு கனியாகுமென்பது அடியேனது துணிபு. **S. ரங்கஸ்வாமி.**

ஸ்ரீமதுபயவே. வித்வத்ஸார்வபௌமம.

# ஆஸூரி ராமாநுஜாசார்ய ஸ்வாமி

ஸ்ரீபெரும்பூதூர்.



உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்ய சப்தகத்திற்கு அத்விதீயலக்ஷ்ய பூமியாக ஸேவை ஸாதித்தருளும் ஸ்ரீஸ்வாமி திருவடி வாரத்தில் இந்த ஸர்வஸ்வத்தை ஸமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீ:

# இந்நூலிலுள்ள விஷயங்களின் அட்டவணை

பக்கம்

ஸ்ரீ:

# விஜ்ஞாபனம்.

(ஸ்ரீஉவே: வித்வான். அக்காரக்கனி. ஸம்பத்குமாராசாரியர், M.A.)

தத்வஹிதபுருஷார்த்தங்களை யுபதேசிக்கவே அவதரித்த வேதமானது அவைகளை இப்படிப்பட்டவையென்று நாம் எளிதில் தெரிந்து கொள்ளும்படி அவதரிக்கவில்லை. அறிவிலிகள் இவையெல்லாம் உன்மத்தபாஷிதங்களேயென்று ஏசும்படியன்றோ வேதம் பேசியிருக்கிறது. அதாவது, 'ஜகத்காரணவஸ்து யாது' என்று கேட்டால் ஸ்பஷ்டமாக ஒன்றும் தெரிவிக்காமல், காரணவஸ்துவை அஸத்தென்றும், ஸத்தென்றும், தமஸ்ஸென்றும், ஆத்மாவென்றும், சம்புவென்றும், ஹிரண்யகர்ப்பனென்றும், நாராயணனென்றும் இப்படி பலவாறாகப் பேசிற்று. இப்படியே ஜீவபரஸம்பந்தத்தை பேதமென்றும், அபேதமென்றும், அம்சாம்சிபாவமென்றும் பேசிற்று. மோக்ஷத்தில் ஜீவனுக்கு ஞானமுண்டென்றும், இல்லையென்றும்; சரீரமுண்டென்றும், இல்லையென்றும் சொல்லிற்று. இப்படி எந்த விஷயத்தை எடுத்துக்கொண்டாலும் வேதத்தில் மந்தமதிகளுக்கு ஸம்சயவிபர்யயங்கள் தோன்றுமேயன்றி ஓரர்த்தமாவது இப்படித்தானென்று நிச்சயிக்கப் போகாது. இந்த கஷ்டத்தைத் தவிர்க்கவேணுமென்று ப்ரஹ்மஸூத்ரமும் மற்றும் பல நூல்களும் வேதார்த்த நிர்ணயம் பண்ண அவதரித்தன. ஆனாலென்ன? வித்வான்கள் இவற்றுக்கும் வெவ்வேறு வழியில் அர்த்தம் பண்ணி பாஷ்யமிட்டு ஒன்றுக்கொன்று முரணான பற்பல மதங்களை ஸ்தாபித்து விட்டார்கள். இதனால் உண்மையான வேதார்த்தமின்னதென்பதே தெரியாமற்போயிற்று.

இந்த ஸமயத்தில் எம்பெருமான்பேரருளால் ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு திவ்ய ப்ரபந்தங்களென்னும் நிதியொன்று அருமையாகக் கிடைத்தது. அவரும் இதின் பெருமையையாராய்ந்து வேதார்த்தத்தை யறுதியிடுவதற்கு இதுதான் தகுந்த ஸாதநமெனக் கருதி, தமிழ்வேதமென்கிற விருதுசாற்றி அதை நன்கு ப்ரசாரம் செய்துவைத்தார். எம்பெருமான் தன்னருளால் மயர்வறமதிநலம் அருளப்பெற்று ஜ்ஞானத்தாலும் பக்தியாலும் சிறந்தவர்களான ஆழ்வார்களின் அதிஸ்பஷ்டமான மதுரதமஸ்ரீஸூக்திகளைக்கொண்டு வேதத்தின் அர்த்தத்தை நிர்ணயிப்பதென்கிற சிறந்த வழியொன்று அன்று முதலாக ஏற்பட்டது. நமது ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயப்ரவர்த்தகர்களான ஆசார்யர்களெல்லாரும் இவ்வழியைத்தான் பின்பற்றி உபயவேதாந்தப்ரவர்த்தகாசார்யர்களென்கிற விருது பெற்றார்கள். இந்த ஸம்ப்ரதாயமே தம் திருநாமத்தைக்கொண்டு விளங்கும்படியான ஏற்றம்பெற்ற ஸ்வாமி எம்பெருமானார் தாமும் இந்த பரம்பரையில் சேர்ந்தவராகையால் திவ்யப்ரபந்தங்களைத் துணைகொண்டே ஸ்ரீபாஷ்யாதிகளை ஸாதித்தருளினார். ஆனால், ஸேதுமுதல் இமயமலை வரையில் பரவவேண்டியும், பற்பல பரமதஸ்தரை ஈடுபடுத்தவேண்டியும் இருக்கும் தமது ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களில் இத்தமிழ் ப்ரபந்தங்களையும், அவற்றுக்கு ஆசிரியர்களான ஆழ்வார்களின் திருநாமங்களையும் வெளிப்படையாகக் காட்டுவது தமது உத்தேச்யஸித்திக்கு இடையூறாயிருக்குமெனக்கருதி, மருந்தை உட்கொள்ள இசையாத சிறுவர்க்கு அதை அபிமதவஸ்துவில் மறைத்து ஊட்டுமாப்போலே மறைமுகமாகவே தமிழ்வேதத்தின் அர்த்தங்களை யூட்டிவைத்தார்.

ஆனால் நாளடைவில் இந்த மருமத்தைப் பலர் அறியப்பெறாமல், எம்பெருமானார்ஸ்ரீஸூக்திகளெல்லாம் ஸம்ஸ்க்ருதத்திலிருப்பதையும், அதிலும், ஆழ்வார்களின் அல்லது திவ்யப்ரபந்தங்களின் பெயரில்லாமையையும் பார்த்து மருண்டு,

எம்பெருமானுர் இவைகளை யுபஜீவிக்கவேயில்லையென்றும் இவற்றையொரு பொருளாகவே மதித்திலரென்றும் கருதி இவைகளை அவமதிக்கத் துணிந்து விட்டார்கள். இம்மாதிரியான அநீதிச்செயல்கள் வலிந்துபோக இவ்வாபத்தை நீக்கவல்ல விரகர் யாரென்று ஆஸ்திகவுலகம் நாற்றிசையும் சுற்றிப்பார்க்கத் தொடங்கிற்று. அப்பொழுது, "உபயவேதாந்தங்களையும் தெளியக்கற்றவன் நாஹம் நாஹம் நசாஹம் நச பவிதி புநஸ் தாத்ருசோ மாத்ருசேஷு" என்று சொல்லிக்கொண்டு பண்டித மண்டலியில் பரிகணிதரானவர்களெல்லாம் ஒவ்வொருவராக நழுவத்தேட, "இத்யேவம் த்யக்தஹஸ்தே ஸபதி ஸூரகணே பாவகூந்யே ஸமஸ்தே மூலம் யஃ ப்ராதுராஸீத்" என்ற நிலைமையை இன்று நாமும் ப்ரத்யக்ஷீகரிக்கலாம்படி, உலகம் நிறைந்த புகழாளரான நம்முடைய ஸ்வாமி "நானுளேன், அஞ்சவேண்டாம்" என்று கிளர்ந்து த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வம் என்கிற இந்த மஹாக்ரந்தத்தை யுபகரித்தருளியிருக்கிறார்.

இதை அனைவரும் ஸாவதாநமாக ஸேவித்து, எம்பெருமானுர், ஆழ்வார் திறத்தும் அவர் ஸ்ரீஸூக்திதிறத்தும் வைத்திருந்த மதிப்பின் சீர்மையையும், அதன் பயனுக மற்ற பாஷ்யங்களைவிட ஸ்ரீபாஷ்யாதிகள் பெற்ற சிறப்பையும், ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் வேதார்த்தங்களை விவரித்துக்காட்டு மழகையும் கண்டு களிப்பர்களாக. அன்றியும் இப்படிப்பட்ட மஹாக்ரந்தத்தை நமக்குத் தந்தருளின மஹாஸ்வாமிக்கு ஸ்வரூபாநுரூபமாக க்ருதஜ்ஞதாநுஸந்தாநத்தையும் செய்வார்களாக.

தி. அ. ஸம்பத்குமாரதாஸன், 27—9—54.

---

ஸ்ரீ:

## விஜ்ஞாபனம்.

(ஸ்ரீ உவே. வித்வான். வேதவ்யாஸபட்டர், திருமலை ஐயங்கார் ஸ்வாமி, கோயமுத்தூர்)

அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரஸாகரத்தில் விழுந்து நோவுபடும் சேதனர்களை உத்தரிப்பிக்க அவர்களுக்கு தத்வஹித புருஷார்த்தங்களை யுணர்த்துவதற்காக அபௌருஷேயமாய் நித்ய நிர்தோஷமான வேதமும், அதற்கு உபப்ரும்ஹணங்களான பகவத்கீதை, மநுஸ்ம்ருதி, ஸ்ரீவிஷ்ணுபுராணம், ப்ரஹ்மஸூத்ரம் முதலிய சிறந்த நூல்களும் அவதரித்தன. ஆனல் அவற்றில் முக்கியமாக உபதேசிக்கப்படும் பரம்பொருளானது ஸகலசேதநாசேதநவிலக்ஷணமானபடியாலும், வாசகமான ஸம்ஸ்க்ருத பாஷையானது தங்கக்கம்பிபோல் இழுத்தபடியெல்லாம் வருமதாகையாலும், இவற்றைக்கொண்டு அர்த்த நிர்ணயம் பண்ணும்போது மஹர்ஷிகளுக்குள்ளேயே பற்பல மதபேதங்கள் ஏற்பட்டுவிட்டனவென்றால் அர்வாசீனபண்டிதர்கள் அபிப்ராயபேதங்கொண்டு விவாதப்படுவதில் வியப்பொன்றுமில்லையன்றே? இப்படி வேதாந்தத்தில் பலமதங்கள் தோன்றி ஒவ்வொரு மதத்தைச் சார்ந்தவரும் தம்தம் கொள்கைக்கிணங்கும்படியாக ப்ரஹ்மஸூத்ரம், பகவத்கீதை முதலியவற்றுக்கு பாஷ்யமிட வாரம்பித்தார்கள்.

ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த ப்ரதிஷ்டாபகாசார்யரான ஸ்ரீராமாநுஜரும் தாம் ஆதரித்துப்போந்த விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தையொட்டி இங்ஙனே பாஷ்யமியற்றியுள்ளார். இவ்வாசிரியரிடத்தில் பக்ஷபாதமின்றியே நடுநிலையில் மனதை

வைத்து இவருடைய பாஷ்யங்களை ஊன்றி வாசிப்பவர்கள் - விவேக குசலர்களான பாச்சாத்ய பண்டிதர்களுங்கூட, ஸ்ரீராமாநுஜபாஷ்யமே யதார்த்தமான அர்த்தங்களைத் தெரிவிக்குமதென்று மிகவும் கொண்டாடி யெழுதியிருப்பதைக் காண்கிறோம். இதற்குக் காரணமென்ன வென்றால், தம்முடைய முயற்சியால் எவரும் அறிய முடியாத எம்பெருமானை "திவ்யம் ததாமி தே சக்ஷு:" என்றாப்போலே அப்பரமன் தானே தன்னை உள்ளபடி காட்டிக்கொடுக்கக் கண்டவர்களாய் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்களான ஆழ்வார்கள் காட்டியருளின வழியைப்பின்பற்றி யெழுதினதேயாகும்.

ஆகவே எம்பெருமானார் ஸ்ரீஸூக்திகளில் உபயவேதாந்தத்தின் பரிமளமும் கமழ வேண்டியதேயாயிற்று. ஆனால் தமிழ்வேதத்தைத்தாம் உபஜீவித்தமையை அவர் எங்கும் வ்யக்தமாகக் காட்டிற்றிலர், அதற்கு முக்கியகாரணமென்னவென்றால் ஸம்ஸ்க்ருத பாஷைதான் சிறந்ததென்றும், அந்த பாஷையிலுள்ள வேதந்தான் ப்ரமாணமென்றும் வைதிகர்கள் அக்காலத்தில் கருதியிருந்தபடியால், தேசபாஷையில் இயற்றப்பட்ட க்ரந்தத்தின் பெருமையை ஆஸேதுஹிமாசலம் எல்லாரும் இசையமாட்டார்களென்றும், ஆழ்வார்களின், அல்லது திவ்யப்ரபந்தங்களின் பெயரைச் சொன்னாலும் அஸூயாளுக்கள் ஸஹியாமல், அதே காரணமாக அவ்வர்த்தங்களில் பகை கொள்வர்களென்றும் ஸ்வாமி திருவுள்ளம்பற்றியதேயாகும். ஆகையால் மறைமுகமாகவே ஆழ்வார்களை ப்ரசம்ஸித்தும், அவர்கள் உபதேசித்த அரும்பெரும் அர்த்தங்களை தமது நூல்களில் பொதிய வைத்தும் போந்தார் ஸ்வாமி பாஷ்யகாரர். இப்படி இதரர்களுக்கு மறைக்கப்பட்ட வர்த்தங்களும் உபதேச பரம்பரையில் ஸச்சிஷ்யர்களுக்குக் கிடைத்தே வந்தன.

ஆனால் காலம் செல்லச்செல்ல, உபயவேதாந்தங்களையும் கசடறக்கற்று நிர்வஹிக்கவல்ல அதிகாரிகள் மெலிந்துபோக, இந்த ரஹஸ்யார்த்தங்களும் மறையத் தொடங்கின. இதன் பயனாக ஸ்ரீவைஷ்ணவர்களிலேயே பலர் எம்பெருமானார் ஸாதித்த க்ரந்தங்களெல்லாம் ஸம்ஸ்க்ருதத்திலேயே யிருப்பதை நோக்கி, திவ்யப்ரபந்தங்களில் அவருக்கிருந்த ஆதராதிசயத்தை அறிய மாட்டாதே, எம்பெருமானார் இவற்றை யுபஜீவிக்கவேயில்லையென்று எண்ணவும் ப்ரசாரம் செய்யவும் துணிந்துவிட்டார்கள். இதனால் ஆஸ்திக வுலகத்தில் பெரிய குழப்பம் ஏற்பட்டுவிட்டது.

இக்குழப்பத்தை அறவே ஒழிக்கத் திருவுள்ளம்கொண்டு, தற்காலம் "வேதாந்தத்வந்த்வ மார்க்கச்ரமவிமலமநா: ம்ருக்யதாம் ஈத்ருசோக்ய:" என்று நாற்றிசையும் போற்றப்படுபவரான ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி ஸ்வாமி ஒப்புயர்வற்ற இந்த க்ரந்தத்தை அருளிச் செய்திருக்கிறார். இதை ஸேவிப்பதனால், நமது பூர்வாசார்யர்கள் ஆழ்வார்களுக்கும், அவர்கள் ஸ்ரீஸூக்திகளுக்கும் எவ்வளவு மதிப்பு கொடுத்திருக்கிறார்களென்பதை நன்கறியலாம். மேலும் இந்த திவ்யக்ரந்தத்தில் இருக்கும் விஷயங்களை நன்கு ச்ரவணமநந நிதித்யாஸநம் செய்பவர்க்கு திவ்யப்ரபந்தங்கள், வேதங்கள், பகவத்கீதை, ப்ரஹ்ம ஸூத்ரம், ஆளவந்தார் முதலிய நம்பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள், ஆகிய இவையெல்லாவற்றினுடைய முறையும் ஒப்புயர்வற்ற விசேஷார்த்தங்களெல்லாம் எளிதாக ஹ்ருதயங்கமமாகி அபூர்வமான ஆநந்தவெள்ளம் உள்ளத்தில் கரைபுரண்டு பெருகுமென்பதில் ஐயமில்லை.

இப்படிக்கு,

**வே. திருமலைதாஸன்,**

பட்டர் திருமாளிகை கோயமுத்தூர், 25-9-'54.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் எழுதிய

# த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்

---

लक्ष्मीकान्तपदारविन्दयुगलैकान्ताप्रमेयाद्भुत-प्रेमाणं शठकोपसूरिमथ तत्सूक्तचभिभमग्नाशयम् ।
श्रीमद्भाष्यकृतं यतीन्द्रमथ तद्भूयोऽवतारायितं श्रीमद्रम्यवरोपयन्तृयमिनं संचिन्तये सन्ततम् ॥१॥

श्रीमद्वरवरयमिनः कृपया परया प्रबोधितानर्थान् ।
संदर्शयन् लिखामि द्रमिडोपनिषत्प्रभावसर्वस्वम् ॥२॥

प्राधान्येन प्रबन्धे त्विह यतिपतिना द्राविडाम्नायवाचां
साहाय्येनैव भाष्याद्यनघकृतिततिर्निर्मितेति प्रसिद्धा ।
वार्ता युक्त्या प्रमाणैरपि च सुविशदं संप्रतिष्ठाप्यते भोः
मात्सर्यं दूरतोऽस्यन् विबुधजन इदं वीक्ष्य मोमोत्तु धन्यः ॥३॥

दिव्यप्रबन्धेषु न वेदतौल्यं न चापि वेदादधिकत्वमस्ति ।
रामानुजार्योऽपि न तत्र रागीत्येवं लिखन्तः कुदृशो नमन्तु ॥४॥

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் மிகமிகச் சிறந்த ப்ரமாணமாகக் கொண்டாடப்பட்டுவரும் திவ்யப்ரபந்தம் வடமொழி வேதத்தோடொத்த தென்றும், அதிற்காட்டிலும் மிகச் சீரியதென்றும், ஸ்ரீபாஷ்யகாரரான பகவத்ராமாநுஜரும் இந்த திவ்யப்ரபந்தத்தைத் துணைகொண்டே ஸ்ரீபாஷ்யாதிகளை யருளிச் செய்தாரென்றும் பரமாப்ததமர்களான நம்முடைய பூர்வாசார்யர்கள் அருளிச் செய்யுமதில் விப்ரதிபத்தியுடையாரைத் தெளிவிக்கவேண்டி இந்நூல் விரிவாக எழுதப்படுகின்றது. எம்பெருமானார் ஸ்ரீஸூக்திகளை ஆழ்ந்து நோக்குவாரில்லை; இதரபாஷ்யகாரர்களுக்குத் தோன்றாத அர்த்தங்கள் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளில் பலநூறு காணப்படுகின்றன. அப்படி காணப்படுமிடங்களிலெல்லாம் ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டே அருளிச்செய்ததென்கிற நிர்த்தாரணத்தை பஹுப்ரமாணோபபத்திகளுடன் இந்நூல் ஸுஸ்பஷ்டமாகத் தந்திடும்.

---

# 1. பகவத் பாஷ்யகாரரும் திவ்யப்ரபந்தமும்

1. ஆழ்வார்களருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களெல்லாம் உலகில் மலினமாகி மறைந்திருந்தகாலத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் வெகு பரிச்ரமப்பட்டு நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்கரித்து திவ்யப்ரபந்தங்களையெல்லாம் பெற்று விசேஷ ப்ரசாரம் செய்தருளினதாக இதிஹாஸமுள்ளது. இது பின்புள்ளவர்கள் கற்பனையாக எழுதிவைத்ததென்று சொல்வதற்கிடமில்லாதபடி ஸ்ரீமத் வேதாந்த தேசிகாதிகளான முன்னோர்களும் ஸம்ப்ரதாயபரிசுத்தி குருபரம்பராஸாரம் முதலான ரஹஸ்யக்ரந்தங்களில் எழுதிவைத்துள்ளார்கள். ஸம்ப்ரதாய பரிசுத்தி வாக்யங்கள் வருமாறு—"வேதாந்த ஸம்ப்ரதாயத்துக்கு இந்த யுகாரம்பத்திலே ப்ரஹ்மநந்த்யாதிகளுக்குப் பின்பு நம்மாழ்வார் ப்ரவர்த்தகரானார். "प्राप्यं ज्ञानं ब्राह्मणात् क्षत्रियाद्वा वैश्याच्छूद्राद्वाऽपि नीचादभीक्ष्णम्" [ப்ராப்யம் ஜ்ஞாநம் ப்ராஹ்மணாத் க்ஷத்ரியாத் வா வைச்யாத் சூத்ராத்வாபி நீசாதபீக்ஷ்ணம்] இத்யாதி ப்ரமாண பலத்தாலே *மிக்க வேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி யென்னெஞ்சுள் நிறுத்தினான்* என்கிறது உபபந்நம். வேதாந்தார்த்த வைசத்ய ஹேதுவாகையாலே பாஷாந்தர முபஜீவ்யம்." என்று.

2. குருபரம்பராஸார ஸ்ரீஸூக்திகள் வருமாறு—"ஸர்வ லோகத்துக்கும் பரமாசார்யனான ஸர்வேச்வரன்.........பராங்குச பரகாலாதி ரூபத்தாலே அபிநவமாகவொரு தசாவதாரம்பண்ணி மேகங்கள் ஸமுத்ர ஜலத்தை வாங்கி ஸர்வோபஜீவ்யமான தண்ணீராக வுமிழுமாபோலே வேதார்த்தங்களில் வேண்டும் ஸாரதமாம்சத்தை ஸர்வர்க்கு மதிகரிக்கலான பாஷையாலே ஸங்க்ரஹித்துக் காட்டியும்."—(இன்னமும் அதிலேயே,) "எம்பெருமானார் திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார்; திருமாலையாண்டான் ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழிக்கு அர்த்தம் கேட்டருளினார்; ஆளவந்தாராழ்வார் ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழியுமோதி ஸ்தோத்ராதிகள் அருளிச் செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினார்." இத்யாதி. [இங்கே உதாஹரிக்கப்பட்ட இந்த ஸ்ரீஸூக்திகள் தேசிகனுடையவை—என்பதை ஞாபகத்திற் கொள்ளவேண்டும்.] ஆகவே, நம்முடைய ஸம்ப்ரதாய பஹிர்ப்பூதர்களான பிறர் எப்படி சொன்னாலும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்கள் இதில் அதிசங்கைகொள்ள அவகாசலேசமுமில்லை. "திவ்ய ப்ரபந்தங்களை வளர்த்தவர் எம்பெருமானார்" என்று அநாதியாக ப்ரபல ப்ரஸித்தி வந்திருக்கிறது. எம்பெருமானார்க்கு வாழிதிருநாமமருளிச்செய்தவர் மணவாளமாமுனிகள். (ஆர்த்திப்ரபந்தத்தில் அஃதுள்ளது.) அதில் "மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தோன் வாழியே" என்றுள்ளது. இவ்விஷயத்தை எம்பெருமானாருடைய ஸமகாலத்தவர்களான மஹாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளினாலும் நிலைநாட்டுகிறோமிங்கு. பலர்க்குமுள்ள பலவித சங்கைகளையும் வேரறத் தொலைப்போம் இந்நூல் முழுவதினாலும்.

3. ஆழ்வார்களருளிச் செய்த ஸகல திவ்யப்பிரபந்தங்களுக்கும் தனியன்கள் அநாதிகாலமாகவே அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. சில ப்ரபந்தங்

களுக்கு ஒன்றிரண்டு தனியன்களும் சில பிரபந்தங்களுக்கு ஐந்தாறு தனியன்களும் அமைந்திருக்கின்றன. நம்மாழ்வாரருளிய திருவாய்மொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத்தனியன் ஒன்றும், தமிழ்த் தனியன்கள் ஐந்துமாக ஆறு தனியன்கள் உலகமெங்கும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. *மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங்கூறவவதரித்த திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத் தனியன் ஒன்றும் தமிழ்த் தனியன்கள் மூன்றுமாக நான்கு தனியன்கள் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. பெரும்பாலும் தனியன்களில் அந்தந்த திவ்யப்பிரபந்தங்களின் பெருமை, அவற்றை யருளிச் செய்தவர்களின் பெருமை, அவர்களவதரித்த தலத்தின் பெருமை முதலியன சொல்லப்படுகின்றன. திருவாய்மொழித் தனியன்களில் ஒன்றும், பெரிய திருமொழித் தனியன்களில் ஒன்றும் வெகு விலக்ஷணமாக அவதரித்திருக்கின்றன.

4. திருவாய்மொழித் தனியன்களில் (அநந்தாழ்வான்)

"ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமாநுச முனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—
ஆய்ந்த பெருஞ் சீரார் சடகோபன் செந்தமிழ்வேதந் தரிக்கும் பேராத வுள்ளம் பெற."

என்கிற தனியனது எம்பெருமானார் திருவடிகளிலே பண்ணுகிற வொரு பிரார்த்தனையாக அமைந்திருக்கிறது. இந்த வெண்பாவின் பொருளாவது, மிகச்சிறந்த கல்யாணகுணசாலியான நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியாயிரத்தை நன்கு தரித்துக்கொள்ளவல்ல நெஞ்சுதன்னைப் பெறுவதற்காக பெரும்புகழ்படைத்த எம்பெருமானாருடைய திருவடித் தாமரைகளை வணங்குகின்றேனென்பதாம். ஸ்வாமிந்! எம்பெருமானாரே! திருவாய்மொழியாயிரத்தையும் மறவாமல் தரிக்கத்தக்க ஸாமர்த்தியத்தை வரப்ரஸாதமாகத் தந்தருளவேணுமென்று அவர்தம்மையே நோக்கிப் பிரார்த்திக்கிறபடி.

5. பெரிய திருமொழித் தனியன்களுள்,

"எங்கள் கதியே யிராமாநுச முனியே! சங்கை கெடுத்தாண்ட தவராசா!—பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும் தங்குமனம் நீயெனக்குத் தா."

என்கிற விந்தத் தனியனும் அதேரீதியாக அமைந்திருக்கின்றது. இது எம்பெருமானாரை முன்னிலைப்படுத்தியே கூறியுள்ளது. திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரியதிருமொழி யாயிரத்தையும் தரிக்கவல்ல மனத்தைத் தந்தருள வேணுமென்று எம்பெருமானாரை நோக்கிப் பிரார்த்தித்திருக்கிறது இதில்.

6. ஆக இவ்விரண்டு தனியன்களையும் விசேஷித்து மனதில் மனனம் செய்யுங்கால் தனிச்சிறப்பு வாய்ந்தவொரு பரமானந்தம் விளைவதோடு எம்பெருமானாருடைய ஒப்பற்றவொரு பெருமையும் அறியலாகிறது. பிரபந்தங்களைத் தரிக்கும்படியான நெஞ்சைத் தந்தருள வேணுமென்கிற பிரார்த்தனையை அந்தந்த ஆழ்வார்களை நோக்கியே செய்திருக்கலாம்; அவர்களுக்கு

அந்தரங்கர்களான மதுரகவிகள் ஸ்ரீமந்நாத முனிகள் போல்வாரை நோக்கியாவது செய்திருக்கலாம்: பரமோதாரனான எம்பெருமானை நோக்கிச் செய்திருக்கலாம். ஸகலவித ஸம்பத்துக்களையும் அளிக்கவல்ல பெரியபிராட்டியாரை நோக்கிச் செய்திருக்கலாம். [இராமாநுச நூற்றந்தாதியின் ஈற்றுப் பாசுரத்தோடு மிகப்பொருந்துமிது.] இப்படிப்பட்ட வழிகளை விட்டு எம்பெருமானாரை நோக்கி இந்தப் பிரார்த்தனை செய்திருப்பது எதனாலென்று விமர்சிக்க வேண்டியது ஆவசியகமன்றோ? புதிதாக நாம் என்ன விமர்சிக்கப் போகிறோம்? அக்காலத்தில் ஆழ்வாரருளிச் செயல்களெல்லாம் எம்பெருமானாரிட்ட வழக்காயிருந்தன வென்று இதனால் நிஸ்ஸந்தேஹமாக அறியக் கிடக்கின்றது. வெகு ச்ரமப்பட்டு அதிகரித்துப் பலகால் உருச்சொல்லித் தரிக்க வேண்டிய இந்த மஹத்தான ப்ரஹ்மவித்யையை ஸ்வாமி யெம்பெருமானாரொருவரே *கலியுங்கெடுங் கண்டுகொண்மினென்று ஆசாஸித்த ஆழ்வாருடைய பரமக்ருபையினாலும், *ஆமுதல்வனிவனென்று அநுக்ரஹித்த ஆளவந்தாருடைய அற்புதமான அநுக்ரஹாதிசயத்தினாலும் அநாயாஸமாக க்ரஹித்து ஓரிடத்திலும் ஒரு விதமான ஸந்தேஹமும் விஸ்மரணமுமின்றிக்கே தரித்தருளியிருந்தாரென்பது ஸுஸ்பஷ்டமாகின்றது. இல்லையேல் இந்தத் தனியன்கள் இவ்வண்ணமாக அவதரித்திருக்க அவகாசமில்லையன்றோ.

7. அன்றியும், *எய்ந்த பெருங்கீர்த்தி* என்கிற தனியனுக்கு அடுத்ததான "வான் திகழுஞ் சோலை" என்று தொடங்குந் தனியனில் "தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. திருவாய்மொழியைப்பெற்ற தாயார் நம்மாழ்வாரென்றும், வளர்த்த தாயார் எம்பெருமானாரென்றும் அக்காலத்திலிருந்த ஆப்ததமர்களான ஆசிரியர்கள் அருளிச் செய்தார்களென்றால் திவ்யப்பிரபந்தங்களிலே எம்பெருமானார் எவ்வளவு ஈடுபாடு கொண்டவராக இருக்கவேண்டும்! திவ்யப்ரபந்தங்களைக்கற்க ருசியில்லாமலிருந்தவர்களை வலிய அழைத்துக் கற்க நியமித்தருளினர். வியாக்கியானங்கள் அவதரிக்க நியமனம் தந்தருளினர். ஆங்காங்கு அருமை பெருமை வாய்ந்த நிர்வாஹங்களை வெளியிட்டருளினர். திவ்ய தேசங்களில் அருளிச் செயல் பிரசாரங்களை ப்ரபலப்படுத்தியருளினர். இவ்வண்ணமாகச் செய்தருளின செயல்களைக்கொண்டே "மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்று பணித்தார்கள். அக்காலத்தில் எம்பெருமானார் அவ்வளவு ச்ரத்தை கொண்டருளியிராவிடில் திவ்யப்ரபந்தங்கள் ஸ்ரீமந்நாத முனிகளின் காலத்திற்கு முன்னேயிருந்த விதமாகவே லோபமடைந்திருக்கும். அப்படியாகாத படிக்கு ஸ்வாமி யெம்பெருமானார் செய்தருளின க்ஷேமக்காப்பு வாசாமகோசரம். "ஸர்வதேசதசாகாலேஷ்வ...ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்...திகந்தவ்யாபிநீ பூயாத் ஸாஹி லோகஹிதைஷிணீ" என்கிற ச்லோகத்தை நாடு நகரமெங்கும் திவ்யப்ரபந்த ஸேவா காலங்களிலேயே அநுஸந்தித்து வருவதனால் அந்த ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையானது திவ்யப்பிரபந்த விஷயமேயல்லது வேறு விஷயமன்று என்பது நன்கு உணரலாகிறது.

8. உலகில் பிறந்தவர்கள் போதைப்போக்குவதற்குப் பல வழிகள் இருந்தாலும் *கார்கலந்தமேனியான் கைகலந்தவாழியான், பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான்—சீர்கலந்த சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையினாழ்துயரை, என்னினைந்து போக்குவர் இப்போது* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி பகவத் குணாநுபவத்தினால் போது போக்குவதுதான் மிகச்சிறந்ததென்று அநுபவரஸிகர்கள் பலர் கைகண்டிருக்கிறார்கள். நாஸ்திகர்களாயிருப்பவர்களுங்கூடச் சில ஸமயங்களில் பக்தி தலையெடுக்கப்பெற்று பகவத் குணங்களைப்பற்றிய புத்தகங்களை வாசிக்க விரும்புகிறார்களென்பதை நாம் கண்டு வருகிறோம். அப்படி வாசிக்கவிரும்பும் புத்தகங்களில் ஆழ்வார்களருளிச்செய்த திவ்யப்பிரபந்தங்களே தலையான ஸ்தானத்தில் நிற்கின்றன. பொருள் தெரியாமற் போனாலும் பாசுரங்களைப் படிக்கும்போதே அற்புதமான ஆத்மானந்த முண்டாகின்றதென்று பலர் கூறக் கேட்டிருக்கிறோம். பொருளும் தெரிந்து அநுபவிக்க நேர்ந்தால் விலக்ஷணமான ஆனந்தவெள்ளம் ஆத்மாவில் பொங்கி அலையெறியுமென்பதில் ஸந்தேஹமில்லை.

9. வேத வேதாந்தங்கள் முதலிய ஸகல சாஸ்த்ரங்களிலும் கரைகண்டவர்களான நம் பூருவாசாரியர்களும்—[ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் ஸ்ரீராமாநுஜர் கூரத்தாழ்வான் பட்டர் முதலான பேராசியர்களுங்கூட] இத்திவ்யப்பிரபந்தங்களிலேயே போதைப் போக்கினார்களென்றால் இவற்றின் இனிமை எப்படிப்பட்டதாயிருக்கவேணும்!

10. கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் கோவர்த்தனம் (ஆத்ய) ரங்காசார்யர்ஸ்வாமி வடதேசத்தில் வியாபகராக எழுந்தருளியிருந்து ப்ருந்தாவனத்தில் திவ்யதேச ப்ரதிஷ்டை செய்தருளின காலத்தில் ஸுதர்சநாசார்ய சாஸ்த்ரி என்றொரு உத்தராதிப்ராஹ்மணர் அவருடைய திருவடிகளில் ஆச்ரயித்திருந்தார். அவர் சதுச் சாஸ்த்ர பண்டிதர். கோவர்த்தனம் ஸ்வாமிக்கு தக்ஷிண பாஹுவாக விளங்கினவர். அவர் கோவர்த்தனம் ஸ்வாமி ஸன்னிதியில் திருவாய்மொழி வியாக்கியானமாகிய பகவத்விஷயத்தைக் காலக்ஷேபஞ் செய்தாராம். அப்போது அவருடைய உள்ளத்தில் தோன்றியதை அவரே பல ச்லோகங்களாக இயற்றி வெளியிட்டிருக்கிறார். அந்த ச்லோகங்களின் தாத்பர்யஸாரம் கேண்மின்;—

"இவ்வுலகில் எண்ணிறந்த சாஸ்த்ரங்கள் தோன்றியிருந்தாலும் ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தங்களுக்குச் சமானமான சாஸ்த்ரம் எதுவுமே கிடையாது. அவற்றுக்கு வியாக்யானங்களை யருளிச்செய்த ஆசாரியர்களே உண்மையான ப்ரஹ்மவித்துக்கள். அப்படிப்பட்ட திவ்யப்பிரபந்தங்களையும் வியாக்கியானங்களையும் அதிகரிக்க யோக்யமான ஜன்மமே ஜன்மம். ஐயோ நான் தமிழ்ப்பாஷைக்கு வைதேசிகனாய் யமுனைக்கரையிலே பிறந்து கெட்டேனே! ஆனாலும் அந்த மஹார்த்தங்களை ஒருவாறு கேட்கும் பாக்கியம் பெற்றேனே யென்று மகிழ்கிறேன். ஸ்ரீமந் நாராயணா! கோவர்த்தனம் ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீராமாநுஜ ஸம்பந்தம்பெற்ற வெனக்கு

மோக்ஷப்ராப்தியில் ஸந்தேஹ லேசமும் கிடையாது. ஆனாலும் ஸ்ரீமந் நாராயணா! எனக்கு நீ இப்பிறப்பில் மோக்ஷம் கொடுக்கலாகாதென்று உன் திருவடிகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு பிரார்த்திக்கிறேன். என்னை நீ தமிழ் நாட்டில் பிறப்பித்து நாலாயிர அத்யாபகன் என்ற விருதைப் பெறுவித்து ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளை வாயாரக் கதறும்படி பண்ணி அப்படி பத்தெட்டு ஜன்மங்கள் கொடுத்து, பிறகு தான் என்னை நீ திருவடி சேர்த்துக் கொள்ளவேணும். இப்படியல்லாமல், நாராயணா! எனக்கு நீ இப்போதே மோக்ஷம் கொடுத்து விட்டாயாகில் *நச புநராவர்த்ததே நச புநராவர்த்ததே* என்கிற உபநிஷத்தையும் *அநாவ்ருத்திச் சப்தாதநாவ்ருத்திச் சப்தாத்* என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தையும் கிழித் தெறிந்துவிட்டு இந்நிலத்திற்குத் திரும்பிவந்து தாம்ரபர்ணீ தீரத்திலும் காவேரிக்கரையிலும் ஸ்ரீபெரும்பூதூர் ப்ராந்தத்திலும் பிறவி எடுத்தே தீருவேன்". என்று

இப்படிப்பட்ட நிர்வேதத்தைப் பொதிய வைத்துப் பல ச்லோகங்கள் இயற்றியிருக்கிறார் அந்த ஸுதர்சனாசார்ய பண்டிதர்.

11. அவரோடு கூடவிருந்த மற்றொரு மஹாபண்டிதர் எழுதி யிருப்பதாவது—*ஆஸாமஹோ சரணரேணுஜுஷாமஹம் ஸ்யாம் ப்ருந்தாவனே கிமபி குல்ம லதௌஷதீநாம், யா துஸ்த்யஜம் ஸ்வஜநம் ஆர்ய பதஞ்ச ஹித்வா பேஜுர் முகுந்தபதவீம் ச்ருதிபிர் விம்ருக்யாம்* [வேதங்களாலே தேடப்படு மதான க்ருஷ்ணன் போனவழியை யாவர் சில பெண்கள் ஸ்வஜனங்களையும் அதிக்ரமித்துப் பின் தொடர்ந்தார்களோ அவர்களுடைய பாததூளியை பஜிக்கப்பாங்காக ப்ருந்தாவனத்திலுள்ள சிறு செடிகள் கொடிகள் ஓஷதிகள் முதலானவற்றில் ஏதேனுமொன்றாகப் பிறக்கப்பெறவேணும்] என்றும், *அஹம் கதம்போ பூயாஸம் குந்தோ வா யமுநாதடே* [யமுனைக்கரையில் கண்ணபிரான் திருவடிகளால் மிதித்தேறின கடம்ப மரமாகவோ குருந்தமரமாகவோ பிறக்கப் பெறவேணும்] என்றும் முன்னே உத்தவர் முதலானோர் ப்ரார்த்தித்ததாகச் சொல்லுகிறார்கள்; அந்த ஜன்மங்களெல்லாம் எதுக்கு? திவ்யப்ரபந்தங்களை யதிகரிக்கப் பாங்கான ஜன்மமன்றோ ஜன்மம்—என்றும்.

12. ஆகவிப்படி வைதேசிகர்களுங்கூட ஈடுபடும்படியான பெருமை வாய்ந்த திவ்யப்ரபந்தங்களின் அரிய பெரிய பொருள்களை ஆனந்தமாக அநுபவிக்க அநுகூலமான ஜன்மம் பெற்று வைத்து, ஜன்மாந்தரஸஹஸ்ர நற்றவப் பயனாக நமக்கு இந்த ஸ்ரீவைஷ்ணவ ஸந்ததியில் பிறவி வாய்த்ததென்று உகந்து அருளிச்செயலை யதிகரித்து வாழ்ந்து போக பாக்யமில்லாமற் போனாலும் அதில் அபகர்ஷ புத்தியாவது இல்லாமலிருக்கலாம். அத்வேஷமும் நன்மைக்கு நிதானமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தோ! திவ்யப்ரபந்தமே ஜீவநமாகவிருந்த மஹாபுருஷர்களின் குலத்திலே ஜனித்து திவ்யப்ரபந்தத்திலே அப்ரதிபத்தியும் விப்ரதிபத்தியும் உண்டாகப்பெறுமவர்கள் न निरसनीयाः, अपितु शोचनीयाः ; अस्तु ॥ திவ்யப்ரபந்தங்களிலே தேசிகன் கொண்டிருந்த கௌரவத்தைப்பற்றிச் சுருக்கமாகத் தெரிவிப்போம்.

## —2. தேசிகனும் திவ்யப்ரபந்தமும்—

13. ஆழ்வார்களுடைய அருளிச்செயல்கள் தமிழ்ப்பாஷையிலே அவதரித்திருக்கின்றமையால் வடமொழியில் பரிசயமில்லாதவர்கள் மாத்திரமே ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களைக் கொண்டு போதுபோக்கவேணுமென்றும், ஸம்ஸ்க்ருத வித்வான்களாகவுள்ளவர்கள் உபநிஷத்துக்கள் முதலானவற்றைக் கொண்டே போதுபோக்கவேணுமென்றும் சிலர் வரம்பிட்டுப் பேசுவர்கள். இவ்விஷயத்தில் ஸ்ரீதேசிகனுடைய திருவுள்ளம் எப்படிப்பட்டது என்பதைப் பற்றி இங்குச் சிறிது ஆராய்வோம்.

14. வடமொழிப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்தவர் நம்முடைய தேசிகன். இவரைப்போன்ற ஸம்ஸ்க்ருத வித்வான் *ந பூதோ ந பவிஷ்யதி* என்றால் மிகையாகாது. ஸம்ஸ்க்ருத வேதாந்தத்திற்கு உபப்ரும்ஹணங்களாகவுள்ள இதிஹாஸபுராணாதிகள் இவர்க்கு வாசோவிதேயங்கள். ஸஹகாரிஸாமக்ரிகளான ந்யாய மீமாம்ஸைகளும் இவர் திருவுள்ளத்தைப் பின்செல்லுமவை. இங்ஙனே திருநாவீறுடைய பிரானாகிய விவர் பேசியிருக்கிற ஒரு பாசுரத்தைக் காணுங்கோள் :—

"பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார்தண் பொருநல்வருங் குருகேசன் விட்டுசித்தன்
துய்ய குலசேகரன் நம்பாணநாதன் தொண்டரடிப்பொடி மழிசைவந்தசோதி
வையமெலாம் மறைவிளங்க வாள்வேலேந்தும் மங்கையர்கோனென்றிவர்கள் மகிழ்ந்துபாடும்
செய்யதமிழ் மாலைகள் நாம்தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே."

15. இது தேசிகப்பிரபந்தங்களுள் ஒன்றான அதிகாரஸங்க்ரஹத்தின் முதற் செய்யுள். ஸம்ஸ்க்ருதவேத வேதாந்தங்களில் எவ்வளவு பரிச்ரமப்பட்டாலும் கலங்கின ஞானமே அவற்றால் உண்டாகுமென்றும், ஆழ்வாரருளிச் செயல்களைக் கொண்டுதான் தெளிவு பெறுத்திக் கொள்ளவேண்டுமென்றும் இதனால் காட்டினாராயிற்று. இங்கு ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களைப் பற்றிச் சொல்லுகையில் *தெளியாத மறைநிலங்கள்* என்று துணிந்து அருளிச் செய்தமை நோக்கத்தக்கது.

16. இதிஹாஸ புராணாதிகளைக் கொண்டு உபநிஷத்துக்களின் தாற்பரியத்தை அறிவதைக்காட்டிலும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு அறிவதே மிகச் சிறந்தது என்கிற திருவுள்ளத்தை த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளியிலும் நிரூபித்தருளியுள்ளார்; அதில் நான்காவது ச்லோகத்தில் *[யத் தத் க்ருத்யம் ச்ருதீநாம் முநிகணவிஹிதைஸ் ஸேதிஹாஸை: புராணை: தத்ராஸௌ ஸத்வஸிம்நச் சடமதநமுநேஸ் ஸம்ஹிதா ஸார்வபௌமீ]* என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. (இங்கு அடியேனுடைய வியாக்கியானம் வருமாறு:) வேதங்களுக்கு உபப்ரும்ஹணமாக மஹர்ஷிகள் இயற்றிய இதிஹாஸ புராணங்களைக்கொண்டு நாம் யாதொரு உபயோகமடைகின்றோமோ அந்தவுபயோகமே திருவாய்மொழியிலுமுள்ளது. ஆனால் அந்தப் புராணாதிகள் ராஜஸங்களென்றும் தாமஸங்களென்றும் த்யாஜ்யங்களாகவு மாகின்றன; இங்கு அப்படியில்லை. ஸத்வகுணத்திற்கு எல்லைநிலமான ஆழ்வாராலே அருளிச்செய்யப்பட்டதாகை

யாலே கேவலம் ஸாத்விகமாயிருக்கின்ற இத்திருவாய்மொழியாகிற த்ராவிட ப்ரஹ்மஸம்ஹிதையானது வேதோபப்ரும்ஹணங்களில் தலைமைபெற்றதாகும்.

17. ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் மாதாபிதாயுவதய: என்கிற ச்லோகத்திலே ஆழ்வாரை இறைஞ்சினர். அங்கு ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸ்வாமி தேசிகன் அருளிச்செய்துள்ள அவதாரிகா ஸ்ரீஸூக்திகள் ஆஸ்திகர்களுக்குக் கண்டபாடம் செய்யத்தக்கவை ;—

" अथ पराशरप्रबन्धादपि वेदान्तरहस्यवैशद्यातिशयहेतुभूतैः सद्यः परमात्मनि चित्तरञ्जकतमैः सर्वोपजीव्यैः उपबृंहणैः मधुरकविप्रभृति संप्रदायपरम्परया नाथमुनेरप्युपकर्तारं कालविप्रकर्षेऽपि परमपुरुषसंकल्पात् कदाचित् प्रादुर्भूय साक्षादपि " सर्वोपनिषत्सारोपदेष्टारं पराङ्कुशमुनिं * मातापिताभ्रातेत्याद्युपनिषत्प्रसिद्धभगवत्स्वभावदृष्ट्या प्रणमति — मातेति ॥

என்பவை அங்குள்ள ஸ்ரீஸூக்திகள். பாராசரமஹர்ஷிபணித்த ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற்காட்டிலும் வேதாந்தரஹஸ்யார்த்தங்களை மிகத்தெளிவாகக் காட்டுகின்றவை ஆழ்வாரருளிச் செயல்கள் என்பது இங்கு ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ள விஷயம்.

18. யதிராஜஸப்ததியில் நம்மாழ்வாரைப்பற்றி தேசிகன் ஒருச்லோகமருளிச் செய்கிறார் காண்மின் ; [ [ʸ]யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ வகுளாமோதவாஸிதம், ச்ருதீநாம் விச்ரமாயாலம் சடாரிம் தமுபாஸ்மஹே]* என்பதாமது. இதில் பிற்பாதியின் தாற்பரியம் யாதெனில் ; ஸம்ஸ்க்ருத வேதங்கள் தத்வஹித புருஷார்த்தங்களைத் தெளிய வெளியிடவேணுமென்று மிகவும் ச்ரமப்பட்டன ; ஆனால் ச்ரமத்திற்குத் தகுதியான பலன் கிடைக்கவில்லை. 'அந்தோ ! நமக்கு ச்ரமமே மிக்கதே !' என்று அந்த வேதங்கள் விடாய்த்தனவாம் ; அந்த நிலைமையில் மகிழ்மாலை மார்பினரான ஆழ்வார் திருவவதரித்து ஈரச்சொற்களாலே வேதங்களுக்கு உத்தேச்யமான பொருள்களைத் தெளிய வெளியிட்டமையால், வேதங்களுக்கு உண்டாயிருந்த விடாய் தொலைந்ததாம் என்பதே. அன்றி, 'பகவத் ஸ்வரூபரூபகுண விபூதிகளை ப்ரதிபாதிக்கும் விஷயத்தில் வேதங்களே ! நீங்கள் என் வீணாக ச்ரமப்படுகின்றீர்கள் ? அந்தத் தொழிலை நான் வஹிக்கக்கடவேன் ; நீங்கள் இளைப்பாறலாம்' என்று சொல்லி ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களை அருளிச் செய்வாராயினர் என்பதும் கருத்தாகும். மிகவும் கம்பீரமான தேசிக திவ்ய ஸூக்திகளிலே இன்னமும் எவ்வளவோ விசேஷதாத்பர்யங்களை ஊஹித்துணரலாம்.

19. இனி, பாதுகாஸஹஸ்ரத்தில் ஆழ்வார் விஷயமாக அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகளை ஆராயப்புகுந்தாலோ ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை அநுஸந்தித்தவாயினால் மற்றொரு ஸரஸ்வதியைப் பேசவும் கூசவேண்டும்படி அருளிச் செயல்களுக்கு அத்தனை பெருமை அருளிச் செய்யப்பட்டுள்ளது. அதிலிருந்து ஒன்றிரண்டு ச்லோகங்களை மாத்திரமே இங்கு எடுத்துக் காட்டுகின்றேன். " विन्ध्यस्तम्भाद्विहतगतेर्विष्वगाचान्तसिन्धोः कुम्भीसूनोः असुरकबलग्रासिनः स्वैरभाषा ।

नित्यं जाता शठरिपुतनोः निष्पतन्ती मुखात्ते प्राचीनानां श्रुतिपरिषदां पादुके पूर्वगण्या ॥" (29) என்கிற ச்லோகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நித்யாநுஸந்தேயம். பலவகைப் பெருமைகள் பொருந்திய அகஸ்த்ய முனிவரிடத்தினின்று முண்டானதாயினு மித் தமிழ்ப்பாஷை நம்மாழ்வாரிடமிருந்து திருவாய்மொழியாக அவதரித்ததாகி ஸம்ஸ்க்ருத வேதத்திற்காட்டிலும் சிறப்புப்பெற்றதாயிற்று—என்று இதில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. "सर्वोपजीव्यतया, द्वारान्तरानपेक्षणेन भगवत्स्वरूपप्रकाशकत्वाच्च द्राविडब्रह्मसंहिता पुरातनश्रुत्यपेक्षयाऽपि श्रेष्ठासीदिति यावत्; अतएवोत्सवादिषु भगवतोऽग्रभागे द्रमिडोपनिषदध्ययनम्" என்றார்கள் வியாக்கியானகாரர்கள். "द्रमिडोपनिषन्निवेशशून्यान्" (22) என்கிற ச்லோகத்தில், திவ்யப்ரபந்தாத்யயநமோ, ஆழ்வாருடைய ஸ்ரீசடகோபனென்கிற திருநாமத்தை வஹிக்கிற பகவத் பாதுகாதாரணமோ இல்லாதவர்களுக்கு பகவத்க்ருபை கிடைக்கமாட்டாதென்று [அதாவது மோக்ஷம் துர்லபமென்று] உண்மையை வெளியிட்டருளினார்.

20. திவ்யப்ரந்தங்களின் பெருமை தேசிகனுடைய திருவுள்ளத்தில் இடைவிடாது குடிகொண்டிருந்ததென்று நன்கு புலப்படுகிறது. அம்ருதாஸ்வாதிநீ யென்னும் தேசிகப்ரபந்தத்திலுள்ள "அந்தமிலாப் பேரின்ப மருந்தவேட்கும் அடியோமை யறிவுடனே யென்றுங்காத்து, முந்தைவினை நிரைவழியிலொழுகாதெம்மை முன்னிலையாந் தேசிகர்தம் முன்னே சேர்த்து, மந்திரமும் மந்திரத்தின் வழியுங்காட்டி வழிப்படுத்தி வானேற்றி யடிமை கொள்ளத், தந்தையென நின்றதனித்திருமால்தாளில் தலைவைத்தோஞ் சடகோபனருளினாலே" (28) என்ற ஒரு பாசுரமே போதும். ஆங்காங்கு ஊடே அருளிச்செய்துள்ள (1) "அணிகுருகை நகர் முனிவர் நாவுக்கு அமைந்தன......விடலரிய பெரிய பெருமாள் மெய்ப்பதங்களே" (2) "குருகையில் வந்து கொழுப்படக்கிய குலபதிதந்த குறிப்பில்வைத்தனர்" இத்யாதி பாசுரங்கள் ஆழ்வாரிடத்திலும் அருளிச்செயல்களிடத்திலுமுள்ள பக்தியே வடிவெடுத்து தேசிகனாகத் திருவவதரித்ததோ! என்னலாம்படி யிருக்கிறதேயன்றி வேறொன்றுஞ் சொல்லப்போகாது. ஸ்வாமி தம்மை விசேஷித்துக் கொள்ளுமிடத்தும் "சந்தமிகு தமிழ் மறையோன் தூப்புல் தோன்றும் வேதாந்தகுரு" என்று த்ராவிட ப்ரஹ்மஸம்ஹிதைக்கே தாம் இட்டுப் பிறந்தவராக அருளிச் செய்கிறார். ஸ்வாமியை வாழ்த்துகின்றவர்களும் "செந்தமிழ்த் தூப்புல் திருவேங்கடவன் வாழியே" என்கிறார்கள். ஸ்வாமி தாம் மங்களாசாஸனம் செய்தருளுவதும் "தொண்டைமண்டலவேதியர் வாழவே தூய தென் மறை வல்லவர் வாழவே" என்று தமிழ்வேதமறிந்த பகவர்களுக்கே.

21. இப்படிப்பட்ட அபிநிவேசம் தேசிகனுக்கு உண்டானது, இரண்டு காரணத்தினால். ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் முதலான பூருவாசாரியர்களெல்லாரும் ஒருமிடறாக ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளையே சேமநிதியாகக் கொண்டிருந்தார்களென்பது ஒரு காரணம். அவற்றில் தாம் கண்ட ஒப்புயர்வற்ற குணாதிசயங்கள் மற்றொரு காரணம்.

* ப்ரியா து ஸீதா ராமஸ்ய தாரா: பித்ருக்ருதா இதி, குணைத் ரூபகுணைச் சாபி ப்ரீதிர் பூயோப்யவர்த்தத" என்னுமா போலே.

22. இப்படிப்பட்டமஹாசார்யர் பக்கலில் நாம் ஹார்த்தமான பக்தியை வஹிப்பதற்கு லக்ஷணம் அருளிச் செயல்களை வரியடைவே கற்றுவல்லாராவதே. மற்றும் பலவகைகளாலும் நாம் ஆசார்யபக்தியைக் காட்டலாமாயினும் இவ்வழியிலே காட்டுவது மிகச் சிறந்ததாகும். (2)

---

## 3. திவ்யப்ரபந்தத்தை வேதமும் வேதோபப்ரும்ஹணங்களும் கொண்டாடியிருப்பது.

23. அனந்தங்களான வேதங்களிற் காட்டிலும் திருவாய்மொழியே மிகச் சிறந்ததென்பதை வடமொழிவேதமே பலவிடங்களில் வெளியிட்டிருக்கின்றது. தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணத்தில் (காடகம்) காடகமென்கிற பகுதி ஸகல வைதிகர்களும் மிக முக்கியமாக ஓதி வருவது. இதில் முதல் ப்ரச்நத்தில் * भरद्वाजो ह त्रिभिरायुर्भिर्ब्रह्मचर्यमुवास—பரத்வாஜோ ஹ த்ரிபிராயுர்பிர் ப்ரஹ்மசர்யமுவாஸ* என்று தொடங்கி ஓர் உபாக்கியானம் சொல்லிற்று; அதாவது, பரத்வாஜரென்னும் மஹர்ஷி ஸகல வேதங்களையும் ஓதிமுடிக்க வேணுமென்ற முயற்சிகொண்டு அதற்குரிய ஆயுளைப் பெறுவதற்காக இந்திரனைக் குறித்து உபாஸனை செய்து அவனை ப்ரஸந்நனாக்கி ஒரு புருஷாயுஸ்ஸுக்கு நூறாண்டு விழுக்காடு முந்நூறாண்டு கொண்ட மூன்று ஆயுஸ்ஸுக்களை வரம்பெற்று அந்த வாழ்நாளில் குருகுல வாஸஞ்செய்து வேதமோதி வந்தார். முந்நூறாண்டும் முடிந்து ஜீர்ணசரீரராய்க் கிழத்தனமடைந்து ஆஸந்நதசாபந்நராய்ப்படுத்திருக்கும் அம்முனிவரை இந்திரன் வந்தணுகி 'ஓ பரத்வாஜரே! மீண்டும் ஒரு நூறாண்டு கொண்ட ஆயுஸ்ஸை உமக்கு நான் கொடுப்பேனாகில் அந்த வாழ்நாளை நீர் எவ்விதமாகக்கழிக்க உத்தேசிக்கிறீர்? என்று கேட்டான். அதற்கு அவர் 'அந்தஆயுஸ்ஸிலும் வேதமேயோதக்கடவேன்' என்றார்.

24. அதைக்கேட்ட இந்திரன் 'ஓ இவர் ஸகல வேதங்களையும் ஓதிவிட வேணுமென விரும்புகிறார் போலும்' என்று நினைத்து, அது ஒருநாளும் முடியாத காரியமென்பதைத் தெரிவிப்பதற்காக ருக் யஜுஸ் ஸாமங்களாகிற மூன்று வேதங்களையும் தனது யோகஸாமர்த்தியத்தினால் மூன்று மலைகளாக்கி இதற்குமுன் அம்முனிவர் கண்டறியாத மலைவடிவமான அந்த வேதங்களை அவருக்குக் காட்டினான். பிறகு அவற்றுள் ஒவ்வொரு மலையில் நின்றும் ஒவ்வொரு முஷ்டியால் தூள்களை யெடுத்துக் காட்டி ஓ பரத்வாஜரே! இம் மூன்று மலைகளும் வேதங்களே; அதில் ஒவ்வொருதுகளும் ஒவ்வொரு வேதமாதலால் வேதங்களுக்கு எல்லையேயில்லை யென்றான். இதுகேட்ட முனிவர் இப்படியாகில் இன்றுவரை நாம் ஓதினவேதம் எவ்வளவாயிருக்கும்' என்று சிந்தித்தமையை அறிந்த இந்திரன் 'முனிவரே! இம்மூன்று முஷ்டிகளில் அடங்கியுள்ள வேதராசியையே நீர் முந்நூறாண்டுகளில் ஓதினீர்; இதோ மலைமலையாகக் கிடக்கும் வேதங்கள் உம்மால் ஓதப்படவில்லை; ஆகவே

ஸகல வேதங்களையும் ஓதி முடிப்பதென்பது ஒருநாளும் மாளாத காரியமென்று கொள்ளீர்' என்றான்.

25. இதற்குமேல் சொல்லப்பட்டிருக்கிற விஷயமே முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது; இந்திரனுடைய வார்த்தையினால் பரத்வாஜமுனிவர் மிகவும் வருத்தமுற்றிருக்க, அப்போது இந்திரன் அவர்க்குத் திருவாய்மொழியையுபதேசித்து 'ஸகலவித்யா ஸர்வஸ்வமும் இதுவே காணீர்' என்று சொல்ல, அவரும் திருவாய்மொழியையோதி முக்தி ஸாம்ராஜ்யம் பெற்றாரென்று முடிக்கப்பட்டிருக்கிறது. எங்ஙனேயென்னில்—"एहीमं विद्धि । अयं वै सर्वविद्येति । तस्मै हैतमग्निं सावित्रमुवाच । तं स विदित्वा । अमृतो भूत्वा । स्वर्गं लोकमियाय । आदित्यस्य सायुज्यम्" என்பவை அவ்விடத்துள்ள வாக்கியங்கள். இது பரத்வாஜருக்கு இந்திரன் ஸாவித்ரவித்யையை உபதேசித்ததாகச் சொல்லிற்று. திருவாய்மொழிக்குத்தான் ஸாவித்ரவித்யையென்று பெயர். இந்த தத்துவத்தை ஸ்ரீமந்நாதமுனிகள் கண்டறிந்து நம்மாழ்வாரை ஸவிதாவென்று வ்யபதேசித்தார். "यद्गोसहस्रमपहन्ति तमांसि पुंसां नारायणो वसति यत्र सशंखचक्रः । यन्मण्डलं श्रुतिगतं प्रणमन्ति विप्राः तस्मै नमो वकुलभूषणभास्कराय-யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம் நாராயணோ வஸதி யத்ர ஸசங்க சக்ர:, யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ராஸ் தஸ்மை நமோ வகுல பூஷணபாஸ்கராய." என்று ஸுப்ரஸித்தமான ச்லோகம் ஸ்ரீமந்நாதமுனிகளருளிச் செய்தது. இதை யநுஸரித்தே ஆசார்யஹ்ருதயத்தில் "ஆதித்ய ராமதிவாகர அச்யுதபாநுக்களுக்குப் போகாத வுள்ளிருள் நீங்கி சோஷியாத பிறவிக்கடல் வற்றி விகஸியாத போதிற்கமல மலர்ந்தது வகுலபூஷண பாஸ்கரோதயத்திலே" என்று அருளிச் செய்யப்பட்டது. வடநாட்டுத் திருப்பதிகளிலே ஸஞ்சரித்துக்கொண்டிருந்த மதுரகவிகள் தெற்கே ஸூர்யோதயங்கண்டு விரைந்துவந்தார் என்னுமிதிஹாஸமும் இங்கே அநுஸந்திப்பது. இவற்றாலே நம்மாழ்வாரே ஸவிதாவென்பது நிஸ்ஸந்தேஹமாக விளங்கும். सवित्रा प्रादुर्भावितम् - सावित्रम् ॥ ஸவிதா வெளியிட்டது ஸாவித்ரம்—வகுள பூஷண பாஸ்கர வித்யை யென்றபடி. இது திருவாய்மொழி மாத்திரமேயன்று, நாலாயிரமுமாகும். "நாதனுக்கு நாலாயிர முரைத்தான் வாழியே" என்கிற படியே நாலாயிரமும் மேலே சொன்ன ஸவிதாவினிடமிருந்து ப்ராதுர்ப்பூதமாகையாலே நாலாயிரமும் ஸாவித்ரவித்யை யென்னத் தட்டில்லை. காடகத்தில் அதே யிடத்தில் "एषो एव त्रयी विद्या—ஏஷோ ஏவ த்ரயீ வித்யா" என்று ஓதியிருப்பதன் பொருளாவது—நாலாயிரமும் மூன்று வகைப்பட்டிருக்கிறது; (அதாவது) நம்மாழ்வாருடைய திவ்யப்ரபந்தங்கள் நான்கும் நால்வேதம் போன்று அங்கியாயும், திருமங்கையாழ்வாருடைய ஆறு திவ்யப்ரபந்தங்களும் சீக்ஷாவ்யாகரணாதி அங்கஷட்கம்போன்று ஆறங்கமாயும், மற்றையாழ்வார்களின் திவ்யப்ரபந்தங்கள் உபாங்கங்களாயுமிருக்கையாலே 'एषो एव त्रयी विद्या' என்றது. "வேதசதுஷ்டய அங்கோபாங்கங்கள்போலே இந்நாலுக்கும் இருந்தமிழ்நூற் புலவர்பனுவலாறும் மற்றையெண்மர் நன்மாலைகளும்."

என்கிற ஆசார்யஹ்ருதய ஸூக்தியாலும் இது விசதம். இன்னமும் இதைப் பற்றி விரிவாகச் சொல்ல வேண்டுமவற்றை மற்றொருகால் சொல்லுவோம்.

**26. தைத்திரீயோபநிஷத்திலும் திருவாய்மொழியைப்பற்றி ஓதியிருப்பதை உணர்மின் :—**

"सहस्रपरमा देवी शतमूला शताङ्कुरा । सर्वं हरतु मे पापं दूर्वा दुस्स्वप्ननाशिनी ॥

ஸஹஸ்ரபரமா தேவீ சதமூலா சதாங்குரா, ஸர்வம் ஹரது மே பாபம் தூர்வா துஸ்ஸ்வப்நநாசிநீ."

இந்த ருக்கின் உண்மைப் பொருளை விவரிக்கிறோமிங்கு. தேவீ என்பதற்கு ஸ்துதிரூபமான வேதமென்று பொருள். दिवु (திவு) தாதுவிலிருந்து நிஷ்பந்நமான சப்தமிது. "दिवु - क्रीडाविजिगीषाव्यवहारद्युतिस्तुतिमोदमदस्वप्नकान्तिगतिषु" என்று பத்துப் பொருள்களையுடையது இந்த தாது. ஸ்துதியென்கிற பொருளை முக்கியமாகக் கொள்வது; மற்ற பொருள்களையும் யதாஸம்பவம் கொள்ளலாம். மேலே दूर्वा (தூர்வா) என்று சொல்லப்பட்டிருக்கிறது. பசுமைதங்கியதென்பது அதன் கருத்து. திவ்யப்ரபந்தம் பசுந்தமிழென்றும் ஈரத்தமிழென்றும் வழங்கப்பெறும். இதற்கு ப்ரதிகோடியான வடமொழி வேதம் சுஷ்கமென்று சொல்லப்படும். அந்த தாத்பரியத்தையே "தெளியாத மறை நிலம்" என்கிற சொல்லால் தேசிகன் வெளியிட்டார். எதுவும் பசுகு பசுகென்றிருந்தால் ஸ்ப்ருஹணீயமாயிருக்கும்; சுஷ்கமாயிருந்தால் தீயிலிடவே தக்கதாகும். சுஷ்ககாஷ்டங்களைத் தீயிலிடும்போது தத்ஸதர்மாவான வேத மந்த்ரம் உபயோகப்பட்டு வருவதை எங்குங் காணலாம். ஆக, *தூர்வா தேவீ* என்பதனுல் தமிழ் வேதமே ஸூசிதமாயிற்றென்பது நிஸ்ஸந்தேஹம். மற்றுள்ள விசேஷணங்களும் இதை நிலைநாட்டி நிற்கும். எங்ஙனே யென்னில்;

27. [ஸஹஸ்ரபரமா] ஸஹஸ்ரம் பரமம் யஸ்யாம் ஸா-ஸஹஸ்ரபரமா. இத்தமிழ் வேதமானது ஓராயிரம் பாசுரத்தை முக்கியமாகக் கொண்டது என்றபடி. "ऋषिं जुषामहे कृष्णतृष्णातत्त्वमिवोदितम् । सहस्रशाखां योऽद्राक्षीत् द्राविडीं ब्रह्मसंहिताम्—ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமிவோதிதம், ஸஹஸ்ரசாகாம் யோத்ராக்ஷீத் த்ராவிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம்." என்று பட்டருளிச் செய்த ச்லோக ரத்நம் இங்கே அநுஸந்தேயம். "வேதேஷு பௌருஷம் ஸூக்தம்" என்று வேதங்களுக்குள்ளே புருஷஸூக்தம் சிறந்ததென்றாப்போலே நாலாயிர திவ்யப்ரபந்தங்களுள் நம்மாழ்வாருடைய திருவாய்மொழியாயிரமே பரமமாயிருக்குமாதலால் 'ஸஹஸ்ரபரமா' என்பதனுல் அதுவே தெரிவிக்கப் பட்டதாயிற்று. [சதமூலா] நூறு பாசுரங்களை மூலமாகக் கொண்டிருக்கு மென்றபடி. "மாறன் விண்ணப்பஞ்செய்த சொல்லார் தொடையலிந்நூறும்" [திருவிருத்தம். நூறுவது பாட்டு] என்கிறபடியே शतगाथात्मकமான திருவிருத்தத்தை மூலமாகக் கொண்டிருக்குமென்கை. திருவிருத்தம் நூறு பாசுரமே திருவாய்மொழியாயிரமாக விரிந்ததென்ற ஆசார்யஹ்ருதய நிர்வாஹம் இதையநுஸரித்தது.

28. [சதாங்குரா] முதலாழ்வார்களருளிச்செய்த நூறு நூறு பாசுரமான மூன்று திவ்யப்ரபந்தங்களிலிருந்தே மற்ற திவ்யப்ரபந்தங்கள் அங்குரித்ததனாலே நூறு பாசுரங்கொண்ட திவ்யப்ரபந்தத்தை அங்குரமாகக் கொண்டிருக்கும் இத்தமிழ் வேதம் என்கை. இதற்கு மற்றொருவகையாகவும் ஆசாரியர்கள் நிர்வாஹம் செய்வதுண்டு: இராமாநுச நூற்றந்தாதியை யுட்கொண்டு சதாங்குரா என்றது; "தமிழ் மறைகளாயிரமு மீன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்று பட்டரருளிச்செய்தபடியே திவ்யப்ரபந்த ப்ரசாரத்திற்கு பகவத் ராமாநுஜரே அங்குர பூதராகையாலே அவருடைய ஏற்றத்தை அவர்தம்முடைய ஸ்துதிரூபமான நூற்றந்தாதியிலே யிட்டுச் சொல்லுகிறதென்று. இதுதான் மிகவும் ஸமஞ்ஜஸமான நிர்வாஹமாகும். ஆக, திருவிருத்தத்தையும் இராமாநுச நூற்றந்தாதியையும் சிறந்த அவயவமாகக்கொண்ட திருவாய்மொழியாயிரத்தைச் சிகரமாகக் கொண்ட பசுந்தமிழ் வேதம் என்றதாயிற்று. இதன் பெருமை எப்படிப்பட்டதென்னில்; [துஸ்ஸ்வப்ந நாசிநீ]* ஊமனார் கண்ட கனவிலும் பழுதாயொழிந்தன *என்று திருமங்கையாழ்வாருளிச்செய்தபடியே தீயகனவுக்கொப்பான ஜநிபதபரிவ்ருத்தியை (ஸம்ஸாரணத்தை) நாசம் செய்யவல்லதென்கை. திவ்யப்ரபந்தத்திற்கு இதுவேயன்றோ பலச்ருதியாகப் பதிகந்தோறும் காண்பது. "இப்பத்தினால் சன்மம் முடிவெய்தி நாசங்கண்டீர்களெங்கானலே" என்ற திருவாய்மொழிப் பாசுரம் இங்கு முக்கியமாக அநுஸந்தேயம். இப்படிப்பட்ட தமிழ் வேதமானது [மே ஸர்வம் பாபம் ஹரது] தத்வஹித புருஷார்த்தங்களை உள்ளபடியறிவதற்கு இடையூறான (அஜ்ஞாந அந்யதாஜ்ஞாநாதி ஹேதுவான) ஸகல பாபங்களையும் போக்க வேணுமென்று ப்ரார்த்தித்ததாயிற்று.

29. இன்னமும் ஏழாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்தில் * वेदेभ्यस्स्वाहा * என்றவுடனே * गाथाभ्यस्स्वाहा * என்று ஓதிக்கிடக்கிறது. இது திவ்யப்ரபந்தங்களைப்பற்றியதேயென்று தேசிகனுடைய திருவுள்ளம். ஆனதுபற்றியே த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலீ முதலானவற்றில் திவ்யப்ரபந்த ஸூக்திகளை गाथा சப்தத்தையிட்டே வ்யபதேசித்து வருகிறார். இவ்விஷயம் மற்றும் பல ஆசார்யர்களுக்கு முடன்பாடே.

30. சில யதாச்ருத க்ராஹிகள் பௌருஷேயங்களான திவ்யப்ரபந்தங்களின் ப்ரசம்ஸை அபௌருஷேயமான வேதத்தில் எப்படியிருக்க முடியுமென்றும், இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமென்றும் ப்ரத்யவஸ்தாநம் செய்யப் பார்ப்பர்கள். திவ்ய ப்ரபந்தமும் அபௌருஷேயமே யென்பது ஆசார்ய ஹ்ருதயாதிகளில் அவிசால்யமாக நிர்ணீதம். "இதுவும் யதாபூர்வ கல்பநமாமே" என்பது அதில் ஸாரமான ஸ்ரீஸூக்தி. அந்யோந்யம் கொண்டாடிப் பேசுந்தன்மை உபயவேதங்களுக்கும் ஸமாநம். "உளன் சுடர் மிகு சுருதியுள்" "மறையாயநால்வேதத்துள் நின்றமலர்ச்சுடரே" என்று பல பல பாசுரங்களில் ஆழ்வார்கள் வடமொழி வேதத்தை ப்ரஸ்தாவிப்பது

போலவே அந்த வடமொழி வேதமும் தமிழ் வேதமாகிய திவ்யப்ரபந்தத்தை ப்ரசம்ஸித்தே நிற்கிறது.

31. ஆழ்வார்களுடைய திவ்யஸூக்திகளில் "மன்னவன் தொண்டையர் கோன்வணங்கும்" "பல்லவன் வில்லவனென்றுலகில் பலராய்ப் பலவேந்தர் வணங்கு" "கன்னிமாமதிள்சூழ்கருவூர் வெருவப் பலபடை சாய வென்றான் பணிந்த" "செங்கணான்கோச் சோழன் சேர்ந்த கோயில்" என்றிப்படி பல பாசுரங்களில் அர்வாசீநர்களான அரசர்களின் இதிஹாஸங்கள் சொல்லப் பட்டிருக்கையாலே இவற்றால் அர்வாசீநமென்று தெரியவருகிற திவ்யப்ர பந்தம் ப்ராசீநமாக எப்படியிருக்க முடியுமென்றும், அநாதிநிதந ஸந்தர்ப்ப மான வேதத்தில் திவ்யப்ரபந்தப்ரசம்ஸை எப்படியிருக்க முடியுமென்றும் சிலர் சங்கிப்பதுண்டு; இதற்குச் சொல்லுகிறோம். அநாதிநிதநஸந்தர்ப்ப மென்று மதிக்கப்படுகிற அந்த வேதந்தன்னிலும் அர்வாசீநகதைகள் அனேக மாயிரம் ஓதப்பட்டிருக்கின்றனவே; ஒன்றே யெடுத்துக் காட்டுகிறேன்; * विश्वामित्रजमदग्नी वसिष्ठेनास्पर्धेताम्—விச்வாமித்ரஜமதக்நீ வஸிஷ்டேந அஸ்பர்த் தேதாம்* என்று அஸக்ருத் ஓதுகிறது. விச்வாமித்ரரும் ஜமதக்நியும் வஸிஷ்டரோடே சண்டையிட்டதாகக் கதை சொல்லுகிறது. இப்படிப்பட்ட கதைகள் ஒன்றிரண்டல்ல; ஒன்பதினாயிரமுண்டு. இந்த கதை நிகழ்வதற்கு முன்னே இந்த வேதம் இருந்திருக்க முடியாது. अस्पर्धेताम् என்று இறந்த காலமாகச் சொல்லாமல் स्पर्धिष्येते என்று எதிர்காலமாகச் சொல்லி யிருந்தால் பவிஷ்யத் கதையை வேதம் ஸாக்ஷாத்கரித்துச் சொல்லுகிறதென்று கொள்ள லாம். நடந்த கதைகளையே பெரும்பாலும் ஓதியிருக்கையாலே அந்த கதைகள் நடந்த பிறகே வேதம் ஜனித்ததென்று கொள்ள இடமுண்டாகிறது. முன்னே விவரித்த பாரத்வாஜ கதையையும் ஸ்மரிப்பது. பரத்வாஜருடைய காலத்தில் காடகச்ருதி கிடையாதென்று நிச்சயிக்கலாகிறது. வைதிகோத்த மர்கள் இவ்விடங்களில் சொல்லும் ஸமாதானங்கள் திவ்யப்ரபந்தங்களில் வருகிற கதைகளுக்கு மொக்கும். * यश्चोभयोस्समो दोषः परिहारोऽपि वा समः *.

32. அன்றியும் * विश्वामित्रस्य सूक्तं भवति - விச்வாமித்ரஸ்ய ஸூக்தம் பவதி* என்றாப்போலே பலவிடங்களுண்டு. விச்வாமித்ராதிகளான சில ரிஷிகளின் ஸூக்தங்களை வேதம் அநுவதிக்கிறதென்பது நிர்விவாதம். விஷயாந்தரங் களின் காற்கடையிலே நெடுநாள் துவள்வதும், ரஜஸ்தமோ குணங்கள் தலையெடுத்து மஹநீயர்களோடே சண்டையிடுவதுமான அந்த ரிஷிகளைப் பற்றியும் அவர்களுடைய உக்திகளைப் பற்றியும் வேத மோதுகிறதென்றால் இதில் விஸம்வாதமின்றிக்கே கிடக்கிறார்கள். *உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம் பெருமானென்றே கண்கள் நீர்மல்கி நிற்கிற பரமஸாத்விகர்களும் பரமபவித்ரஜ்ஞாநநிதிகளுமான ஆழ்வார்களையும் அவர்களது ஸூக்திகளையும் வேதம் ப்ரசம்ஸிக்கிற தென்றால் இதில் அஸூயை வர்த்திக்கிறது ப்ரபலபாபபலமேயன்றோ.

"प्रहरामि शेफम् — आहतं गमे पसो निजल्गुलीति धाणिका - न मा यभति कश्चन - नग्नंकृत्यऊरुमुप प्रवर्तयति - रेतसिञ्चन् प्रजा ; प्रजनयन्"— த்ரிம்சதஸ்யா ஜகநம் யோஜநாநி — இத்யாதி வாக்குக் களே வேதமாயிருக்கத்தகுமென்று இருப்பவர்கள் * திருக்கண்டேன் பொன் மேனிகண்டேன் * கார்கலந்தமேனியான் கைகலந்த வாழியான் * முடிச்சோதி யாயுனது முகச்சோதி மலர்ந்ததுவோ* இத்யாதி பாசுரங்களை வேதமாக எப்படி கொள்ளமுடியும்.

33. " इतिहासपुराणं च — இதிஹாஸபுராணஞ்ச" என்று வேதத்திலேயே கொண் டாடப்படுகிற இதிஹாஸபுராணங்களிலும் பாஞ்சராத்ரஸம்ஹிதைகளிலும் ஆழ்வார்கள் கொண்டாடப்பட்டிருக்கின்ருர்களென்பதை தேசிகனே யருளிச் செய்கிருர். அவர் குருபரம்பராஸாரத்தில் கூறியிருப்பதாவது—" அகஸ்த்ய ஸேவிதமான தேசத்திலே அநேக தேசிகாபதேசத்தாலே (ஸ்ரீமந்நாராயணன்) அவதரித்தருளினன் ; இத்தைக்கணிசித்து * कलौ खलु भविष्यन्ति नारायणपरायणाः । क्वचित्क्वचिन्महाभागा द्रमिडेषु च भूरिशः । ताम्रपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी । कावेरी च महाभागा प्रतीची च महानदी * என்று மஹர்ஷியருளிச் செய்தான்" என்று. ஆகவிப்படி வேதங்களிலும் தது பப்ருங்ஹணங்களிலும் கொண்டாடப்பெற்ற பெருமை திவ்யப்ரபந்தங்களுக்குள்ளது. ... ... ... (3)

---

## 4. பகவத்பாஷ்யகார ஸ்ரீஸூக்திவைலக்ஷண்யம்

34. கீதாபாஷ்யத்திலோ ஸ்ரீபாஷ்யத்திலோ ஸ்வாமியருளிச் செய்யும் ஸ்ரீஸூக்திகளில் நெஞ்சையுருக்கும் படியான வொரு அதிசயம் அடியே னுடைய அநுபவத்தில் காண்கிறது. இவ்வதிசயம் வேறு எந்த பாஷ்யத் திலும் லேசத்தும் காணமுடியாது. அஃது என்னென்னில், மூலத்தில் பரம புருஷனுடைய ப்ரஸ்தாவம் வருமிடங்களில் ஆழ்வார்களுடைய திவ்ய ஸூக்திச் சாயையிலே அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிப்பெருமை களை விளக்கிப் பல விசேஷணங்களை அருளிச் செய்நாலொழிய ஸ்வாமிக்குத் தரிப்பு உண்டாவதில்லை. இங்கு ஓரிடமெடுத்துக் காட்டுகிறேன்.

35. பகவத்கீதையில் ஒன்பதாமத்யாயத்தில் முடிவு ச்லோகம் "मन्मना भव मद्भक्तः" மந்மநாபவ மத்பக்தஃ என்பது. இதில் மந்மநா பவ என்பதற்கு என்னிடத்தில் மனத்தை வைத்திடு என்று பொருள். இப்பொருள் யாவர்க்கும் தெரிந்ததே எளிதில் தெரியக்கூடியதே என்கிற கருத்தினுல் மத்வபாஷ்யகாரர் அடியோடு அர்த்தம் செய்யவேயில்லை. சங்கராசாரியர் "மயி வாஸுதேவே மநஃ யஸ்ய தவ ஸ த்வம் மந்மநா பவ" என்று உரைத்தார். என்னிடத்தில் என் பதற்கு வாஸுதேவனுகிய என்னிடத்தில் என்று அர்த்தம் என்பதாக விவரித் தாராயிற்று. இனி ஸ்வாமியின் பாஷ்யத்தை யெடுத்துக் கொள்வோம் : அவ் விடத்துப் பங்க்திகளை ஸேவித்தால் கல்நெஞ்சினனுக்கும் கண்ணீர்பெருகும்.

36. "मन्मना भव - मयि सर्वेश्वरे निखिलहेयप्रत्यनीककल्याणैकताने सर्वज्ञे सत्यसंकल्पे निखिलजगदेककारणे परस्मिन् ब्रह्मणि पुरुषोत्तमे पुण्डरीकदलामलायतेक्षणे स्वच्छनीलजीमूतसंकाशे युगपदुदितदिनकरसहस्रसदृशतेजसि लावण्यामृतमहोदधौ उदारपीवरचतुर्बाहौ अत्युज्ज्वलपीताम्बरे अमलकिरीटमकरकुण्डलहारकेयूरकटकभूषिते अपारकारुण्यसौशील्यसौन्दर्यमाधुर्यगाम्भीर्यौदार्यवात्सल्यजलधौ अनालोचितविशेषाशेषलोकशरण्ये सर्वस्वामिनि तैलधारावदविच्छेदेन निविष्टमना भव—மந்மநா பவ—மயி ஸர்வேச்ரே நிகிலஹேயப்ரத்ய நீககல்யாணைகதாநே ஸர்வஜ்ஞே ஸத்யஸங்கல்பே நிகிலஜகதேககாரணே பரஸ்மிந் ப்ரஹ்மணி புருஷோத்தமே புண்டரீக தலாமலாயதேக்ஷணே ஸ்வச்ச நீலஜீமூத ஸங்காசே யுகபதுதித திநகரஸஹஸ்ர ஸத்ருசதேஜஸி லாவண்யாம்ருதமஹோததௌ உதாரபீவரசதுர்பாஹௌ அத்யுஜ்ஜ்வல பீதாம்பரே அமலகிரீட மகரகுண்டலஹாரகேயூரகடகபூஷிதே அபார காருண்ய ஸௌசீல்ய ஸௌந்தர்ய மாதுர்யகாம்பீர்யௌதார்ய வாத்ஸல்ய ஜலதௌ அநாலோசிதவிசேஷாசேஷலோகசரண்யே ஸர்வஸ்வாமிநி தைல தாராவத் அவிச்சேதேந நிவிஷ்டமநா பவ" என்கிற இவ்வளவும் அதி கம்பீரமாக அவதரித்துள்ள ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாகும்.

37. இந்த மஹாவாக்யத்தில் எம்பெருமானைப் பற்றின விசேஷணங்கள் பதினெட்டு உள்ளன. இத்தனை விசேஷணங்கள் இங்கு அவசியமோ வென்று சிலர் நினைக்கக்கூடும். உண்மையில் அவச்யமன்றென்றும் சொல்ல லாம். விஸ்தரத்தில் ருசியில்லாதவரான ஸ்வாமி இவ்வளவு ஏன் அருளிச் செய்தாரென்று ஆலோசிக்கவேண்டும். ஸ்ரீவைஷ்ணவர்களிலும் பலர் இதற்கு நிதானமறியாரென்றே அடியேன் எண்ணுகிறேன். ஸ்வாமி யெம் பெருமானுர் *பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களிராமானுசமுனி வேழம்* என்றும் *கலிமிக்க செந்நெற்கழனிக்குறை யல் கலைப்பெருமானொலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனல் வலிமிக்க சீயமிராமானுசன்* என்றும் நூற்றந்தாதியில் அமுதனர் அருளிச் செய்தபடியே ஆழ்வாரருளிச் செயற்கடலில் அநவரதம் அவகாஹித்தவரா தலால் அதன் பலனுகவே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளை ஸ்வாமி பலகாலும் அருளிச்செய்யப்ராப்தமாகிறது. கண்ணபிரான் தன்னிடத்தில் பக்திபண் ணும்படி விதிக்கிற இவ்விடத்தில் எம்பெருமான்றன்னுடைய இத்தனை விசேஷணங்களை யெடுத்துக் காட்டாவிடில் எங்ஙனே பக்தியுண்டாகும். அவ னுடைய ஸ்வரூப வைலக்ஷண்யத்தையும் திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர் யத்தையும் திவ்ய பூஷணுதி வைசிஷ்ட்யத்தையும் திருக்கல்யாண குண பௌஷ்கல்யத்தையும் எடுத்துக் காட்டுவதானது கண்ணபிரான் தானே இவற்றையெடுத்துரைத்து இவற்றிலேயீடுபடும்படி சொல்லுவதாகவன்றோ வுள்ளது. இதர பாஷ்யகாரர்களுக்கு திவ்ய ப்ரபந்த ஸம்பத்து சிறிது மில்லாமையினுலேயே அவர்கள் இப்படிப்பட்ட விசேஷணங்களை ஓரிடத்தில் கூட எழுதிவைக்க ப்ரஸக்தியில்லையாயிற்று.

38. ஸ்ரீ பாஷ்யத்திலும் ஓரிடம் காட்டுகிறேன். அதில் கடைசியான ஸூத்ரம் "अनावृत्तिः शब्दादनावृत्तिः शब्दात्" [அநாவ்ருத்திச் சப்தாத் அநாவ்ருத்திச் சப்தாத்] என்பது. இங்கு மூலத்தில் பரமபுருஷனுடைய ப்ரஸ்தாவமேயில்லை. பரமபதத்தைச் சென்றடைந்த முக்தர்கள் மீண்டும் இந்நிலத்தில் திரும்பி வருவது உண்டா இல்லையா? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இந்த ஸூத்ரம் அவதரித்துள்ளது. 'புநராவ்ருத்திகிடையாதென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே அது இல்லை' என்றிவ்வளவே ஸூத்ரம் சொல்லிநின்றது. இதை விவரிக்குமிடத்து ஸ்வாமி யெம்பெருமானார் "பகவானொருவனுளனென்று எந்த சாஸ்த்ரம் அறிவிக்கின்றதோ அந்த சாஸ்த்ரமே பகவானை அடைந்தவர்க்குப் புநராவ்ருத்தியில்லை யென்றும் தெரிவிக்கின்றது" என்றருளிச் செய்கிறார். இங்கு "यथा परमपुरुषः अस्तीति शब्दादवगम्यते" [யதா பரமபுருஷ: அஸ்தீதி சப்தாத் அவகம்யதே] என்றிவ்வளவே அருளிச்செய்தால் போதுமானது. ஆயினும் ஸ்வாமி இங்கே அருளிச்செய்வது பாரீர்;—

"यथा निखिलहेयप्रत्यनीककल्याणैकतानः जगज्जन्मादिकारणम् समस्तवस्तुविलक्षणः सर्वज्ञः सत्यसंकल्पः आश्रितवात्सल्यैकजलधिः निरस्तसमाभ्यधिकसंभावनः परमकारुणिकः परब्रह्माभिधानः परमपुरुषोऽस्तीति शब्दादवगम्यते—யதா நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந: ஜகஜ்ஜந்மாதிகாரணம் ஸமஸ்தவஸ்துவிலக்ஷண: ஸர்வஜ்ஞ: ஸத்யஸங்கல்ப: ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதி: நிரஸ்த ஸமாப்யதிகஸம்பாவந: பரமகாருணிக: பரப்ரஹ்மாபிதாந: பரமபுருஷ:......" என்று இவ்வளவு விசேஷணங்களையருளிச்செய்கிறார்.

39. இங்ஙனே ஓரிடமன்று இரண்டிடமன்று; பல பலவிடங்கள் காணலாம். மற்ற பாஷ்யகாரர்களுக்கு இப்படிப்பட்ட வாக்யவிந்யாஸம் பண்ணத் தெரியாமையில்லை. பகவானிடத்தில் பக்தியில்லாமையுமில்லை. ஆயினும் அவர்களுடைய கையிலிருந்து இப்படிப்பட்ட ஸ்ரீ ஸூக்திகளில் ஏகதேசமும் அவதரிக்கக் காண்கின்றிலோம். *செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரையடிக்கள் செம்பொன் திருவுடம்பே* என்றும் *கைவண்ணம் தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே* என்றும் *செக்கமலத்தலர்போலும் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத்திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே* என்றும் வாய்வெருவுகின்ற ஆழ்வார்களின் ஈரச்சொற்களிலே ஆழங்காற்பட்டிருக்கு மாசிரியர்கட்கே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்தி விந்யாஸவைபவம் வாய்க்கின்றது.

40. ஸ்ரீராமாநுஜர்க்கு முற்பட்ட ஆளவந்தார் முதலானோரும், பிற்பட்ட கூரத்தாழ்வான் பட்டர் முதலானோரும் தாங்கள் ஸ்ரீஸூக்திகளை யருளிச் செய்தது ஆழ்வார்களிடத்திலே தங்களுக்குண்டான ப்ராவண்யாதிசயத்தை வெளியிடுவதற்கும், ஆழ்வார்களருளிச் செயல்களில் தாங்கள் அருமையாகக் கண்ட பொருள்களைப் பதியவைப்பதற்குமே யென்னு முண்மையைச் சில பாக்யசாலிகளேயன்றோ அறியப் பெறுவர்கள். ** तेनावलोक्य कृतिनः परिभुञ्जते तं तत्रैव केऽपि चपलाः शलभीभवन्ति—தேநாவலோக்ய க்ருதிந: பரிபுஞ்ஜதே தம் தத்ரைவ கேபி சபலாச் சலபீபவந்தி* என்று பட்டாருளிச் செய்தது இங்குமொக்கும். (4)

## 5. ஸ்வாமிஸ்ரீஸூக்திகளில் விசேஷாவதானம்

41. ஸ்வாமியெம்பெருமானார் எம்பெருமானுக்கு இட்டருளுகிற விசேஷணங்களில் ஒவ்வொன்றையும் ஊன்றி நோக்கினால் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை யநுஸரித்தே இவர் அருளிச்செய்கிறாரென்பதை எளிதாக நிர்ணயிக்கலாம். இந்த நிர்ணயம் ஸாமாந்யமாக எல்லார்க்கும் எளிதன்று. திவ்யப்ரபந்தத்தில் ப்ரவேசமில்லாதவர்களுக்கு இது தெரிய ப்ரஸக்தியே யில்லை. அதில் பரிபூர்ண ப்ரவேசம் பெற்றவர்களுங்கூட பகவத் பாஷ்யகார ஸ்ரீஸூக்திகளில் விசேஷித்து அவதானம் செய்வதில்லை யாதலால் இவ்வதிசயத்தை அறியப்பெறுகின்றிலர். சில வகுப்பினர் ஸ்ரீபாஷ்யாதிகாரிகளென்று பேர் பெற்று பகவத் பாஷ்யகார ஸ்ரீஸூக்தி யநுபவத்தளவிலே நிற்கிறார்கள். சில வகுப்பினர் பகவத்விஷயாதிகாரிகளென்று பேர்பெற்று ஆழ்வார் ஸ்ரீஸூக்தி யநுபவத்தளவிலே நிற்கிறார்கள். சிலர் உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களாய் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயங்களிரண்டிலும் அதிகாரிகளாயிருக்கின்றார்களெனினும் அன்னவர்கள் அந்யதரத்தில் மாத்திரம் (அதாவது, ஸ்ரீபாஷ்யத்திலோ அல்லது பகவத் விஷயத்திலோ இரண்டத்தொன்றில் மாத்திரம்) விசேஷாபிநிவிஷ்டர்களா யிருந்துகொண்டு இரண்டிலும் ஸமரூபமான ப்ரவேசமும் விமர்சமு மற்றவர்களாய் இரண்டு திவ்யக்ரந்தங்களையும் ஐககண்டியம் செய்து அநுபவிக்கவும் அநுபவிப்பிக்கவும் பாக்ய ஹீநர்களாய் நிற்கிறார்கள். நம்பிள்ளை முதலான பூர்வாசார்யர்கள் அவதார புருஷர்களாகையாலே ஸர்வஜ்ஞர்களாய்த் தோன்றி உபயவேதாந்தங்களாகிற அமுதக்கடலிலே ஆழவிழிந்து இரண்டையும் ஸமந்வயப்படுத்திக்கொண்டு ஆச்சரியமாக அநுபவித்தும் அநுபவிப்பித்தும் போந்தார்கள்.

42. ஆசார்ய ஹ்ருதய திவ்ய சாஸ்திரத்தில் "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்" (65) என்றொரு ஸ்ரீஸூக்தியுள்ளது. இதற்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானம்—

"பாஷ்யகாரர் ஸ்ரீ பாஷ்யம்பண்ணியருளும்போது ஸூத்ரவாக்யங்களில் ஸந்திக்தங்களான அர்த்தங்களை யெல்லாம் இப்ப்ரபந்தத்தில் ஸூக்திகளைக் கொண்டு நிர்ணயித்து ஒருங்கவிட்டருள்வரென்கை" என்று;

ஆனால் இவ்விஷயம் தத்வஜிஜ்ஞாஸுக்களின் மனத்தில் நன்கு அவகாஹிக்கும்படி சில இடங்களையாவது எடுத்துக்காட்டியிருக்கவேண்டும். அது மூலத்தில் காட்டப்படாவிட்டாலும் வியாக்கியானத்திலாவது காட்டப்பட்டிருக்கவேண்டும். மேலே நாம் உதாஹரித்த வியாக்கியான ஸ்ரீஸூக்தியில் மூலத்திற்குப் பொருள் பணிக்கப்பட்டதேயல்லது அதற்குச் சான்றாக ஓரிடமும் எடுத்துக்காட்டப்படவில்லை. பரமகாருணிகர்களாய் ஸர்வஜ்ஞர்களான பூருவாசாரியர்களும் தமது திவ்யக்ரந்தங்களிலே இப்படி ப்ரதிஜ்ஞையை மாத்திரம் செய்துவிட்டு இதற்கு நிதர்சனங்கள் காட்டுவதை உபதேசபரம்பரையிலே வைத்துக்கொண்டார்களேயல்லது எடுபடுத்தி வைக்கவில்லை. இதை ரஸ்ய ரஹஸ்யார்த்தமாகவே திருவுள்ளம் பற்றி அஷட்கர்ணீதியில் கொண்டு

வந்தார்களே யொழிய க்ரந்தரூபேண ப்ரசாரம் செய்து போந்தார்களில்லை. வேதாந்ததேசிகன் *ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதா சேஷசித்தே வித்வத்ஸேவாவிமல மநஸா வேங்கடேசேந *என்று தாமே பேசிக்கொண்டபடி அப்படிப்பட்ட மஹாசார்யர்களின் திருவடிவாரத்திலே யிருந்து பழுக்க ஸேவித்தவராகையாலே தம்முடைய அநுபவத்தை *செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே * என்று துணிந்து வெளியிட்டனர்.

43. அங்ஙனம் பேசின அப்பேராசிரியரை அக்காலத்திலேயிருந்த ஞானிகள் நேரில்கண்டு 'ஸ்வாமிந்! தமிழ்ப் பாசுரங்களைத் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளியப் பெற்றதாக அருளிச் செய்கிறீரே; அப்படிச் சில இடங்களையாவது எங்களுக்குக் காட்டியருளலாகாதா?' என்று கேளாமலிருந்திருக்க மாட்டார்கள். அப்படி கேட்டவர்களுக்கு ஸ்வாமி தேசிகன் பரமத்ருப்திகரமாக விடைகூறுமலிருந்திருக்கமாட்டார். வெறும் ப்ரதிஜ்ஞையோடு நிற்பவர்களல்லரே மஹாஜ்ஞாந நிதிகளான நம்முன்னோர்கள். க்ரந்தங்களில் ப்ரதிஜ்ஞை செய்த விஷயத்தை அடிபணிந்த அந்தரங்க சிஷ்யர்களுக்கு அற்புதமாக உபபாதித்துக்காட்ட வல்லவர்களாகவே விளங்கியிருந்தனர். அவ்வர்த்தங்கள் * पूर्वे पूर्वेभ्यो वच एतदूचुः—பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு:* என்று வேதமோதின கணக்கிலே உபதேச பரம்பரையாகவே வரவேணுமென்கிற திருவுள்ளத்தினால் ஏடுபடுத்தாமே போந்தார்கள். இவ்வுண்மையை அறியப் பெறாதவர்கள் விபரீதமாகப்பேசி அநர்த்தப்பட்டுப் போக நேர்ந்தபடியாலே அப்படிப்பட்ட ரஸ்யரஹஸ்யார்த்தங்களையும் நாம் ஏடுபடுத்தி வைக்கவேண்டியதாயிற்று.

44. 'நம் பூருவாசாரியர்கள் பரமகாருணிகோத்தமர்களா யிருந்து வைத்தும் அவர்களும் செய்தருளாத காரியத்தை நாம் செய்யலாகாது' என்றே அடியேனும் நினைப்பதுண்டு. ஆனாலும் நாளடைவில் விபரீத ப்ரசாரங்கள் உலகில் வளர்ந்து செல்லுகையாலே (அதாவது) ஆழ்வார்கள் கேவலம் பக்தர்களே யொழிய அவர்கள் வேதாந்த நிர்வாஹம் பண்ண வந்தவர்களல்லரென்றும், அவர்களுடைய உக்திகள் வேதமாகவோ வேதத்தினும் சிறந்ததாகவோ கொள்ளத் தகுதியற்றவை யென்றும், ஸ்வாமி ராமாநுஜர் திவ்யப்ரபந்தங்களைக்கொண்டு வேதாந்த நிர்வாஹம் யாதொன்றும் செய்யவில்லையென்றும், ஸ்ரீராமாநுஜர்க்கு ஆழ்வார்களிடத்திலும் அவர்களது ஸ்ரீஸூக்திகளிலும் ப்ராவண்யமிருந்ததாகச் சொல்லுவது நம்பத்தகுந்ததன்று என்றும், ஸ்ரீராமாநுஜர் உபநிஷத்துக்களின் உதவியைக்கொண்டே வேதாந்தப்பொருள்களை நிர்வஹித்தாரே யொழிய திவ்யப்ரபந்தங்களைத் துணைகொள்ளவில்லை யென்றும்........இப்படி யெல்லாம் தங்கள் மனம்போன போக்கில் ஸ்ரீவைஷ்ணவ ஸந்தானத்தில் ஜனிக்கப்பெற்றவர்களுங்கூட துஷ்ப்ரசாரம் செய்யுங் காலமாயிருக்கையாலே இப்படிப்பட்டவர்களின் சுஷ்கோக்திகளாலே நமது தர்சனத்தின் உண்மைப்பொருள் மறையாதபடிக்கு நாம் தொண்டு செய்யவேண்டியது இன்றியமையாததாகின்றது.

45. ஸ்ரீராமாநுஜருடைய ஸ்ரீஸூக்திகளை ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்குமளவில் அவற்றில் இரண்டுவகையான விசேஷங்களை யுணர ப்ராப்த மாகும். (1) பல ஸ்ரீஸூக்திகளாலே ஆழ்வார்களைக் கொண்டாடுகின்றமை யும், (2) பலஸ்ரீஸூக்திகளாலே அவர்களது திவ்ய ஸ்ரீஸூக்திகளினுல் கிடைத்த விசேஷப்பொருள்களைத் தாம் ஆதரிக்கின்றமையும். ஆக இவ் விரண்டு அதிசயங்கள் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் விசேஷித்து அநுபவிக் கத்தக்க அபூர்வதிவ்யாம்ருதங்களென்று திண்ணமாக எண்ணவேணும். ருசியுள்ளவர்களான ஆஸ்திகர்களுக்கு இவ்வநுபவம் ப்ராப்தமாக வேணு மானுல் அடியேனுடைய உபந்யாஸங்களிலிருந்தும் நூல்களிலிருந்துமே ப்ராப்தமாகக் கூடியதென்கிறவிது ஆத்மப்ரசம்ஸோக்தியாகக் கொள்ளப் படாமல் தத்வோக்தியாகக் கொள்ளப்படவேண்டும். இது, க்ரமேண ஸமு சிததமங்களான உபபாதநங்களினுல் மாத்ஸர்யசாலிகளுக்கும் மதிக்கத்தக்க தாகுமென்பது திண்ணம். ... ... ... (5)

---

## 6. நம்மவர்களின் உபயவேதாந்தாசார்யத்வம்

46. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு 'உபய வேதாந்த ப்ரவர்த்தகர்' என்கிற விருது அஸாதாரணமாக அமைந்திருக்கின்றது. இதர மதஸ்தர் களை விசேஷிக்கும்போது ப்ரஹ்மஸ்ரீ என்றெழுதுவதும், ஸ்ரீவைஷ்ணவர்களை விசேஷிக்கும் போது ஸ்ரீமதுபயவே. என்றெழுதுவதும் எங்குங் காணப்பட்டு வருகின்றது. உவே. (அல்லது) உபயவே. என்கிற ஸங்கேதவார்த்தைக்கு இன்னது அர்த்தம் என்று தெரிந்து கொள்ளாதவர்களுக்குங் கூட உவே. என்று எழுதிவருகிருேம். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் தோன்றும் போதே—கர்ப்பத்தில் வஸிக்கும்போதே உபய வேதாந்த ப்ரவர்த்தகத்வ பிருது வந்து சேர்ந்து விடுகிறது. கல்யாண காலங்களில் உபய வர்க்கச் சீர்பாடல் பாடும்போது சிசுவாயிருக்கிற பிள்ளைகளையும் பாட நேர்கின்றது; அப்போது "ஸ்ரீமத் வேத மார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபய வேதாந்தாசார்யரான பெண் ணுக்கு மைத்துனன் ராகவாசாரியர் சீர்பாடி........." என்று கோஷித்து வரு கிருேம். இதனுல் ஸ்ரீவைஷ்ணவ ஸந்தானத்திற்கு உயய வேதாந்த ப்ரவர்த்த காசார்யத்வம் கர்ப்பாபிஷிக்தமென்று அறுதியிடப்படுகிறது. திராவிட வேதாந் தமும் ஸம்ஸ்க்ருத வேதாந்தமுமாகிற இரண்டு வேதாந்தங்களே உபய வேதாந்த மெனப்படுகின்றது. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்கள் யாவரும் உபயவேதாந்தங்களையும் இருகண்களாகக் கொள்ளவேண்டு மென்பது நம் பூருவாசாரியர்களின் திருவுள்ளம்.

47. தமிழ்வேதத்தை முதன்முதலாக இந்நில வுலகில் பிரசாரத்திற்குக் கொணர்ந்தவர் ஸ்ரீமந்நாதமுனிகள். மூலத்தைப் புநருத்தாரம் செய்வதற்கே அவருடைய வாழ்நாள் பர்யாப்தமாயிற்று. ஆளவந்தார் காலத்தில்தான் தமிழ் வேதத்தின் அர்த்தப்ரவசனம் தொடக்கமாயிற்றென்று சொல்லலாம். "மாற னுரை செய்த தமிழ்மறைவளர்த்தோன் வாழியே" என்று வாழ்த்தப்பட்டு

வரும் எம்பெருமானாருடைய காலத்திலேதான் த்ராவிட வேதாந்த ப்ரசாரம் மேம்பாடுற்றதென்று நன்கு தெரியவருகிறது. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யரென்னும் விருதை உபயோகிக்கும்படி நியமித்தவர் ஸ்வாமி யெம்பெருமானாரே யென்று பல நிதர்சனங்களினால் தெரிந்து கொள்ள வியலும். எம்பெருமானாரைப் பற்றின வொரு ச்லோகரத்நம் ஈடுமுப்பத்தாறுயிரப்படியின் அடையவளைந்தானரும்பத வுரை முதலான க்ரந்தங்களில் காணப்படுகிறது; அதாவது—

"पुरा सूत्रैर्व्यासः श्रुतिशतशिरोर्थं ग्रथितवान् विवव्रे तच्छ्राव्यं वकुलधरतामेत्य स पुनः।
उभावेतौ ग्रन्थौ घटयितुमलं युक्तिभिरसौ पुनर्जज्ञे रामावरज इति स ब्रह्ममुकुरः॥

புரா ஸூத்ரைர் வ்யாஸ: ச்ருதி சதசிரோர்த்தம் க்ரதிதவாந்
விவவ்ரே தத் ச்ராவ்யம் வகுள தரதாமேத்ய ஸ புந:,
உபாவேதௌ க்ரந்தௌ கடயிது மலம் யுக்திபிரஸௌ
புநர் ஜஜ்ஞே ராமாவரஜ இதி ஸ ப்ரஹ்மமுகுர:." என்பது.

48. இந்த ச்லோகத்தின் கருத்தாவது—உபநிஷத்துக்களின் பொருள் களை முதன்முதலாக வியாஸ பகவான் சாரீரக மீமாம்ஸையென்னும் ப்ரஹ்ம ஸூத்ரத்தினால் தொகுத்தார்; அந்த வியாஸர்தாமே மீண்டும் வகுளா பரணப் பெருமாளாக [நம்மாழ்வாராக] வடிவெடுத்து செவிக்கினிய செஞ்சொற்களாலே அந்த ப்ரஹ்ம ஸூத்ரத்தை விவரித்தார். இவ்வுபய திவ்ய க்ரந்தங்களையும் பொருத்தமாக ஸமந்வயப் படுத்தி நிர்வஹிக்க அவரே மீண்டும் ஸ்வாமி யெம்பெருமானாராகத் திருவவதரித்தார்—என்பதாம். இந்த ச்லோகம் எம்பார் அருளிச் செய்ததாகவும் முதலியாண்டானருளிச் செய்ததாகவும் சொல்லப் பட்டு வருகிறது. ச்லோகமோ கம்பீரமானது; விஷயமோ யதார்த்தமானது. இதை யநுஸரித்தே ஆசார்ய ஹ்ருதயத்தில் "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்களொருங்க விடுவர்" என்றருளிச் செய்யப் பட்டது. இதே கருத்தில் வேதாந்த தேசிகனும் பலபல பணித்துள்ளா ரென்பது பிஷ்ட பேஷணமும் சர்விதசர்வணமுமாகும்.

49. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஜனிக்கப்பெற்றவர்கள் ஸ்ரீமதுபயவே. என்கிற விருதை வஹிப்பது மாத்திரம் போராது; உபய வேதாந்தங்களையும் ஸமரூபமாகப் பரிசீலனைசெய்து உபயவேதாந்த திவ்யார்த்தங்களையும் தாமநுப வித்துப் பிறரையுமநுபவிக்கச் செய்யவேணும். ஒரு வேதாந்தத்திலும் ப்ரவேசமில்லாதவர்களைப் பற்றி நாம் எதுவும் சொல்ல விரும்புகின்றிலோம். யோக்யதை ஸம்பாதித்தவர்களைப்பற்றியே இங்குப் பேசுகிறோம். சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் த்ராவிட வேதாந்தத்தில் பகைபூண்டவர்களாயும் காணப்படு கிறார்கள். அது ப்ரபல பாபபலன். அன்னவர்கள் தங்களை பகவத்ராமாநு ஜதர்சநஸ்தர்களாகச் சொல்லிக்கொள்ளாமலிருக்கவேண்டும்; உபயவே. என் கிற விருதை முன்னம் விலக்கிக்கொள்ளவேண்டும். ... ... (6)

---

## 7. ஸ்வாமி செய்தருளிய ஸாதுசப்தார்த்த விவரணம்

50. பகவத்கீதையில் *பரித்ராணாய ஸாதூநாம்* (4.8.) என்ற விடத்திற்கு பாஷ்ய மருளிச்செய்யாநின்ற ஸ்வாமி, ஸாதுக்கள் யாவர்? என்பதை விவரிக்கு மிடத்து ஆழ்வார்களே ஸாதுக்களென்று ஸுஸ்பஷ்ட சப்தங்களால் விளக்கி யருளினர்; *காணவாராயென்றென்று கண்ணும்வாயும் துவர்ந்து, ஒரு பகலா யிரமூழியாலோ வென்று தளர்ந்து,* நினைந்துநைந்துள் கரைந்துருகி நிற் குமாழ்வார்களே ஸாதுக்களென்கிறார். அந்த அருளிச் செய்திருக்கிற பரம போக்யபங்க்திகள் சங்கரபாஷ்யாதிகளில் அணுவளவும் காணக்கிடையா; அவற்றை திவ்யஸூக்திரஸிகர்கள் நிச்சலும் சிந்தனை செய்யவேணும்.

51. அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் வருமாறு—

"साधवः—उक्तलक्षणधर्मशीला वैष्णवाग्रेसराः मत्समाश्रयणे प्रवृत्ताः मन्नामकर्मस्वरूपाणां वाङ्मनसागोचरतया मद्दर्शनेन विना स्वात्मधारणपोषणादिकमलभमानाः क्षणमात्रकालं कल्पसहस्रं मन्वानाः प्रशिथिलसर्वगात्रा भवेयुरिति मत्स्वरूपचेष्टितावलोकनालापादिदानेन तेषां परित्राणाय" என்று.

52. இந்த கீதாபாஷ்யபங்க்திகள் ஆழ்வார்களின் தன்மைகளை அவர் களின் திவ்ய ஸூக்திகளைக் கொண்டே யருளிச் செய்தவை. [பதங் களின் மேலே சிறிது விவரிக்கிறோம்.] 'வைஷ்ணவாக்ரேஸரா:' என்பது இங்கு விசேஷ்யவாசகபதம். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திலே முன்னிற் பவர்கள் ஆழ்வார்களேயென்பது நிர்விவாதம். மற்றுமுள்ள விசேஷணங்க ளெல்லாம் அவர்களுக்கே பொருந்துமவையாயும் அவர்களையே சுட்டிக்காட்டு மவையாயும் அமைந்திருக்கின்றன. எங்ஙனே யென்னில்; [उक्तलक्षणधर्मशीलाः—உக்தலக்ஷண தர்மசீலா:] *யதாயதாஹி தர்மஸ்ய* என்கிற கீழ்ச்லோகத்தில் "धर्मस्य - वेदोदितस्य चातुर्वर्ण्यचातुराश्रम्यव्यवस्थया अवस्थितस्य" என்று தாமருளிச் செய்திருக் கையாலே அதுவே 'உக்தலக்ஷணதர்ம' என்பதனால் பராமர்சிக்கப்படுகிறது. ஆழ்வார்கள் வேதோக்தங்களான வர்ணாச்ரம தருமங்களை எள்ளளவும் கட வாதவர்கள் என்றதாயிற்று. தேசிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் (25) ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்தில் "ஆழ்வார்களுடைய வ்ருத்தாந்தங்களையுமாராய்ந்தால் அவர்கள் ஸ்வஜாதி நியமத்தைக் கடந்தமையில்லை" என்றருளிச் செய்திருப் பது இவ்விடத்திற்குச் சேர அநுஸந்தேயம். [मत्समाश्रयणे प्रवृत्ताः—மத்ஸமாச்ர யணே ப்ரவ்ருத்தா:] *துயராறு சுடரடி தொழுதெழென் மனனே* என்றும் *ஆழிவண்ண! நின்னடியிணை யடைந்தே னென்றும் சொல்லி பகவத்ஸ்ர யணத்திலே ஒருப்பட்டவர்கள் என்றபடி. [मन्नामकर्मस्वरूपाणां वाङ्मनसागोचरतया— மந்நாமகர்மஸ்வரூபாணாம் வாங்மநஸ அகோசரதயா]. எம்பெருமானுடைய திருநாமங்களையும் சேஷ்டிதங்களையும் ஸ்வரூபத்தையும் பேசப்புகுந்து *என்சொல்லிச் சொல்லுகேன்* என்றும், *நெஞ்சால் நினைப்பரிதால் வெண் ணெயூணென்னு மீனச் சொல்லே * என்றும் வாக்குக்கும் மநஸ்ஸுக்கு மெட் டாதவையென்று சொன்னவர்களு மாழ்வார்களே. [मद्दर्शनेन विना स्वात्मधारणपोषणादिक-मलभमानाः—மத்தர்சநேந விநா ஸ்வாத்மதாரண போஷணாதிகம் அலப

மாநா:] * தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே * என்றும் * காணவாரா யென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து.........* என்றும் சொல்லிக் கண்ணாரக் கண்டாலல்லது தரிப்புப் பெருதவர்களு மாழ்வார்களே. [क्षणमात्रकालं कल्पसहस्रं मन्वाना:—க்ஷணமாத்ரகாலம் கல்பஸஹஸ்ரம் மந்வாநா:] * ஒரு பகலாயிர மூழியாலோ * *ஊழியில் பெரிதால் நாழிகை யென்னும் * ஓயும் பொழுதின்றி ஊழியாய் நீண்டதால் * என்றுபேசி * அவனை விட்டகன்று உயிராற்றகில்லாதவர்களும் ஆழ்வார்களே. [प्रशिथिलसर्वगात्रा:—ப்ரசிதில ஸர்வகாத்ரா:] * காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும் * காலுமெழா கண்ண நீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கிக் குரல் மேலுமெழா மயிர்கூச்சுமறு * உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்தேன் * உரோம கூபங்களாய்க் கண்ண நீர்கள் துள்ளஞ் சோரத் துயிலணை கொள்ளேன் * என்று சொல்லி ஸர்வாவயவ சைதில்யத்தைக் காட்டினவர்களும் ஆழ்வார்களே. இப்படிப்பட்ட ஆழ்வார்களுக்கு விலக்ஷணநுபவம் தந்து ரக்ஷணம் செய்வதற்காகவே எம்பெருமான் திருவவதாரங்கள் செய்தருள்வதாக எம்பெருமானுருடைய பாஷ்ய ப்ரக்ரியை. [அவதார ரஸங்களை நன்கு அநுபவித்தவர்கள் ஆழ்வார்களேயென்று கருத்து.] இப்படிப்பட்ட பங்க்திகள் இதரபாஷ்யகாரர்களிடத்திலே லவலேசமும் காணக்கிடைப்பதில்லை; ஆழ்வார்களைப்பற்றியும் அவர்களின் தன்மைகளைப்பற்றியும் சங்கராசார்ய மத்வாசார்யாதிகளுக்கு வ்யுத்பத்தியேயில்லாமைதான் அதற்குக்காரணம்.

---

## 8. அநந்தகுணஸாகரஸமக்தியும் ஆழ்வாரருளிச்செயலும்.

53. ஸ்வாமி, ஸ்ரீ பாஷ்யம் முதலான திவ்ய க்ரந்தங்களில் எம்பெருமானுக்கு இட்டருளும் விசேஷணங்களில் * அநந்தகுணஸாகரம் * என்றும் * அபரிமிதோதாரகுணஸாகரம் * என்றும் விசேஷணமருளிச் செய்யக் காண்கிறோம். குறிப்பாக ஓரிட மெடுத்துக் காட்டுகிறோம்—இரண்டாமத்யாயத்தின் தொடக்கத்தில் ஸ்ரீ பாஷ்யத்தில் * அபரிமிதோதார குணஸாகரம் பரம் ப்ரஹ்ம வேதாந்த வேத்ய மித்யுக்தம் * என்றுள்ளது. இங்கு பரப்ரஹ்மசப்தம் ப்ரதமாவிபக்தியேயொழிய த்விதீயாவிபக்தியன்று. இதற்கு விசேஷணமான அபரிமிதோதாரகுண ஸாகரம் என்பதும் ப்ரதமாந்தமாகவே கொள்ளப்பட வேண்டியதாயிற்று. ஸாகரசப்தம் நித்யபும்லிங்கமாகையாலே குணஸாகரோ ப்ரஹ்ம என்று சொல்லத்தகுமேயொழிய குண ஸாகரம் ப்ரஹ்ம என்று சொல்லத்தகாது. எம்பெருமான் திருக்கல்யாண குணங்களுக்குக் கடலாகவுள்ளவனென்று இப்படிப்பட்ட பொருளே ஸ்வரஸமாகத் தோன்றுமாதலால் "குணாநாம் ஸாகர:" என்று தத்புருஷ ஸமாஸம் விவக்ஷிதமாவதற்கே ஔசித்யமுள்ளது. இப்படி ஸமாஸம் கொண்டால் குணஸாகரம் ப்ரஹ்ம என்கிற இந்த ப்ரயோகம் உபபத்தி யடைவதற்கு வழியே கிடையாது. தத்புருஷ ஸமாஸத்தை விட்டு பஹுவ்ரீஹி ஸமாஸம் கொண்டால் (அதாவது) "அநந்த: குணஸாகர: யஸ்ய தத்" என்றும், அபரிமித: உதாரகுணஸாகர: யஸ்ய தத்" என்றும் ஸமாஸம் கொண்டால்......ஸாகரம் என்று நபும்ஸகலிங்கமாகப் பொருந்தும். ச்ருதப்ரகாசிகாசார்யர் இப்படி பஹுவ்ரீஹி

ஸமாஸத்தையே ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்கின்றார். எம்பெருமான் குணங்களுக்குக் கடல் போன்றிருப்பவன் என்று எங்கும் எல்லாரும் சொல்லி வருவதும் அநேக க்ரந்தங்களிலுள்ளதுமான இந்த ரீதியைவிட்டு, குணங்களைக் கடலாகச் சொல்லி அக்கடலை எம்பெருமான் உடையவன் என்று இங்ஙனே சொல்லுவதில் என்ன விசேஷம்? என்று சிலர் சங்கிப்பதுண்டு. எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியொன்று தவிர வேறு எந்த க்ரந்தத்திலும் இப்படி பஹுவ்ரீஹி ஸமாஸத்தினால் நிர்வஹிக்கப்படவேண்டியதான ப்ரயோகம் ஓரிடத்தில் கூடக் காணக் கிடைப்பதில்லை. தேடிப் பார்த்தால் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களின் க்ரந்தங்களில் கிடைக்குமே யொழிய மற்றையோருடைய க்ரந்தங்களில் அடியோடு கிடைக்கமாட்டாதென்று உறுதியாகக் கூறலாம்.

54. இப்படி விலக்ஷணமாக ஸ்வாமி அருளிச் செய்ததற்கு ப்ரபலமான மூலமுண்டு; *தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்* என்கிறபடியே ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளை வளர்ப்பதற்கே அவதரித்தவரான நம் பாஷ்யகாரர் ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளைத் தழுவியே அருளிச் செய்பவர் என்பதை நாம் பல சான்றுகள் காட்டி நிரூபித்திருக்கிறோமே; ப்ரக்ருதஸ்தலமும் அதில் தலையான சான்று. நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் (69) * மிகுந் திருமால் சீர்க்கடலை யுள் பொதிந்த சிந்தனையேன் * என்று அருளிச் செய்துள்ளார். இப்பாசுரத்தில் குணங்களானவை கடலாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. வண்டமிழ்மாமுனியான அகஸ்த்ய மஹர்ஷியானவர் உப்புக்கடலை யுட்கொண்டவ ரென்று ப்ரஸித்தி பெற்றவர்; நம்மாழ்வாரெனும் அருந் தமிழ் மாமுனியான தாம் உப்புக்கடலையுட்கொள்ளாமல் பகவத் குணமாகிய அமுதக்கடலை யுட்கொள்ளப்பெற்றவரென்று காட்டிக் கொண்டபடி. இந்த ஸ்ரீஸூக்தியையே அவலம்பித்து ஆசார்ய ஹ்ருதயத்திலும் (3—6.) மேகாபதேச சூர்ணையில் *பூண்ட நாள் சீர்க்கடலையுட் கொண்டு* என்றருளிச் செய்யப்பட்டது. மேகமானது கடலை க்ரஸிப்பதுபோல, மேகமாகச் சொல்லப்படுகிற ஆசார்யர்களும் எம்பெருமானுடைய திருக்குணங்களாகிற கடலை க்ரஸிப்பவர்கள் என்றது.

55. ஆக ஆழ்வார் திருவுள்ளத்தில் பகவத்குணங்கள் கடலாகத் தோன்றினபடியாலே அந்தச் சாயையிலேயே அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றிய எம்பெருமானார் பஹுவ்ரீஹிஸமாஸத்தையிட்டு நிர்வஹிக்கப்படவேண்டியதான ப்ரயோகத்தைச் செய்தருளி குணங்களுக்கு ஸாகரத்வத்தை நிலைநாட்டியருளினாராயிற்று. இங்கு வேறு காரணமெதுவும் சொல்ல முடியாது.

56. ப்ரஸங்காத் ஏதத் ஸமசீலமான மற்றொரு விஷயமும் இங்குத் தெரிவிக்கப்படுகிறது. ஸ்தோத்ரரத்னம் முதல்ச்லோகத்தில் *அகாத பகவத் பக்தி ஸிந்தவே* என்ற விடத்தில் பாஷ்யம் செய்தருளாநின்ற தேசிகன், ஸ்ரீமந்நாதமுனிகள் பகவத்பக்திக்கு ஸிந்துவானவர் என்று தத்புருஷனாக முந்துற விவரித்து, உடனே “பக்திம் வா ஸிந்துத்வேந ரூபயித்வா பஹுவ்ரீஹி:” என்றருளிச் செய்தார். அகாதமான பகவத்பக்தி ஸாகரத்தையுடையவர் என்றபடி. இப்படி

பஹுவ்ரீஹியைக் கொண்டது *காதல் கடல்புரைய விளைவித்த* (5-3-4) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் பக்தியைக் கடலாகக் கூறியிருப்பது பற்றியே யென்றுணர்க. தேசிகனுக்கு இப்படிப்பட்ட வழியைக் காட்டியருளியவர் பெரியவாச்சான்பிள்ளை என்பதுமிங்கு உணரத்தக்கது. ... (8)

## 9. கப்யாஸச்ருதியின் பொருளும் - அருளிச்செயலும்

57. ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமை கூறுமிடங்களை ஊன்றி நோக்கினல் அபூர்வமான சில விசேஷங்கள் அறியப் பெறலாம். ஸ்ரீராமாநுஜர் திவ்யப்ரபந்த வமுதக் கடலில் எவ்வளவு ஆழங்காற்பட்டவரென்பது மிவ்வாராய்ச்சியில் தெரியவரும். எம்பெருமானுடைய திருக்கண்களுக்குப் பெரும்பாலும் தாமரையை உவமை கூறுகிருன்ருர்களெனினும் அந்தத் தாமரைக்கு ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமான விசேஷணமிடுகிருர்கள் ஆழ்வார்கள். அந்த விசேஷணங்களை நாம் மேல்நோக்காகப் பார்க்கும் போது விசேஷமொன்றையும் அறியகில்லோம். எதுகை யின்பம் நோக்கியும் மோனையின்பம் நோக்கியும் செய்யுளைப் பூரிக்கவேண்டியும் ஸாதாரண விசேஷணங்களை யிடுகிருர்களென்றும் சிலர் நினைத்தொழிகிருர்கள். எம்பெருமானுர் எதையும் ஆழ்ந்து நோக்குபவராதலால் அந்த விசேஷணங்களைக் கொண்டு வேதாந்தப் பொருள்களை நிர்வஹிக்கும் பரிசு நெஞ்சால் நினைப்பரிது. ப்ராக்ருதநிரூபணங்களில் இது சிகரமாகக் கொள்ளத்தகும்.

58. ஸ்வாமி யாதவப்ரகாசரிடத்தில் வேதாந்த ச்ரவணம் பண்ணும்போது பல விடங்களிலோ சில விடங்களிலோ அபிப்ராய பேத முண்டானதாகச் சொல்லப்படுகிறது. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் காணப்படுகிறவொரு விஷயம் வருமாறு—"பின்பு ஒருநாள், இளையாழ்வார் யாதவப்ரகாசனுக்கு அப்யஞ்ஜநத்தொழில் செய்யாநிற்க, அவ்வளவிலே *तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी—தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ* என்கிற ச்ருதிக்கு அவன் அநுசிதார்த்தம் சொல்ல, அது கேட்டு இவர்க்கு சோகமுண்டாய் அந்த சோகாச்ரு அவன் தொடையிலே விழ, அது நெருப்புப் பட்டாற்போலே அவன் தொடையைச் சுட, அவனும் பதறி இவர் முகத்தைப் பார்த்து 'உமக்கு துக்கமாவானென்?' என்ன, இவரும்......அயதார்த்தம் கேட்டவாறே துக்கமாயிற்று என்ன, யாதவப்ரகாசனும் அது கேட்டுக் குபிதனாய் 'நான் சொன்னபடி கேட்கில் வாசித்திரும், இல்லாவிடில் விட்டுப்போம்' என்ன, இவரும் அப்படியே சிந்தைகலங்கித் தவிர்ந்திருக்க" என்று.

59. கருடவாஹந பண்டிதரியற்றிய திவ்யஸூரிசரிதத்திலும் பதினேழாவது ஸர்க்கத்தில் 32, 33, 34 ஆகிய மூன்று சுலோகங்களினால் இவ்விஷயம் தெரிவிக்கப்பட்டுள்ளது; ஆனால் கப்யாஸ ச்ருதிக்கு அபார்த்தம் சொன்னதாக விசேஷித்து அங்கு எடுத்துக் காட்டப்படவில்லை. "अभ्यङ्ग विरचयतो गुरो विरुद्धं व्याख्याति श्रुतिशिखरैकवाक्यतत्त्वम्" என்று பொதுவாகவுள்ளது. ஸ்வா

மிக்கு சோகாச்ரு பெருகி அவனது தொடையைச் சுட்டதான கதை கூறப்பட்டே யிருக்கிறது. அது உண்மையான கதையென்பது நிஸ்ஸந்தேஹம்.

60. ஸ்வாமிக்கு சோகாச்ரு பெருகும்படியாக யாதவர் என்ன அபார்த்தம் சொல்லி விட்டாரென்று விமர்சிப்போம். கப்யாஸ மென்பதற்கு கபியின் ஆஸமென்று கொண்டு [அதாவது மர்க்கட ப்ருஷ்டமென்று கொண்டு] பொருள் சொன்னதாகவும், இப்படி நிஹீநோபமை சொல்லுவது கூடாதாகையால் ஸ்வாமிக்கு சோகமுண்டாயிற்றென்றும் தெரியவருகிறது. இங்கே விமர்சநீயாம்சங்கள் பலவுண்டு, கேண்மின்; மர்க்கட ப்ருஷ்ட மென்கிற பொருளை யாதவ ப்ரகாசர் தாமே கல்பனை செய்து சொன்னாரா? அல்லது அவர்க்கு முன்னே யாராகிலும் சொல்லி யிருக்கிறார்களா? என்று பார்க்க வேண்டும். அன்றியும், மர்க்கட ப்ருஷ்டத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கே உவமையாகச் சொன்னார்களா? அல்லது அதைப் புண்டரீகத்திலே அந்வயித்து மர்க்கட ப்ருஷ்டம் போன்றதான யாதொரு புண்டரீக முண்டோ அதற்கொப்பான திருக்கண்கள் என்று பொருள் கொண்டார்களா? என்றும் விமர்சிக்கவேண்டும்.

61. மர்க்கட ப்ருஷ்டமென்கிற பொருளை சங்கராசார்ய ரெழுதி வைத்தாரென்றும் அவரைப் பின்பற்றி யாதவர் கூறினாரென்றும் சிலர் கூறுகின்றார்கள். இங்குத் தெரிந்துகொள்ளவேண்டிய உண்மையான விஷயம் தெரிவிக்கப்படுகிறது. * भगवद्बोधायनकृतां विस्तीर्णां ब्रह्मसूत्रवृत्तिं पूर्वाचार्याः सञ्चिक्षिपुः :— பகவத் போதாயந க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:*என்கிற ஸ்ரீபாஷ்யோபக்ரம ஸூக்தியில் பூர்வாசார்ய பதத்தினால் விவக்ஷிதராக ச்ருத ப்ரகாசிகாசார்யரால் காட்டப்பட்டுள்ள த்ரமிட பாஷ்யகாரரே இவ்வர்த்தத்தை யெழுதியிருப்பதாக ச்ருத ப்ரகாசிகாபட்டரும் வேதாந்த தேசிகனும் மற்றும் பலரும் உரைத்துள்ளார்கள். *தஸ்ய யதா கப்யாஸமித்யாதி ச்ருதி வாக்யத்திற்கு இந்த த்ரமிட பாஷ்யகாரர் ஆறு அர்த்தங்களை யெழுதி வைத்திருப்பதாகவும், அந்த ஆறு பொருள்களையும் அவர் அவிசேஷமாகவே யெழுதி வைத்திருந்தாலும் முந்தின மூன்று பொருள்களைப் பூர்வ பக்ஷார்த்தங்களாகவும் பிந்தின மூன்று பொருள்களை ஸித்தாந்தார்த்தங்களாகவும் கொள்ள வேணு மென்று * अन्तस्तद्धर्मोपदेशात्- அந்தஸ் தத்தர்மோபதேசாத்* என்ற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் கீழ் ச்ருதப்ரகாசிகாசார்யர் எழுதியுள்ளார்.

62. அங்கு “ (तस्य यथेति) अस्य वाक्यस्य वाक्यकारेण षडर्थाः पूर्वपक्षतया सिद्धान्तत्वेन चोक्ताः। तत्र अर्थत्रयस्य पूर्वपक्षत्वं तत्स्वभावादेवावगतम्........” இத்யாதி ஸ்ரீஸூக்திகள் காண்க. வேதார்த்த ஸங்க்ரஹதாத்பர்ய தீபிகையிலும் இங்ஙனமே யெழுதியுள்ளார்.

63. தேசிகன் ஸ்தோத்ரபாஷ்யத்தில் [க: புண்டரீக நயன:] என்ற விடத்தில்— “यद्यपि द्रमिडभाष्ये * तस्य यथा कप्यासमित्यादेः षडर्थाः प्रोक्ताः तथाऽपि औचित्यात् त्रय एव स्वीकर्तव्याः” என்று ஸாதித்திருக்கிறார். இதன் பொருள்—த்ரமிடபாஷ்யத்தில் * தஸ்ய

யதா கப்யாஸ மித்யாதிக்கு ஆறு பொருள்கள் எழுதப்பட்டிருந்தாலும் தகுதியை நோக்கி மூன்று பொருள்களே கொள்ளத்தக்கன என்பதாம்.

64. ஆக, மர்க்கடப்ருஷ்ட மென்கிற அர்த்தத்தையும் த்ரமிட பாஷ்யகாரரே எழுதிவைத்திருப்பதாகக்காட்டி, அந்த அர்த்தத்தை அவர் பூர்வபக்ஷார்த்த மாக எழுதியிராமற் போனாலும் அர்த்தஸ்வபாவத்தைக் கொண்டு பூர்வபக்ஷார்த் தமாகவே நாம் கொள்ளவேணுமென்று முடிக்கப்பட்டிருக்கின்றது. த்ரமிட பாஷ்யகாரர் யாதவ ப்ரகாசரைப்போல் விமதரல்லர்; அவரை ஸ்வாமி யெம் பெருமானுர் அடிக்கடி கொண்டாடுகிருர். வேதார்த்த ஸங்க்ரஹத்திற் காண லாமது. அவ்வர்த்தம் ஸ்வாமிக்கு ருசிக்கவில்லை யென்பது வாஸ்தவம். பூர்வ பக்ஷார்த்தத்தை யாதவர் ஸித்தாந்தப் பொருளாகவே கூறிவிட்டார். அதனாலேயே ஸ்வாமிக்குக் கண்ணீர் பரவசமாகப் பெருகிற்று. அதைக் கொண்டே அவ்வர்த்தத்தைப் பூர்வ பக்ஷார்த்தமாகக் கொள்ளவேணுமென்று ச்ருத ப்ரகாசிகாசார்ய ப்ரப்ருதிகள் எழுதி யருளினார்கள்.

65. மர்க்கட ப்ருஷ்டத்தை எம்பெருமான் திருக்கண்களுக்கு உவமை கூறினதாகவல்லாமல் புண்டரீகத்திற்கு உவமை கூறினதாகவும் காண்கிறது. அந்தரதிகரண ச்ருத ப்ரகாசிகையில் “ मर्कटपृष्ठं पुण्डरीकंच किमुपमानद्वयम् ? उत एकोपमा ? तत्र उपमाद्वित्वमयुक्तम्....” இத்யாதி ஸ்ரீஸூக்திகளை ஸேவிப்பது. அது நிற்க.

66. இங்கு எம்பெருமானார் ஸித்தாந்தப் பொருளாகத் திருவுள்ளம் பற்றின அர்த்த விசேஷங்கள் ஆழ்வார்கள் திருவுள்ளம் பற்றினவை என்கிற காரணத் தினாலேயே விசேஷித்து பஹுமாந பாத்ரங்களாயின வென்பதை சில வில க்ஷணபாக்ய சாலிகளே அறியப்பெறுவர்கள். ஆழ்வார்களுகந்த அர்த்த மென்றே எம்பெருமானாருகந்தது. அதனை விவரிக்கிறோமினி.

67. கப்யாஸம் என்று சாந்தோக்யோபநிஷத்திலுள்ள விலக்ஷணமான சொல் லுக்கு மூன்று வகையான வ்யுத்பத்திகளைக் கொண்டு மூன்று அர்த்தங்கள் அவதரித்தன. அவ்வர்த்த விசேஷங்களைக் காட்டுகின்ற ஸ்வாமி ஸ்ரீஸூக்தி யாவது— *கம்பீராம்பஸ்ஸமுத்பூத-ஸும்ருஷ்டநாள-ரவிகரவிகஸிதபுண்டரீக தலாமலாயதேக்ஷண:*என்பது. ஆழ்ந்த தண்ணீரில் வாழ்வதும், நாளமென் கிற தண்டோடு கூடியிருப்பதும், இரவியின் கதிர்களால் மலரப்பெற்றதுமான புண்டரீகத்தின் இதழ் போல் நீண்ட திருக்கண்களையுடையவனென்கை. கப்யாஸம் என்கிற இச் சிறு சொல்லால் இவ்வளவு அர்த்தங்கள் எங்ஙனே தோற்றுவிக்கப்படுகின்றனவென்று ஸந்தேஹம் எழக்கூடும். அந்த ஸந்தே ஹத்தைத் தீர்க்க கப்யாஸம் என்பதற்குச் செய்யக்கூடிய வ்யுத்பத்திகளை விவ ரிக்கவேண்டியதாகும். அது கடினமான ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரப்ரக்ரியையாக இருப்பதால் அதை ஸம்ஸ்க்ருதபாஷையி லெழுதிய சில நூல்களில் விவரித் துள்ளோம். அங்குக் கண்டுகொள்வது. எம்பெருமானார் ஆதரித்தருளின அர்த்தங்கள் மூன்றும் கப்யாஸம் என்கிற சப்தஸந்நிவேசத்தில் கிடைத்தவையே யென்பதை பகவத்ராமாநுஜ பக்தர்கள் திடமாகக் கொண்டிருப்பார்கள்.

68. இங்கு முக்கியமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் விமர்சிக்கவேண்டியதென்னவென்றால், எம்பெருமானார் இவ்வர்த்தங்களை ஆதரித்தருள்வதற்கு ஏதேனும் விசேஷஹேதுவுண்டோவென்பதே. கப்யாஸம் என்னுஞ்சொல்லுக்கு ஸ்வாமி ஆதரித்த அர்த்தங்களுக்கு மூலங்காட்டவேண்டுமானால் ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களில் மூலமாகக் காட்டக்கூடியது எதுவுமேயில்லையென்று திடமாகச் சொல்லுவேன். ஸ்வாமி யெம்பெருமானார் ஆதரித்தருளும் அர்த்தவிசேஷங்களெல்லாம் ஆழ்வாரருளிச்செயல்களையே மூலமாகக் கொண்டவை யென்பது நம் பூருவாசார்யர்களின் ஸித்தாந்தம். அந்த அடிப்படையின்கீழ் அடியேன் ஸ்ரீ பாஷ்யாதிகளிலிருந்து பலபல விஷயங்களை யெடுத்து நிரூபித்துவருகின்றேன். அத்தகைய நிரூபணங்களுள் இது தலையான நிரூபணமென்று கொள்ளக்கடவது. கேண்மின்—

69. கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாயும், ஸம்ம்ருஷ்டநாளமாயும், ரவிகரவிகஸிதமாயுமிருக்கிற புண்டரீகத்தை எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு உவமையாகச்சொல்லுவது பொருத்தமென்று எம்பெருமானாருடைய திருவுள்ளத்திலே தோன்றினது திவ்யப்பிரபந்தங்களில் அவர் ஆழ அவகாஹித்திருந்ததனாலேயே. ஆழ்வார்கள் எம்பெருமானுடைய திருக்கண்ணழகைப்பற்றிப் பேசுமிடங்களில் மேலே காட்டிய மூன்று விசேஷங்களையும் வெகு அற்புதமாகப் பேசியுள்ளார்கள். அதை அடைவே விவரிக்கிறேன்.

70. [கம்பீராம்பஸ்ஸமுத்பூதபுண்டரீக]—ஜலஜமென்றும் அம்புஜமென்றும் அம்போஜமென்றும் நீரஜமென்றும் பேர்பெற்ற புண்டரீகமானது நீரில் நின்றுமுண்டாகாமல் மற்றொன்றினின்று உண்டாகப்ரஸக்தியில்லாமையாலே "அம்பஸ்ஸமுத்பூத" என்றதன் கருத்து, நீரை விட்டுப் பிரியாமலிருக்கையைச் சொல்லுவதேயாம். "தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்யன்தானே நீரைப் பிரிந்தால் அத்தையுலர்த்துமாபோலே" என்கிற ஸ்ரீ வசனபூஷண ஸ்ரீஸூக்தியும், *கமலம் ஜலாதபேதம் சோஷயதி ரவிர் ந தோஷயதி* என்கிற ப்ரமாணமும் இங்கே அநுஸந்தேயம். நீரைவிட்டுப் பிரியாமலிருக்கிற தாமரைபோன்ற திருக்கண்களையுடையவன் என்றதாயிற்று. "நீரார் கமலம் போல் செங்கண்மாலென்றொருவன்" என்கிற சிறிய திருமடற்பாசுரத்திலும், "அழறலர் தாமரைக்கண்ணன்" (58) என்ற திருவிருத்தப் பாசுரத்திலும் ஆழ்வார்கள் திருவுள்ளம் பற்றிய அர்த்தமென்றே இஃது எம்பெருமானாரால் ஆதரிக்கப்பட்டது. "நீரார் கமலம்போல்" என்றவிடத்தில் (நீரார்) என்ற விசேஷணம் எதுகையின்பத்திற்காக மாத்திரம் இடப்பட்டதன்று. "அழறலர் தாமரைக்கண்ணன்" என்றவிடத்து நம்பிள்ளையீட்டில் *கப்யாஸச்ருதி ஸ்பஷ்டமாகவே உதாஹரிக்கப்பட்டுள்ளது. அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு— "[அழறலர் தாமரைக்கண்ணன்] அழற்றிலே நின்றலர்ந்த தாமரைப்பூப் போலேயிருந்துள்ள திருக்கண்களையுடையவன். *யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ* என்னக்கடவதிறே." இங்கு வாதிகேஸரியின் ஸ்வாபதேசவுரை வருமாறு—"அழறு என்று அளறு; நீரிலும் சேற்றிலும் நின்று அலர்ந்து செவ்விமாறாத தாமரை போன்ற கண்ணையுடையவனென்றபடி." என்று.

71. ஆக, ‘ நீரார் கமலம்போல் செங்கண் மாலென்றொருவன்” என்ற சிறிய திருமடற் பாசுரத்தையும், ‘அழறலர் தாமரைக் கண்ணன்’ என்ற திருவிருத்தப் பாசுரத்தையும் * தண்பெருநீர்த் தடந் தாமரை மலர்ந்தாலொக்குங் கண் பெருங் கண்ணன் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையும் திருவுள்ளம்பற்றியே ‘கம்பீராம்பஸ் ஸமுத்பூத’ என்ற விசேஷணத்தை ஸ்வாமி யிட்டருளினரென்றது பொருத்தமாக முடிந்தது.

72. *அழறலர் தாமரைக் கண்ணன் * என்கிற திருவிருத்தப் பாசுரத்தில் ஜலவாசகமான சப்தமின்றிக்கே சேற்றுக்கு வாசகமான சப்தமேயிருப்பதால் இப்பாசுரம் * கம்பீராம்பஸ்ஸமுத்பூதமென்னு மதுக்கு ப்ரமாணமாக மாட்டாதென்று கலங்கிச் சிலர் இங்கு ப்ரத்யவஸ்தானம் செய்தார்கள். அவர்களைத் தெளிவிக்கிறோம். தாமரையானது வெறுந்தண்ணீரில் உண்டாகவே மாட்டாது ; சேற்றில்தானுண்டாகும் ; இது ப்ரத்யக்ஷஸித்தமாதலால் இதில் விவாதப்ரஸக்தியே யில்லை. ‘கம்பீராம்பஸ் ஸமுத்பூத’ என்றருளிச் செய்த ஸ்வாமிக்கும், முந்துற முன்னம் இப்பொருளை வெளியிட்ட த்ரமிடாசார்யருக்கும் ஜலவாசகமான சப்தத்தால் விவக்ஷிதம் சேறுதானென்று கொள்வதில் அருமையில்லை. ம்ருத்திகா மிச்ரமான ஜலத்துக்குத்தானே சேறென்று பெயர். வெறும்மண்ணை பங்கமென்றோ சேறென்றோ சொல்லமாட்டார்கள். தாமரையைப்பற்றின ப்ரஸ்தாவம் வருமிடங்களில் [பங்க கர்தம ஜம்பாலாதி] பதங்களும் ஜலவாசக பதங்களும் பர்யாயமாகவே கொள்ளத்தக்கன. இது வாதிகேஸரியுரையில் ஸூசிதம். நம்பிள்ளையீட்டில் * அழறலர் தாமரை * என்றதையே குறிக்கொண்டு கப்யாஸச்ருதி ஸ்பஷ்டமாக உதாஹரிக்கப்பட்டிருக்க, அதையும் நோக்காது ஆக்ஷேபிப்பது வ்ருதாபிநிவேச விஜ்ரும்பிதமத்தனை. * துஷ்யதுந்யாயேந *அழறலர் பாசுரத்தை விட்டிட்டாலும், *நீரார் கமலம் போல் செங்கண்மால்* தண்பெருநீர்த்தடந்தாமரை மலர்ந்தாலொக்குங்கண் பெருங்கண்ணன்* என்கிற பாசுரங்களுக்குக் கண்ணழிவில்லையே.

73. [ஸூம்ருஷ்ட நாள புண்டரீக] நீரை விட்டுப் பிரிந்த தாமரைக்கு சோபையில்லாதது போலவே நாளத்தை விட்டு நீங்கின தாமரைக்கும் சோபையில்லாமையாலே தாமரைக்கு நாளத்திலிருப்பும் அவச்ய வக்தவ்யமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச்செயலிலுள்ளது. திருவிருத்தத்தில் *வன்காற்றறைய* என்கிற பாட்டிலே “எம்பிரான தடங்கண்கள்—மென்கால் கமலத் தடம் போல் பொலிந்தன” என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. கமலத்திற்கு இடப்பட்டிருக்கிற ‘மென்கால்’ என்னும் விசேஷணத்திற்கு ‘மெல்லிய நாளத்திலே யிருக்கின்ற’ என்பது பொருள். (நாளமாவது தண்டு). கமலத்திற்கு அது கால் போன்றிருத்தலால் (கால்) என்னுஞ் சொல்லால் குறிக்கப்பட்டது. நாளமென்கிற பொருளையே பூருவர்களும் உரைசெய்துள்ளார்கள். ஆக இந்த திவ்ய ஸூக்திக்குச் சேர (ஸூம்ருஷ்டநாள) என்றருளிச் செய்யப்பட்டது. இவ்வகையில் மற்றும் பல சந்தைகளும் காட்டலாம். ஆயினும் இஃதொன்றே போதுமிப்போது. “மென்கால்” என்ற சந்தையை நோக்கியே (ஸூம்ருஷ்டநாள) என்றது.

74. [ரவிகரவிகஸித புண்டரீக.] தாமரை நீரிலிருந்தாலும் நாளத்திலிருந்தாலும் ஸூர்ய கிரணங்களால் அலர்த்தப்பட்ட நிலையில்தான் எம்பெருமானுடைய திருக்கண்களுக்கு ஒப்பாகுமாதலால் இந்த விசேஷணமும் ஆவச்யகமாயிற்று. இதுவும் ஆழ்வாரருளிச் செயலிலுள்ளது. திருவாய்மொழியில் (5-4-9) *செஞ்சுடர்த் தாமரைக் கண் செல்வன் *என்றுள்ள பாசுரம் இங்கே கொள்ளக்கடவது. இவ்விடத்து ஈட்டிலும்* கப்யாஸ ச்ருதியை உதாஹரித்தருளியுள்ளார். இதில் *செஞ்சுடர்த் தாமரை* என்பதற்கு செவ்விய சுடரையுடைய தாமரை என்று பொருளாகிறது. அச்செவ்விய சுடர் அதற்கு எங்ஙனம் வந்ததென்னில், அதற்கு முன்னடியில் "அஞ்சுடர வெய்யோன்" என்று ஸூர்யனை ப்ரஸ்தாவித்திருக்கையாலே தததீந மென்று காட்டப்படுகிறது. ஆக ஸூர்ய ப்ரகாசமடியாக வந்த செவ்வியசுடரை யுடைய தாமரைப் பூப்போன்ற திருக்கண்களை யுடையவன் என்றதாயிற்று. இந்த ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளம் பற்றியே, "ரவிகரவிகஸித புண்டரீக" என்றருளிச் செய்தது. "செந்தண் கமலக்கண்......சிவந்த வாயோர் கருநாயிறு அந்த மில்லாக் கதிர் பரப்பி அலர்ந்த தொக்குமம்மானே" என்கிற திருவாய் மொழிப் பாசுரமும் இங்கு யோஜிக்க வுரியது. ["செங்கமலம் அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்" என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரமும் இங்கு நினைக்கத்தக்கது. ஆனால் அப்பாசுரத்தில் திருக்கண் ப்ரஸ்தாவ மில்லாமையாலே அது பரிபூர்ண ப்ரமாணமாகாது.] ஆக விப்படி ஆழ்வார்களினருளிச் செயல்களில் நன்கு ஊன்றியே ஸ்வாமி ராமாநுஜர் *கப்யாஸ ச்ருதியைப் பரம போக்யமாக நிர்வஹித்தருளினரென்று நிர்ணயிக்கப் பட்டதாயிற்று. (9)

## 10. புண்டரீகதளாமலாயதேக்ஷண—தத்வம்

75. "கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ" என்கிற உபநிஷத்வாக்யத்திற்கு விவரணமாக ஸ்வாமியருளிச்செய்த *கம்பீராம்பஸ் ஸமுத்பூதேத்யாதி திவ்யஸூக்தியில் "புண்டரீகதளாமலாயதேக்ஷண:" என்றிருப்பது ப்ரஸித்தம். மூல ச்ருதியில் "புண்டரீகமேவ மக்ஷிணீ" என்றிருக்கிறதேயொழிய வேறில்லை; உள்ள மூலத்திற்குச்சேர "புண்டரீகேக்ஷண:" என்றிவ்வளவே அருளிச்செய்திருக்கவேண்டும்; அதிகப்படியாக மூன்று பதங்களைச் சேர்த்திருக்கிறார். (1) தள. (2) அமல. (3) ஆயத. என்னுமிந்த மூன்று சொற்கள் எந்த ஆதாரத்தைக்கொண்டு ஸ்வாமியாலருளிச் செய்யப்பட்டனவென்று விசாரம் செய்யுமளவில், ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளை ஆதாரமாகக் கொண்டுதானென்று நிர்ணயிக்க ப்ராப்தம்.

76. ஆழ்வார்கள் 'தாமரைக்கண்ணன்' என்று சிலவிடங்களிலும் "தாமரைத்தடங்கண்ணன்" "கமலத்தடங்கண்ணன்" "கமலத்தடம் பெருங்கண்ணன்" என்று பலவிடங்களிலுமருளிச்செய்து போருகிறார்கள். வடமொழியிலுள்ள லகாரமும் ளகாரமும் தென்மொழியில் டகரமாக மாறுபடுவதுமுண்டு;

"லடயோரபேத:" என்கிற நியாயம் ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஜ்ஞர்களுமிசைந்ததே. தமிழர்கள் எழுத்துப்போலியென்பர்கள். ஏவஞ்ச, "பத்ரம் பலாசம் சதநம் தளம் பர்ணம் சத: புமாந்" என்ற அமரகோசத்தில் படிக்கப்பட்ட தளமென்கிற வடசொல்லே தமிழில் தடமென்றாயிற்று என்று திருவுள்ளம் பற்றிய எம்பெருமானார் 'கமலத்தடங்கண்ணன்' 'தாமரைத் தடங்கண்ணன்' என்னுமிடங்களிலே தளமென்னும் பொருளிலே தடமெனவந்ததென்று கொண்டு "புண்டரீகதள" என்றருளிச்செய்தார். தடமென்னுஞ் சொல்லுக்கு விசாலமென்கிற பொருளும் தடாகமென்கிற பொருளும் தளமென்கிற பொருளும் ஆங்காங்கு வியாக்கியான கர்த்தாக்களால் ஆதரிக்கப்படுகின்றன. "நீலத்தடவரைமேல் புண்டரீக நெடுந்தடங்கள் போல........ எம்பிரான் கண்ணின் கோலங்களே" என்ற திருவிருத்தப் பாசுரத்தில் தடமென்பதற்கு தடாகமென்கிற பொருள் பொருந்துகிறது.

77. இங்கே ரஸிகர்கள் ஆழ்ந்துபார்க்கவேண்டும்; "தாமரை நீள்வாசத் தடம்போல் வருவானே" [திருவாய்மொழி 8-5-1] என்பது முதலான பல பாசுரங்களிலும், * உத்புல்ல பங்கஜதடாகமிவோபயாநி ஸ்ரீரங்கராஜம் * பிபநயந! புரஸ் தே ரங்கதுர்யாபிதாநம் ஸ்திதமிவ பரிபுல்லத் புண்டரீகம் தடாகம் * இத்யாதிச்லோகங்களிலும் எம்பெருமானைத் தாமரைத் தடாகமாகச் சொல்லுகிறது. திருமேனியில் ஏகதேசமான திருக்கண்ணை மாத்திரம் தடாகமாகச் சொல்லுவதனால் திருக்கண்களின் ஒப்புயர்வற்ற வைசால்யம் தெரிவிக்கப்பட்டதாகிறது. * எம்பிரான்கண்ணின் கோலங்கள் புண்டரீகநெடுந்தடங்கள் போலப் பொலிந்ததாக நம்மாழ்வாரருளிச் செய்வதை உற்றுநோக்குபவரான எம்பெருமானார் வெறுமனே 'புண்டரீகே க்ஷண:' என்று மாத்திரம் சொல்லி நிற்பரோ? நம் போன்றவர்களால் அப்படி சொல்லி நிற்க முடியும்; அதுவும் சொல்லாதிருக்கவும் முடியும். அருளிச் செயலமுதக் கடலிலூறின எம்பெருமானார் ஆழ்வார்களுக்கும் மேலாக அநுபவிப்பவராகையாலே அவ்வாழ்வார்களீடுபட்ட படிகளையெல்லாம்தம்முடையஸ்ரீஸூக்தியிலே காட்டியல்லது நிற்கமாட்டாதவராய் ஸம்ஸ்க்ருதோப நிஷத்திலிருந்து சிறிதும், த்ரமிடோபநிஷத்திலிருந்து பெரிதும் கொள்ளுகிறார்.

78. "கமலக்கண்ணன்...அமலங்களாகவிழிக்கும்" என்கிற நம்மாழ்வார் பாசுரத்தை யுட்கொண்டே "புண்டரீகதளாமல...ஈக்ஷண:" என்றார் ஸ்வாமி. கீழே காட்டிய பாசுரங்களையும், "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட வப்பெரியவாய கண்கள்" என்கிற அத்விதீயமான திருப்பாணாழ்வார் பாசுரத்தையு மநுஸந்தித்துக்கொண்டே "புண்டரீக...ஆயதேக்ஷண:" என்றார். அருளிச் செயல்களை விட்டு வேறு ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களில் எதையாவது ஸ்வாமிக்கு ஆதாரமாகக் காட்டுவோமென்று ஸம்ஸ்க்ருத நூல்களிலே ப்ரமாணம் தேடுவாருமுண்டு. அப்படித் தேடுவார்க்கு "ராம: கமலபத்ராக்ஷ:" என்கிற ஸ்ரீராமாயணச்லோகம் கிடைக்கவுங்கூடும். அந்தச்லோகத்தை யெடுத்து நம்பிள்ளை ரஸகனமாக உபந்யஸித்தருள்வதுமுண்டு. ச்ருதப்ரகாசிகாசார்யரும் அந்த வசனத்தை யெடுத்துக்காட்டுவதுண்டு.

79. “இதிஹாஸபுராணுப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்” என்றும் “வேதோபப்ரும்ஹணர்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:” என்றும் சொல்லுகிற படியே இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணம் வேதோபப்ரும் ஹணங்களில் தலைமை பெற்றதாகையாலே அதிலுள்ள ‘ராம: கமலபத்ராக்ஷ:’ என்கிற வசனத்தை எம்பெருமானுர் ஆதாரமாகக் கொண்டாரென்ருல் இதை மறுக்க வேண்டிய ஆவச்யகதை சிறிதுமில்லை. அருளிச்செயல்களில் ப்ரவேசமில்லாத வர்களையும் ரஸிப்பிக்கவேண்டி ஸம்ஸ்க்ருத வசனங்களையுமெடுத்துக் காட்டுவர் கள் நம் ஆசார்ய ஸார்வபௌமர்கள். ஸம்ஸ்க்ருத வசனங்களால் அம்ருத பிந்து சீகரம் கிடைக்குமேயொழிய அமுதவெள்ளமென்னும்படியான அம் ருதப்ரவாஹம் கிடைக்காது; கிடைக்கவழியுமில்லை. * ஸ்ரீமாதவாங்க்ரி ஜலஜ த்வயநித்ய ஸேவாப்ரேமா விலாசய பராங்குச பாதபக்தரான ஸ்ரீராமாநுஜ ருடைய அநுபவங்கள் ஆழ்வாரருளிச் செயல்களிலிருந்தே வெள்ளங்கோத்து வெளிவருகின்றனவென்று மாத்ஸர்யசாலிகளும் மதித்துத்தீரவேண்டும். (10)

---

## 11. ஸ்ரீரங்ககத்ய ஸ்ரீஸூக்தியும், திருவாய்மொழியும்.

80. ஸ்வாமி யெம்பெருமானுர் அருளிச்செய்த ஸ்ரீரங்ககத்யத்தின் ஆரம்பம் “ स्वाधीनत्रिविधचेतनाचेतनस्वरूपस्थितिप्रवृत्तिभेदम् ” [*ஸ்வாதீநத்ரிவிதசேதநாசேதநஸ்வரூபஸ்திதிப்ரவ்ரு த்திபேதம்*] என்பது. சேதநர்களினுடையவும் அசேதநங்களினுடையவும் ஸ்வரூபமென்ன, ரக்ஷணமென்ன, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளென்ன இவை தன்னதீனமாயிருக்கப்பெற்றவன் எம்பெருமான்—என்பது மேலெடுத்த ஸ்ரீஸூக்தியின் கருத்து. இவ்விஷயத்தை ஸ்வாமி எந்த ப்ரமாணங்கொண்டு அருளிச்செய்தார்? என்று ஆராய்ச்சி செய்ததில் அடியேனுடைய புத்திக்கு எட்டியதை இங்கு விவரிக்கிறேன்.

81. ஸ்வாமி யெம்பெருமானுரருளிச் செய்யும் ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் திருவாய்மொழியை யநுஸரித்தே யிருப்பவை யென்பது பெரியார்களின் கொள்கை. இதை அடியேனுடைய விமர்சனம் நன்கு ஸ்தாபித் திருக்கின்றது. ப்ரக்ருத விஷயத்தைப்பற்றி விமர்சித்ததில், திருவாய்மொழி யின் முதற்பதிகத்தில் 4, 5, 6 ஆம் பாட்டுக்களில் முறையே நம்மாழ்வாரரு ளிச்செய்த அர்த்தத்தையே திரட்டி *ஸ்வாதீநேத்யாதி ஸ்ரீஸூக்தியை ஸ்வாமி யருளிச் செய்தாரென்று அறுதியிடப்படுகின்றது. *நாமவனிவனுவன்* என்கிற நாலாம் பாட்டின் கருத்தாவது—நாம் முதலான தன்மைப் பொருள் களும், அவன் இவன் உவன் என்கிற ஆண்பால் சுட்டுப் பொருள்களும், அவள் இவள் உவள் என்னும் பெண்பால் சுட்டுப்பொருள்களும், எவள் என்கிற பெண்பால் விளுப்பொருளும், அவர் இவர் உவர் என்னும் பலர்பால் சுட்டுப்பொருள்களும், அது இது உது என்னும் ஒன்றன்பால் சுட்டுப் பொருள்களும், எது என்னும் ஒன்றன்பால் விளுப்பொருளும், நசிக்குந் தன்மையுள்ள பொருள்களும், இவை உவை அவை என்னும் பலவின்பால்

சுட்டுப்பொருள்களும், நல்ல வஸ்துக்களும் கெட்ட வஸ்துக்களும் எதிர் காலப் பொருள்களும் இறந்தகாலப் பொருள்களும் ஆகின்ற எல்லாப் பொருள்களும் அந்த ஸர்வேச்வரனேயாம் (அதாவது) ஸர்வேச்வரனிட்ட வழக்கேயாம் என்பதாம். உலகத்திலுள்ள சேதநா சேதநப் பொருள்களெல்லாம் இந்தச் சிறிய பாட்டில் உக்திவைசித்திரியாலே அடக்கப்பட்டு, இவையெல்லாவற்றினுடையவும் ஸ்வரூபம் பகவானுடைய அதீனம் என்று தெரிவிக்கப்பட்டபடியால் இதுதன்னையே "ஸ்வாதீநத்ரிவித சேதநா சேதந ஸ்வரூப" என்றார் ஸ்வாமி. மேலுங்காண்மின்.

82. இதற்கடுத்த ஐந்தாவது பாட்டு *அவரவர் தமதமது* என்பது. இதன் கருத்தாவது, உலகில் பலவகைப்பட்ட அதிகாரிகள் இருக்கின்றார்களே; அவரவர்கள் தம்தமது உணர்ச்சிக்கு எட்டியபடியே ஓரோ தெய்வங்களை ஸ்வாமிகளாக வெண்ணி ஆச்ரயிப்பர்கள்; இப்படி அவரவர்களால் தொழப்படுகின்ற அந்தந்த தெய்வங்கள் அவரவர்கள் விரும்பின பலன்களைக் கொடுப்பதில் குறையற்றே யிருக்கின்றன; எதனாலே யென்னில்; ஸர்வஸ்வாமியான ஸ்ரீமந் நாராயணன் அவரவர் தம்தமது அத்ருஷ்டாநுஸாரமாய்ப் பலன் பெறும்படியாக அந்தந்த தெய்வங்களுக்கு அந்தர்யாமியா யெழுந்தருளி யுள்ளான்; அதனாலேதான்—என்பதாம். இதனால் சொல்லிற்றாவ தென்னென்னில்; உலகத்தில் நடக்கிற ரக்ஷணத்தொழில் யாவும் எம்பெருமானுடையதே; பிரமன் சிவனிந்திரன் முதலிய இதர தெய்வங்களைக் குறித்தும் மற்றும் அதிக்ஷுத்ர தெய்வங்களைக் குறித்தும் அவரவர்கள் வழிபாடுகள் செய்து தாம்தாம் கோரின பலன்களைப் பெறுவதாகக் கண்டாலும் அதுவும் எம்பெருமான் தானே அத்தெய்வங்களுக்கு உள்ளீடாக விருந்து நடத்துகிற ரக்ஷணமேயன்றி அத்தெய்வங்களே சுதந்திரமாகச் செய்து விடுகிற ரக்ஷணமன்று என்றதாயிற்று. "न हि पालनसामर्थ्यमृते सर्वेश्वरं हरिम्" [*நஹி பாலந ஸாமர்த்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்*] என்றும், "न सम्पदां समाहारे विपदां विनिवर्तने। समर्थो दृश्यते कश्चित्तं विना पुरुषोत्तमम्" [*ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே, ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித் தம் விநா புருஷோத்தமம்*] என்றுமுள்ள பிரமாணங்களையடியொற்றி யருளிச் செய்ததாமிது. ஆக இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக்கொண்டு ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதநஸ்வரூப ஸ்திதி" என்றார் ஸ்வாமி. [ஸ்திதியாவது ரக்ஷணம்.] சேதநாசேதந ரக்ஷணத்தையும் தன்னதீனமாகவுடையவனென்கை. மேலுங்காண்மின்.

83. இனி, இதற்கடுத்த ஆறாவது பாட்டு *நின்றனரிருந்தனர்* என்பது. இப்பாட்டின் கருத்தாவது, நிற்பவர்கள் இருப்பவர்கள் கிடப்பவர்கள் திரிபவர்கள் ஆக இப்படிப்பட்ட ப்ரவ்ருத்தி சீலர்களும், நில்லாதவர்கள் இராதவர்கள் கிடவாதவர்கள் திரியாதவர்கள் ஆக இப்படிப்பட்ட நிவ்ருத்தி சீலர்களும் எம்பெருமானிட்ட வழக்கே யென்பதாம். இதில், ப்ரவ்ருத்தி சீலர்களையும் நிவ்ருத்தி சீலர்களையும் சொல்லி யிருந்தாலும் அவர்கள் இங்கு விவக்ஷிதர்களல்லர்; கீழே *நாமவனிவனுவன்* என்கிற பாட்டிலேயே தர்மிகளான ஸக

லரையும் சேரப் பிடித்தெடுத்து அவர்கள் யாவரும் எம்பெருமானிட்ட வழக்கே யென்பது சொல்லி முடிந்த விஷயமாதலால் இப்பாட்டு அத்தோடு புநருக்தமாகக் கூடாது ; அதில் சொல்லப்படாத விஷயமே இங்குச் சொல்லப்பட்டதாகவேண்டும் ; ஆகவே, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திமான்கள் எம்பெருமானிட்ட வழக்கு என்று சொல்லுகிற விப்பாசுரமானது, அவரவர்களின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளாகிற தர்மங்கள் எம்பெருமானிட்ட வழக்கே யென்று சொல்லிற்றாகிறது. இப்போது, நின்றனரிருந்தனரித்யாதிக்குப் பொருள்—நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதலாகிற ப்ரவ்ருத்திகளும், நில்லாமை இராமை கிடவாமை திரியாமையாகிற நிவ்ருத்திகளும் எம்பெருமானதீனமே யென்கை யல்லது வேறல்ல. இது ஸகலபூர்வாசார்ய வ்யாக்கியான ஸித்தம்.

84. நின்றனர் என்கிற சொல்லுக்கு நிற்றல் என்னும் பொருள் எங்ஙனே கொள்ளக்கூடுமென்று சிலருடைய உள்ளம் கலங்கியே யிருக்கும் ; அன்னவர்களுக்குத் தெளிவு பிறக்கச் சொல்லுகிறோம். வேதத்தில், யாகஞ் செய்பவன் ஸோமபானஞ் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டது. ஸோமபானமாவது ஸோமலதையின் ரஸத்தைப் பருகுவது. [ஸோமலதை—ஆட்லாங்கொடி யென்பர்.] அந்த லதையை எப்படி ஸம்பாதிப்பது? காடுகளில் தானே சென்று ஸம்பாதித்து வருவதா? அல்லது விலைகொடுத்து வாங்குவதா? என்று விசாரம் வருகையில், *गोअर्घमेव सोमं करोति"—கோ அர்க்கமேவ ஸோமம் கரோதி* என்கிற வேதவாக்யமானது பசுவைக் கொடுத்து ஸோமலதை வாங்கவேண்டுமென்றது. அந்த வேதத்திலேயே மற்றோரிடத்தில்*अरुणया पिङ्गाक्ष्या सोमं क्रीणाति-அருணயா பிங்காக்ஷ்யா ஸோமம் க்ரீணாதி* என்று ஓதிற்று. ஸோமலதையின் க்ரயமான பசு சிவப்பு நிறமுள்ளதாயும் பிங்கவர்ணமான கண்ணுடையதாயுமிருக்க வேண்டுமென்று சொல்லிற்று. ஆக, சிவந்த பசுவைக்கொண்டு ஸோமலதையை வாங்கவேணு மென்று சொல்லியிருந்தாலும், பசுவைக்கொண்டு வாங்குவதென்பது முன்னமே ப்ராப்தமாயிருப்பதால், அப்ராப்தமானதே விதிவிஷயமாகவேண்டுதலால் இங்குச் சிவப்பு நிறம் மாத்திரமே விதிக்கப்படுகிறதாகக் கொள்ளப்படுகின்றது. *நின்றனரிருந்தனர்* என்னுமிவ்விடத்திலும் இதே ரீதிதான்.

85. மற்றொரு த்ருஷ்டாந்தமுங் கேண்மின் ; அபிசாரயஜ்ஞத்தில் ரித்விக்குக்கள் தலைப்பாகையுடன் உலாவவேண்டுமென்று வேதத்தில் ஓரிடத்தில் சொல்லிற்று. மற்றோரிடத்தில் "लोहितोष्णीषा ऋत्विजः प्रचरन्ति"—லோஹிதோஷ்ணீஷா ருத்விஜ: ப்ரசரந்தி* என்று ஓதிற்று. அதாவது, சிவப்பு நிறமுள்ள தலைப்பாகை யுடையவர்களாக ரித்விக்குக்கள் உலாவக் கடவர்களென்கை. இவ்விடத்திலும், தலைப்பாகை தரிப்பது ஏற்கெனவே ப்ராப்தமானபடியால் அதில் லோஹிதத்வம் [சிவப்பு] மாத்திரமே ப்ரக்ருதத்தில் விதிவிஷயமென்று கொள்ளப்படுகிறது. *நின்றனரிருந்தனர் பாசுரத்தின் ப்ரக்ரியையும் இதுவேதான். ப்ரவ்ருத்திமான்களும் நிவ்ருத்திமான்களும் சொல்லப்பட்டாலும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மாத்ரமே இங்கு விவக்ஷிதமென்க. ஆக

இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக்கொண்டு "ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதந ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம்" என்றருளிச் செய்தார் ஸ்வாமி. எனவே, திருவாய்மொழிப் பாசுரங்கள் மூன்றின் ஸாரார்த்த ஸங்க்ரஹமாக *ஸ்வாதீநேத்யாதி சூர்ணையை எம்பெருமானார் அருளிச்செய்தா ரென்றதாயிற்று.

86. 'இவ்விஷயம் உபநிஷத்துக்களிலும் சொல்லப்பட்டிருக்குமல்லவா? ஸ்ரீராமாநுஜர் உபநிஷத்துக்களைக் கொண்டே இதனையருளிச் செய்தார்' என்று கொள்ளலாகாதோ வென்று சிலர் கேட்கவுங்கூடும். இவ்விஷயம் உபநிஷத்துக்களில் இப்படி வரிசையாக எங்கும் சொல்லப்பட்டிருக்கவில்லை; ஒரு விஷயம் ஒரு மூலையிலும் மற்றொரு விஷயம் மற்றொரு மூலையிலும் சொல்லப்பட்டிருக்கும், அதுவும் இவ்வளவு ஒழுங்குபாடாகச் சொல்லப்பட்டிருக்கவுமில்லை. அரிய பெரிய பொருள்களையும் தெளிவாகச் சொல்லுவ தென்பது திருவாய்மொழியிலேயாம். ஸ்ரீராமாநுஜர் எதையும் நிஷ்கர்ஷித்து அருளிச் செய்வது திருவாய்மொழியைக் கொண்டே யென்று அறுதியிடத் தட்டில்லை. ... ... ... (11)

## 12. கிரீடமகுட சூடாவதம்ஸமும் ஆழ்வாரருளிச்செயலும்

87. ஸ்வாமி யெம்பெருமானாரருளிச் செய்த சரணாகதி கத்யத்தில் *அகில ஹேய ப்ரத்யநீக இத்யாதியான பெரிய சூர்ணையில், திவ்ய ரூபவர்ணனம், திவ்ய குண வர்ணனம், திவ்யபூஷண வர்ணனம், திவ்யாயுத வர்ணனம், திவ்ய மஹிஷீ வர்ணனம் முதலான பல் வர்ணனங்கள் ஆச்சர்யமாகச் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் திவ்யபூஷண வர்ணன பரமான *ஸ்வோசித விவித விசித்ராநந்தேத்யாதி வாக்யத்தில் "கிரீட மகுட சூடாவதம்ஸ" என்றுள்ள ஸ்ரீஸூக்தியின் ஆழ்பொருளைப் பற்றிச் சிறிது விமர்சிப்போ மிங்கு.

88. கிரீடமென்றும் மகுட மென்றும் சூடாவதம்ஸமென்றும் தனித்தனியாக மூன்று சொற்கள் இருந்தாலும் இவை மூன்றும் திருமுடியிலணியும் ஆபரணத்தையே சொல்லும். அந்த ஆபரணம் ஒரேவிதமாக இருப்பதில்லை; திருவபிஷேக மென்றும், கொண்டை யென்றும், தொப்பார மென்றும் மூன்றுவிதமாக வழங்கி வருவதுண்டாகலால் அம்மூவகைத் திருவாபரணங்களுக்கும் வாசகமாக கிரீடமென்றும் மகுடமென்றும் சூடாவதம்ஸ மென்றும் மூன்று பதங்கள் இங்கு ப்ரயோகிக்கப்பட்டன வென்னலாம்.

89. முக்கியமாயும் உபதேச பரம்பராப்ராப்தமாயுமுள்ள ரஸ்யரஹஸ்யார்த்த மொன்று இங்கு அறியவேண்டியதுண்டு. "தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்கிறபடியே எம்பெருமானார் திருவாய்மொழியை வளர்த்தவராய் அநவரதம் அதனையே ஆழ்ந்து அநுபவிப்பவராய் இருந்தபடியால் நம்மாழ்வாருடைய திவ்ய ஸூக்தியொன்றைத் திருவுள்ளம்பற்றியே "கிரீட மகுட சூடாவதம்ஸ" என்று மூன்று சிரோபூஷணங்களைப் பேசியுள்ளார்.

90. அந்த திவ்ய ஸூக்தி யெதுவென்னில், திருவிருத்தத்தில் * பாரளந்த பேரரசே! எம்விசும்பரசே! எம்மைநீத்து வஞ்சித்தோரரசே!* என்றுள்ள பாசுரமாம். இதில், அரசே! அரசே! அரசே! என்று மூன்று விசை விளித்தருளுகிறார். பாரளந்த பேரரசே! என்பதனால், உலகளக்கிற வியாஜத்தினால் எல்லார்தலையிலும் திருவடியை வைக்கையாகிற ஸௌலப்யகுணம் அநுபவிக்கப்பட்டது. விசும்பரசே! என்பதனால் நித்யஸூரிநாதத்வமாகிற பரத்வம் அநுபவிக்கப்பட்டது. எம்மை நீத்து வஞ்சித்தோரரசே! என்பதனால் தம்மோடு ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் பண்ணிப் போருகையாகிற ப்ரணயித்வகுணம் அநுபவிக்கப்பட்டது. ஆக, ஸௌலப்யத்துக்காகக் கவித்த முடியும் பரத்வத்துக்காகக் கவித்த முடியும் ப்ரணயித்வத்துக்காகக் கவித்த முடியுமாக மூன்று முடிகள் நம்மாழ்வாரால் எம்பெருமானுக்குச் சூட்டப்பட்டனவாயின. இவ்விஷயம் ஆசார்யஹ்ருதயத்தில் "பாரளந்தவென்னும் மூன்று முடிக்குரிய இளவரசுக்கு" என்பதனால் காட்டப்பட்டுள்ளது.

91. இங்ஙனே எம்பெருமானுக்கு மூன்று ஸாம்ராஜ்யாபிஷேகம் ஆழ்வார் திருவுள்ளத்தினால் நேர்ந்திருப்பதைத் திருவுள்ளம்பற்றியே ஸ்வாமி யெம்பெருமானார் கிரீட, மகுட, சூடாவதம்ஸமென்கிற மூன்று சொற்களாலே மூன்று முடிகளை யருளிச்செய்தாரென்று திண்ணமாகக் கொள்ளக்கடவது.

92. இனி, இதில் ஒரு சிறிய கேள்வியுண்டாகும்; ப்ரணயித்வகுண மென்பது ஸௌலப்ய குணத்திலே அந்தர்ப்பவியாதோ? அதைத் தனிப்படச் சொல்லி அதற்காக வொரு திருவபிஷேகம் சூட்டினதாகச் சொல்ல வேணுமோ? என்று. இதற்குக் கேண்மின்; அந்தரங்க பக்தர்களிடத்தில் அஸாதாரணமாகக் காட்டும் ப்ரணயித்வகுணத்தை ஸர்வ ஸாதாரணமான ஸௌலப்யகுணத்திலே அந்தர்ப்பவித்ததாகக் கொள்ளுவது பொருந்தாது.

93. ஸ்ரீ பாஷ்ய மங்கள ச்லோகமான *அகிலபுவநஜந்மேத்யாதியில் முதல் பாதத்தில் ஸ்தேமசப்தத்தினால் ரக்ஷணம் சொல்லப்பட்டிருக்கச் செய்தேயும் மீண்டும் இரண்டாவது பாதத்தில் *விநத விவிதபூத வ்ராத ரக்ஷைக சொல்லப்பட்டிருக்கின்றது. இது தனிப்படச் சொல்லவேணுமோ? முதல் பாதத்தில் சொன்ன ஸ்தேம சப்தார்த்தமான ரக்ஷணத்திலேயே இதுவும் அந்தர்ப்பவியாதோ? என்று கேட்டால், 'அது ஸாமாந்ய ரக்ஷணம் சொன்னபடி, இது விசேஷ ரக்ஷணம் சொல்லுகிறபடி' என்று ஸமாதானம் சொல்ல ப்ராப்தமாகிறது. புபுக்ஷுக்களின் ரக்ஷணம் வேறாய், முமுக்ஷுக்களின் ரக்ஷணம் வேறாயிறே யிருப்பது. அது போலவே *உண்டியே உடையே உகந்தோடுமிம் மண்டலத்தாரிடத்தில் காட்டும் ஸௌலப்யமும் *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாங் கண்ணனெம்பெருமானென்றேயிருக்குமாழ்வார்போல்வார்பக்கலிலே காட்டும் ஸௌலப்யமும் நெடுவாசி பெற்றதாகையாலே ஒன்றாய்விடாது. அதற்கு ஸௌலப்யமென்று பெயர்; இதற்கு ப்ரணயித்வமென்று பெயர். ஆகவே மூன்று திருக்குணங்களுக்கான ஸாம்ராஜ்யாபிஷேகத்துக்காக மூன்று முடிகள் மிகப் பொருந்தும். ... (12)

## 13. ஸ்ரீபாஷ்யத்தில் ஓர் அருமையான விஷயம்

94. கீதாசார்யன் தன்னுடைய அவதாரத்திற்கு ப்ரயோஜநம் சொல்லும் போது *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே* என்று ஸாது பரித்ராணமும் துஷ்க்ருத் விநாசநமும் தர்ம ஸம்ஸ்தாபநமுமாக மூன்று ப்ரயோஜனங்களைச் சொல்லி வைத்தான். இந்த ப்ரயோஜனங்களுக்காக எம்பெருமான் இவ்விருள்தருமா ஞாலத்தில் *துயரில் மலியும் மனிசர் பிறவியில் கண்காண வந்து பிறக்க வேணுமோ? *நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்காய் *என்று ஆழ்வாரருளிச் செய்தபடியே கர்மவச்யர்களான ஸம்ஸாரிகளும் படாத கஷ்டங்களைப்பட்டு இந்நிலவுலகில் எம்பெருமான் வந்து அவதரிக்க வேணுமோ? ஸத்யஸங்கல்பனான தான் தன்னுடைய ஸங்கல்பசக்தியைக் கொண்டே எதுவும் செய்யலாமன்றோ? எத்தனை ஸாதுக்களை ரக்ஷிக்க வேணுமானாலும் எத்தனை துஷ்டர்களை சிக்ஷிக்க வேணுமானாலும் தன்னுடைய அவ்யாஹத சக்திகமான ஸங்கல்பத்தினாலே செய்து தலைக்கட்ட என்ன தடை? ஸாதுபரித்ராணத்திற்காகவும் துஷ்க்ருத் விநாசநத்திற்காகவும் தர்மஸ்தாபனத்திற்காகவும் அவ்வப்போதுகளில் நானே வந்து பிறக்கிறேனென்கிறானே, எதற்காகப் பிறக்கவேணும்? என்று பிரபலமான ஓர் ஆக்ஷேபம் தோன்றக்கூடியதிங்கு.

95. இதற்கு சங்கர பாஷ்யத்தில் பரிஹாரமொன்றும் கிடையாது. மத்வ பாஷ்யத்தில் மூலத்திற்கு ஸம்பந்தமின்றிக்கே ஏதோ எழுதப் பட்டுள்ளது; அதாவது, "न जन्मनैव परित्राणादि कार्यमिति नियमः, तथाऽपि लीलया स्वभावेनच यथेष्टचारी.... *लोकवत्तु लीलाकैवल्यम्...." என்று எழுதப்பட்டிருக்கின்றது. பகவான் ஸாதுபரித்ராணாதிகளை அவதரித்தே செய்தாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; ஆனாலும் விளையாட்டாக அவதரிக்கிறான். ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் *லோகவத்து லீலா கைவல்யம்* என்று சொல்லப்பட்டிருக்கிறதன்றோ' என்பது மத்வ பாஷ்ய பங்க்தியின் பொருள். ஸாதுபரித்ராணாதிகளுக்காக நான் வந்து பிறக்கிறேனென்று மூலத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்க, அதற்குக் கண்டனம் செய்கிற முறையில் இந்த பாஷ்யம் அவதரித்திருக்கின்றது. *லோகவத்து லீலா கைவல்யம்* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரமானது பகவான் செய்கிற ஜகத்ஸ்ருஷ்டியைப் பற்றினதே யொழிய பகவதவதாரத்தைப்பற்றியதன்று என்பது நிர்விவாதம். அதை இங்கெடுத்தெழுதுவது ஸூதராம் அப்ரஸக்தம்.

96. அது கிடக்கட்டும். நம் ஸ்வாமியின் பாஷ்யத்திலுள்ள இன்சுவைப் பொருள்களை யநுபவிப்போம். அந்தராதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் *अन्तस्तद्धर्मोपदेशात्* (1—1—21,) என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் 'பரித்ராணாய ஸாதூநாம்' என்கிற இந்த ச்லோகத்தை ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக வுதாஹரித்து "साधवो हि उपासकाः ; तत्परित्राणमेवोद्देश्यम् ; आनुषङ्गिकस्तु दुष्कृतां विनाशः, संकल्पमात्रेणापि तदुपपत्तेः" என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. ஸாதுபரித்ராணத்திற்காகவே முக்கியமாக அவதாரம் செய்தருளிற்றென்றும், துஷ்டநிரஸநமானது

ஸங்கல்பத்தாலுங்கூட ஸாத்யமாகக் கூடியதாதலால் அவதாரத்திற்கு அது ப்ரதாநோத்தேச்யமன்று என்றும் மேலெடுத்த ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தியினால் தெரிவிக்கப்படுகிறது.

97. ஸாதுபரித்ராணம் மாத்திரம் ஏன் ஸங்கல்பத்தினாலாகக் கூடாது? 'साधवः परित्राता भवन्तु' என்று ஸங்கல்பித்தால் ஆகமாட்டாதோ? என்று ஒருவர் ஸ்ரீ பாஷ்யஸூக்தியின்மேலும் ஆக்ஷேபம் செய்தால் அதற்கு என்ன பரிஹாரம்? மேலும், 'துஷ்க்ருத்விநாசநம் ஸங்கல்ப ஸாத்ய மாகலாம், ஸாதுபரித்ராணம் ஸங்கல்ப ஸாத்யமாக மாட்டாது' என்று ஸ்வாமி துணிந்து ஸாதித்திருப்பது எந்த ஆதாரத்தைக்கொண்டு? என்று ஒருவர் கேட்டால் இதற்கும் த்ருப்திகரமான ஸமாதானம் சொல்லவேண்டும்.

98. திருவாய்மொழியமுதக்கடலில் அவகாஹநமில்லாதவர்கள் மேலே குறித்த கேள்விகளுக்கு வாயைத் திறக்கமுடியாதென்று சபதம் பண்ணிச் சொல்லுவேன். பங்க்தியின்மேல் ப்ரதிபதார்த்தம் சொல்லிக்கொண்டு ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் செய்து ஏடு தள்ளுமவர்களை நோக்கி ஆக்ஷேபம் செய்வாருமில்லை, ஸமாதானம் சொல்லவேண்டிய சிரமமும் அவர்களுக்கு நேருவதில்லை. யாரேனுமொருவர் ஆக்ஷேபித்து விட்டாலும் "ஸ்வாமியே ஸாதித்திருக்கிறபோது உனக்கென்ன வந்தது ஆக்ஷேபிக்க?" என்று சொல்லி வாயெடுக்க வொட்டாமே செய்து போவர்கள். 'பகவத் பாஷ்யகாரர் திருவாய்மொழியைத் துணைகொள்ளாமலே பாஷ்யமியற்றினர்' என்று கூறுகிற மேதாவிகள் இங்கே தமது நாவீறு காட்டவேணும். திருவாய் மொழியே தஞ்சமென்று கொள்ளும் பரமபாக்ய சாலிகளின் ஸந்ததியிலே பிறவியெடுத்தாலொழிய இங்கே வாய்திறக்கவழியில்லை. அந்த பாக்யம் பெற்ற நாம் சொல்லுகிறோம், கேண்மின்.

99. நம்மாழ்வார் திருவாய்மொழியில் (3-1-9)* மழுங்காத வை நுதிய சக்கர நல்வலத்தையாய், தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே* என்றொரு பாசுரம் அற்புதமாக அருளிச் செய்துள்ளார். பலகாலம் சுச்ரூஷைபண்ணிக் கேட்டறிய வேண்டிய பரமார்த்தத்தை மாத்ஸர்யமலிந மநஸ்கர்களை யுத்தேசித்து வெளியிடவேண்டியதாகிறதே யென்று மிகவும் வருந்தி நிற்கிறோம். 'ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர்திருவடிகளே சரணம்' என்று அநுஸந்தித்துக் கொண்டு அவர்களுடைய திருவடிவாரத்திலே விஜ்ஞாபயே. ஆழ்வார் திருவுள்ளக் கருத்தை எம்பெருமானார் உள்ளபடி யுணர்ந்தருளியதை மணவாளமாமுனிகளே அடியேனுக்குப் பரமக்ருபையோடு உணர்த்தியதனால் அம்மூவர் திருவடிவாரத்திலே அவர்களுடைய திருவுள்ளமுகக்க விஜ்ஞாபிக்கிறேன்.

100. மேலே குறித்த திருவாய்மொழிப் பாசுரத்தில் மூன்றாமடியில் மழுங்காத ஞான மென்றது எம்பெருமானுடைய ஸங்கல்ப ஞானம். 'எம்பெருமானே! நீ ஸாதுபரித்ராணம் பண்ணவேண்டி நேரேவந்து திருவவதாரம் செய்யாமல்

ஸங்கல்பத்தினாலேயே அது பண்ணுவதானால் உனது சோதி குன்றும்; ஸங்கல்பத்தினால் செய்திடாமல் நேரே வந்து அவதாரம் செய்தருளினபடியால் தான் உனது சோதி விளக்கம் பெற்றது' என்று அப்பாசுரத்தின் பின்னடிகளிலருளிச் செய்தாராழ்வார். இதனால் ஸாதுபரித்ராணம் ஸங்கல்பஸாத்யமாகாது என்பது ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டது. ஆழ்வார் சொல்லிவிட்டாலென்ன? ஸாதுபரித்ராணம் ஏன் ஸங்கல்பஸாத்யமாகாது? என்று கேட்பீர்கள். ஆமாம், அது ஸங்கல்பஸாத்யமாகாது தான் என்பதை அப்பாசுரத்திலேயே முன்னிரண்டடிகளில் ஒரு கதை சொல்லுகிற முகத்தால் சிலாலிகிதம் செய்வித்தாராழ்வார்; *தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே* என்று கஜேந்திராழ்வானுடைய கதையை யெடுத்துக்காட்டித் தம்முடைய விவக்ஷிதத்தை நிலைநாட்டியுள்ளாராழ்வார்.

101. கஜேந்திரமோக்ஷகதை யாவருமறிந்ததே; முதலைவாய்க்கோட்பட்ட மதவாரணம் ஆதிமூலமேயென்றழைக்க, எம்பெருமான் திருநாட்டிலிருந்து அரைகுலையத் தலைகுலையப் பெரிய திருவடியை மேற்கொண்டு பொய்கைக் கரையேறவந்து யானைக்கு அருள் செய்ததாகக் கதையுள்ளது. திவ்ய தேசங்கள் தோறும் இது பெரிய உத்ஸவமாக இன்றைக்கும் கொண்டாடப்பட்டு வருகிறது. இதைப்பற்றி புத்திமான்கள் சிறிது ஆராயவேண்டும். ஆனைக்கு அருள்செய்யத் திருவுள்ளமானால் பரமபதத்திலிருந்து பொய்கைக் கரைக்கு ஓடி வந்துதான் அருள் செய்யவேணுமோ? இடத்தைவிட்டுப் பெயராமலே இரண்டுபடியாக அருள் செய்திருக்கலாமே. * विश्वं धियैव विरचय्य निचाय्य भूयः संजहृष :—விச்வம் தியைவ விரசய்ய நிசாய்ய பூயஸ் ஸஞ்ஜஹ்ருஷ:* (ஸ்ரீவைகுண்டஸ்தவே) என்று ஆழ்வானருளிச் செய்தபடி ஸகலப்ரபஞ்சங்களினுடையவும் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களையெல்லாம் அவலீலையாக நடத்துவதற்குக் கருவியாயிருக்கின்ற ஸங்கல்பம் எங்கே போய்விட்டது? "गजेन्द्रः परित्रातो भवतु - கஜேந்திராழ்வான் ரக்ஷைபெறுக" என்று ஸங்கல்பித்தால் ஆகாததுண்டோ? ஆகாதென்று யாரும் சொல்ல முடியாது. இந்த ஸங்கல்பத்தைக்கொண்டே எளிதாக கஜேந்திரரக்ஷணம் செய்திருக்கலாமே. இது தவிர மற்றொரு ப்ரகாரமுமுண்டு; அதாவது, *விடுத்ததிசைக் கருமம் திருத்தவல்ல திருவாழியாழ்வான் கைங்கரியத்திற்கு ஸஜ்ஜனாயிரா நின்றான்; *கருதுமிடம் பொருது கைந்நின்ற சக்கரத்தன்* (திருவாய்மொழி 10-6-8) என்கிறபடியே இன்னதிக்கில் இன்ன காரியமாகவேணுமென்று நினைத்தமாத்திரத்திலேயே அதை நிறைவேற்றவல்லவனவன். *கீழுலகில் அசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே ஆழிவிடுத்து அவருடைய கருவழித்தவழிப்பன்* என்று பெரியாழ்வாருளிச் செய்தபடி பாதாளலோகத்திலுஞ்சென்று இறைப்பொழுதில் அரிய பெரிய காரியம் செய்துவந்த அந்த ஸுதர்சநாழ்வானுக்கு அஸாத்யமானதுண்டோ? மேலும், பரமபதத்திலிருந்து பொய்கைக்கரைக்கு வந்துங்கூட "ग्राहं चक्रेण माधवः" "கைந்நாகத்திடர்கடிந்த கனலாழிப்படையுடையான்" "குட்டத்துக்கோள்முதலை துஞ்சக்குறித்தெறிந்த சக்கரத்தான்" என்கிறபடியே அந்த ஸுதர்சநாழ்வானை யிட்டுத் தானே காரியம் செய்தது; பொய்கைக்கரை

யளவு மெழுந்தருளித்தான் அவனுக்கு நியமிக்கவேணுமோ? பரமபதத்தி லிருந்தே நியமித்தாலாகாதோ? நியமிக்கத்தான்வேணுமோ? ஆக, அப்ரதி ஹத சக்திகமான ஸங்கல்பத்தைக் கொண்டும், * वाणी पौराणिकी यं प्रथयति महितं प्रेक्षणं कैटभारेः—வாணீ பௌராணிகீ யம் ப்ரதயதி மஹிதம் ப்ரேக்ஷணம் கைடபாரே:* [ஸுதர்சநசதகே] என்கிறபடியே ஸங்கல்ப பர்யாய பூதனை திருவாழியாழ் வானைக் கொண்டும் எளிதாகச் செய்யக்கூடிய கஜேந்த்ர ரக்ஷணத்தை எம்பெரு மானே! ஏன் நீ அப்படி செய்தருளவில்லை? என்று நம்மாழ்வார் எம்பெரு மானைக் கேள்விகேட்டிருக்கிறார். இப்பாட்டில் இவ்வளவு கேள்வி இருக் கிறதா? என்று ஐயுறவேண்டா; *மழுங்காத வைநுதிய சக்கர நல்வலத்தை யாய்!* என்கிற முதலடியினால் - சக்கரத்தாழ்வானையிட்டு ஏன் இந்த காரியத் தைச் செய்யவில்லை யென்றும், *மழுங்காத ஞானமே படையாக* என்ற மூன்றாமடியினால் - ஸங்கல்பத்தைக் கொண்டே ஏன் இந்த காரியத்தைச் செய்துகொள்ளவில்லை? என்றும் கேட்டிருக்கிறாரென்பது ஸுஸ்பஷ்டம்.

102. இக்கேள்விக்கு எம்பெருமான் தவிர வேறு யாராலும் விடை கூற முடியாதாகையாலே அவனே வந்து ஆழ்வாருடைய திருச்செவியிலே, ஆனைக் கருள்செய்ய தான் நேரே ஓடி வந்த காரணத்தை யுரைத்தான்; அது கேட்டு ஸமாஹிதரான ஆழ்வார் எம்பெருமான் தமக்கு ரஹஸ்யமாக வருளிச்செய்த விடையை உலகறிய வெளியிடவேணுமென்றும் ஸ்ரீபாஷ்யத்திலு மேற்ற வேணுமென்றும் திருவுள்ளம்பற்றி அப்பாட்டிலேயே இரண்டாமடியினால் அதனை வெளியிட்டருளினார் [தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே"] என்று. களிறு - கஜேந்த்ராழ்வான்; அவனுக்கு 'தொழுங்காதல்' என்று விசேஷண மிட்டதுதான் எம்பெருமானருளிச்செய்த விடையினாலாயது. இங்கே குறிக்கொள்ளத்தக்க விஷய மீது;—கஜேந்திரனுக்கு முதலையைத் துணிக்கவேண்டியதே உத்தேச்யமாகில் அது ஸங்கல்பத்தாலோ திருவாழி யாழ்வானை யிட்டோ செய்யக் கூடியதேயாகும். முதலையைத் துணித்தல் இங்கு உத்தேச்யமன்று. அப்போது எம்பெருமானை நோக்கி கஜேந்திராழ் வான் விண்ணப்பம் செய்கிறான்— *नाहं कलेबरस्यास्य त्राणार्थं मधुसूदन, करस्थकमलान्येव पादयोरर्पितुं तव— நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ. என்று; பெருமானே! இப்பாழுமுடலை முதலை தின்றுவிடுகிறதே யென்று இதற்காக நான் கரைந்திலேன்; கையிற் பறித்தபூக்களை உன் திருவடிவாரத்திலே நேராகப் பணி மாறவேணுமென்று இஃதொன்றையே ஆசைப்பட்டேன்; *உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனி ருந்தறியும் நீ இதைத் தெரிந்துகொண்டு நேரில் எழுந்தருளினையே! ஹா ஹா, உன்னுடைய ஸர்வஜ்ஞதையும் கருணையுமென்னே! என்று கஜேந்திரன் வியந்து உகந்து விஜ்ஞாபித்தது புராணஸித்தம்.

103. *பரித்ராணாய ஸாதூநாம்* என்கிறவிடத்தில், இப்படிப்பட்ட தொழுங்காதலையுடையவர்களே ஸாது சப்தவாச்யர்களென்றும், அவர்களுக் குப் பரித்ராணமாவது அவர்கள் கோருகிறபடியே நேரே யெழுந்தருளி

ஸேவை ஸாதித்தலும் தழுவி முழுசி வார்த்தை யாடுதலுந்தானென்றும் நிர்ணயித்து, இது ஸங்கல்பஸாத்யமாகாது, ஸாக்ஷாத்காமநுரூபமான அவதாரத்திலேயே ஸாத்யமாகுமென்றும் ஸ்வாமியருளிச்செய்தது மேலே விவரித்த ஆழ்வார் ஸ்ரீஸூக்தியைக்கொண்டே தவிர வேறு எதைக்கொண்டுமன்று. இப்படிப்பட்ட தெளிவு மற்று எந்த பாஷ்யகாரர்க்குமில்லையென்பது நிர்விவாதம். அவர்கள் தாங்கள் ஆதாரமாகக் கொண்டவை ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களே; அவற்றில் இப்படிப்பட்ட தெளிவுக்கு ஹேதுவான வசநவிந்யாஸமில்லாமையினாலே அந்த பாஷ்யகாரர்கள் இப்படிப்பட்ட விடங்களில் ஒன்றுமெழுதாமல் சிலரும், விபரீதமாகவெழுதிச் சிலரும் நின்றார்கள். நம்முடைய பாஷ்யகாரர் அருளிச்செயலாகிற சிறந்த நிதியை அண்டை கொண்ட பலத்தினாலேயே எதிலும் நல்ல தெளிவு பெற்று வித்வத்ரஸிகாவதம்ஸநீயங்களான ஸ்ரீஸூக்திகளையருளிச்செய்து நம்மை வாழ்வித்தனர். திவ்யப்ரபந்தங்களோடு ஸ்ரீபாஷ்யத்தோடு வாசியற எதிலும் அவகாஹநமின்றிக்கே “ मायभति यभति मामा यभति कःको यभति मामा यभति ” என்று இதையே உருச்சொல்லி வாழ்நாளைப் பாழே போக்குமவர் அங்ஙனமே போக்குக. ஆழ்வாரைப்பற்றியோ எம்பெருமானைப்பற்றியோ இவர்களுக்கு ஏதுக்கு விசாரம்?

104. திருக்குடந்தையில் வாழ்ந்த கோபாலதேசிகன் திருவடிகளில் ஆச்ரயித்த வொருவர் ஆசார்ய திவ்யஸூக்திகளிலே ப்ராவண்யமின்றிக்கே கேவலம் வேதாப்யாஸ ஜடராயிருந்தாராம்; அங்கே நடந்து கொண்டிருந்த வேதாந்த காலக்ஷேப கோஷ்டியில் தலைகாட்டாதே கனஜடைகளையே உருப்போடுவராம். ஒருநாள் ஏழாவது காண்டம் நாலாவது ப்ரச்நத்தில் * **न मा यभति कश्चन** * என்ற விடத்திற்கு கநஜடைகள் உருப்போடுகையில் “ मायभतियभतिमामायभति कःको यभति मामा यभति ” என்று திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டு கிடந்தாராம்; அதைத் திருச்செவி சாத்திக்கொண்டே வந்த கோபால தேசிகன் “மாமாவுக்குத்தான் இந்த பாக்யமோ? மருமானுக்கு இல்லையோ?” என்றாராம்; அதற்கவர் சொன்னாராம்—இப்படிப்பட்ட சப்தராசிகளையே உருப்போட்டுக் காலங்கழித்து இதிலேயே உயிரை விடவேண்டிய வகுப்பிலே பிறந்துவிட்டேன்; என்செய்வேன்? மஹிஷமாய்ப் பிறந்த ஜந்துவுக்கு மதுபாந பாக்யம் எங்ஙனே கிட்டும்? என்று (சொன்னாராம்). ... (13)

---

## 14. திருப்பாவையயநுஸரித்த கீதாபாஷ்யம்

105. கீதை (3—21) *यद्यदाचरति श्रेष्ठः तत्तदेवेतरो जनः । स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते—யத் யதாசரதி ச்ரேஷ்டஸ் தத் ததேவேதரோ ஜநः, ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் ததநுவர்த்ததே.* என்னும் ச்லோகம் சிஷ்டாசாரத்தின் சிறப்பைத் தெரிவிப்பது. ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களுக்கு அநாயாஸமாகப் பொருள்படக்கூடிய ச்லோகமிது. இதன் உத்தரார்த்தத்திற்கு பாஷ்யமிட்ட சங்கராசார்ய ஸ்வாமிகள் “ सः श्रेष्ठः यत् प्रमाणं कुरुते - लौकिकं वैदिकं वाः लोकः तत् अनुवर्तते - तदेव प्रमाणीकरोतीत्यर्थः ”

என்று உரைத்தார். ச்ரேஷ்டரா யிருப்பார் யாதொன்றை ப்ரமாணமாகக் கொள்ளுகிறார்களோ, அதுதன்னையே லோகமும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறது என்பதாகப் பொருள் காட்டப்பட்டதாயிற்று. மத்வாசார்யரான ஆனந்த தீர்த்த ஸ்வாமிகளும் இவ்வண்ணமாகவே பொருளுரைத்தார். "स यद्वाक्यादिकं प्रमाणीकुरुते- यदुक्तप्रकारेण तिष्ठतीत्यर्थः" என்பது அவருடைய பாஷ்யபங்க்தி. ஆக இவற்றால் "யத்ப்ரமாணம்" என்றவிடத்தில் பதச்சேதம் இவர்களுக்கு விவக்ஷிதம் என்று தேறிற்று. யத் என்பது தனிப்பதமென்று முடிந்தது.

106. நம் பாஷ்யகாரர் இங்கு இரண்டு பதங்களாகத் திருவுள்ளம் பற்றாமல் (யத்ப்ராமாணம்) என்று பஹுவ்ரீஹி ஸமாஸங் கொண்ட ஓரே பதமாகத் திருவுள்ளம் பற்றி பாஷ்யமிட்டருளியுள்ளார். பூர்வார்த்தத்தில் "ச்ரேஷ்ட: யத்யத் ஆசரதி" என்றதற்கு - ச்ரேஷ்டராயிருப்பார் எந்தெந்த கருமத்தை யநுஷ்டிக்கிறாரோ என்பதாகப் பொருளாதலால் அந்த கர்மத்தைப் பற்றியே உத்தரார்த்தமும் சொல்லுகிற தென்று ஸ்வாமியின் திருவுள்ளம். சிஷ்டர்கள் தாங்களநுஷ்டிக்கிற கருமத்திற்கு எவ்வளவு அவதி வைத்துக் கொள்ளுகிறார்களோ அவ்வளவு அவதியையே பிறரும் வைத்துக் கொள்ளுகிறார்கள் என்றபடி. இதை தாத்பர்யசந்த்ரிகையில் வேதாந்த தேசிகன் விவரித்துள்ளார். 'பெரியோர்கள் அநுஷ்டிக்கிற கருமத்தையே பிறரும் அநுஷ்டிக்கிறார்கள்' என்று இவ்வளவு மாத்திரமே சொன்னால் போதாது. அவர்கள் அக்கருமத்தை எந்த விதமாக அநுஷ்டிக்கிறார்களோ அந்த விதமாகவே பிறரும் அநுஷ்டிக்கிறார்கள் என்றும் சொல்லவேண்டியது இங்கு ஆவச்யகமாதலால் அதற்குச் சேர ஸ்வாமியின் பாஷ்யம் மிகப் பொருத்தமாக அவதரித்துள்ளது. பெரியார் எதை ப்ரமாணமாகக்கொள்ளுகிறாரோ அதையே பிறரும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறாரென்பது ப்ரக்ருதத்தில் அநபேக்ஷிதமாதலால் இதர பாஷ்யகாரர்களை நம் ஸ்வாமி பின்செல்லவில்லை. 'யத்ப்ரமாணம் குருதே' என்றதற்கு இங்ஙனே பொருள் கொண்டால் "லோகஸ் ததநுவர்த்ததே" என்ற மேல் வாக்யத்தில் தத் என்றது ஸ்வரஸமாகப பொருள் தருமோவென்று ஒரு சங்கை தோன்றும். இதற்குத் தாத்பர்ய சந்த்ரிகையிலேயே தகுந்த பரிஹாரமுள்ளது, கண்டு கொள்க.

107. இதர பாஷ்யகாரர்களுக்குத் தோன்றாத அர்த்தம் இங்கு நம் ஸ்வாமிக்குத் தோன்றினது எதனாலென்னில்; திருப்பாவை ஜீயரென்று ப்ரஸித்தி பெற்றிருந்ததனாலேயே என்க. திருப்பாவையில் *மாலே மணிவண்ணா* என்கிற பாசுரத்தில் "மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்" என்றுள்ளது. இங்கு "மேலையார் செய்வனகள் கேட்டியேல்" என்னுமளவே போதுமாயிருக்க இடையில் 'வேண்டுவன' என்று ப்ரயோகித்தது குறிக்கொள்ளத் தக்கது. அதை நோக்கியே யத்ப்ரமாண மென்றதை ஸமஸ்தமாகக் கொண்டு பாஷ்ய மிட்டருளினர்.

108. "மேலையார் செய்வனகள் வேண்டுவன" என்ற திருப்பாவைப் பாசுரத்திற்குப் பொருள் என்னவென்றால், சாஸ்த்ரங்களில் எவ்வளவோ கருமங்கள்

அநுஷ்டேயங்களாகச் சொல்லப்பட்டிருக்கும்; அவற்றை யெல்லாம் சிஷ்டர்கள் அநுஷ்டிக்கமாட்டார்கள்; *க்ரியமாணம் ந கஸ்மைசித் யதர்த்தாய ப்ரகல்பதே, அக்ரியாவதநர்த்தாய தத் து கர்ம ஸமாசரேத்* என்கிற ப்ரமாண வசனத்தை சிஷ்டர்கள் நன்கு அறிந்தவர்களாகையாலே, எந்த கருமங்களுக்கு ஒரு பலனுமிராதோ, அகரணே ப்ரத்யவாயமிருக்குமோ, அந்த கருமங்களை மாத்திரம் அவஹிதர்களாய்ச் செய்துபோருவர்கள். அதையே லோகமும் அநுவர்த்திக்கும்; வேண்டாதவற்றை விட்டு வேண்டுவன செய்வர்கள் மேலையார்— என்கிற இக்கருத்தில் ஆண்டாள்பாசுர மவதரித்தது. இதற்குச் சேர அருளிச் செய்யவேணுமென்றே *சூடிக்கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளலிராமானுசன் *ஸ யத்ப்ரமாணம் குருதே* என்ற கீதாச்லோகத்திற்கு [பெரியாழ்வார் திருவடிகளில் ஆண்டாள் கேட்ட பொருள் இதுவேயென்று நிச்சயித்து] ஆண்டாள் காட்டிக்கொடுத்த பொருளையே தமது பாஷ்யத்தில் இட்டருளினர். இப்படி அருமை பெருமை வாய்ந்த விஷயங்கள் குருதல ஸேவா விமுகர்களுக்குத் தெரிய ப்ரஸக்தியில்லை. ... (14)

---

## 15. அருளிச்செயலையேயடியொற்றிய சதுர்விதாதிகாரி விவரணம்

109. கீதையில் (7-16.) "சதுர் விதா பஜந்தே மாம்" என்கிற ச்லோகத்தில் ஆர்த்த:, ஜிஜ்ஞாஸு:, அர்த்தார்த்தீ, ஜ்ஞாநீ என்று நால்வகை யதிகாரிகள் கூறப்படுகிறார்கள். இவர்களை விவரிக்கின்ற சங்கராசார்யர் தமது பாஷ்யத்தில் "आर्तः— तस्करव्याघ्ररोगादिना अभिभूतः आपन्नः ; जिज्ञासुः— भगवत्तत्त्वं ज्ञातुमिच्छति यः ; अर्थार्थी - धनकामः ; ज्ञानी— विष्णोस्तत्त्ववित्" என்று எழுதியுள்ளார். மத்வபாஷ்யகாரரான ஆனந்த தீர்த்தர் ஒரு விவரணமு மெழுதவில்லை. சங்கராசாரியர் - திருடர் புலி பிணி முதலியவற்றால் துன்பமடைந்தவனை ஆர்த்தனென்றும், பகவானையறிய விரும்புகிறவனை ஜிஜ்ஞாஸுவென்றும், தனம் பெற விரும்புமவனை அர்த்தார்த்தி யென்றும், விஷ்ணுதத்வமறிந்தவனை ஞானி யென்றும் விவரித்திருக்கின்றார். நமது பாஷ்ய காரரான ஸ்வாமி யெம்பெருமானார் - ப்ரஷ்டைச்வர்ய காமனை ஆர்த்த னென்றும், அபூர்வைச்வர்யகாமனை அர்த்தார்த்தி யென்றும், கைவல்யகாமனை ஜிஜ்ஞாஸு வென்றும், ஸ்வஸ்வரூப முணர்ந்தவனை ஞானியென்றும் விவரித்தருளுகிறார். இவற்றுள் எந்த விவரணத்தில் பொருத்தமுள்ளதென்பதைப்பற்றி நாம் இங்கு விமர்சிக்க விரும்பவில்லை. இங்ஙனே விலக்ஷணமான விவரணத்தை நம் ஸ்வாமி செய்தருளியதற்கு மூல மென்ன ? என்று விமர்சிக்க ப்ராப்தம். இதை விமர்சிக்குமளவில், ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்தியை அடி யொற்றிப் பேசவேணு மென்று ஸ்வாமி கொண்டிருந்த உறுதிதான் இதற்கு மூலமென்று நன்கு புலப்படும்.

110. திருப்பல்லாண்டில், *வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்* என்கிற பாசுரத்தினால் ஞானிகளை யழைத்தும், *ஏடுநிலத்திலிடுவதன் முன்னமென்கிற

பாசுரத்தினுல் கைவல்யார்த்திகளை யழைத்தும், *அண்டக்குலத்துக்கதிபதியாகி யென்கிற பாசுரத்தினுல் அபூர்வைச்வர்ய காமர்களையும் ப்ரஷ்டைச்வர்ய காமர்களையுமழைத்தும் உபதேசம் தந்தருளியிருப்பது ஸ்பஷ்டம். அதை பூர்வாசார்ய வியாக்கியானங்களிலும் அடியேனுடைய திவ்யார்த்த தீபிகை யுரையிலும் விரிவாகவும் தெளிவாகவும் காணலாம். இதுவன்றியும் திருவாய் மொழியில் (4-1.) *ஒரு நாயகமாய்* என்கிற பதிகத்தில் இந்நால்வகை யதிகாரிகளும் தெரிவிக்கப்பட்டிருப்பதும் ப்ரஸித்தம். கீதையிலுள்ள *சதுர்விதா பஜந்தே மாம்* என்னுமிந்த ச்லோகத்தை யடியொற்றியே அந்தப் பாசுரங்கள் திருவவதரித்தனவாக ஸம்ப்ரதாய மாகையாலே * மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தவரான ஸ்வாமி யெம்பெருமானர் திவ்யப்ரபந்தச் சாயையிலேயே அருளிச்செய்தாரென்பது இங்குக் குறிக்கொள்ள வேண்டிய பரமார்த்தம். இங்கு ரஸிகர்கள் நெஞ்சாலும் நினைக்கத் தகாத அர்த்தங்களை இதர பாஷ்யகாரர்கள் எழுதிவைத்தது திவ்யப்ரபந்த ப்ரவேச மில்லாமையினலேயென்பதை நாம் அடிக்கடி தெரிவிக்க வேணுமோ? ... (15)

---

## 16. ஸ்ரீபாஷ்யத்தின் உபக்ரமோபஸம்ஹாரங்கள்

111. ஸ்ரீபாஷ்யத்தின் உபக்ரமத்திலுள்ள *அகிலபுவநஜந்மேத்யாதியான மங்களச்லோகத்தையும் *அநாவ்ருத்திச் சப்தாதித்யாதி சரமஸூத்ர பாஷ்யத்தையும் ஸதாசார்யஸந்நிதியிலே கேட்க பாக்யம் பெற்றவர்களுக்குத்தான் ஆழ்வார் திருவடிகளிலே எம்பெருமானர்க்கு இருக்கும் ப்ராவண்யாதிசயம் தெரியவிரகுண்டு. இவ்வுபக்ரமோபஸம்ஹாரங்களில், ஆழ்வா ரருளிச்செய்த மஹார்த்தங்களை வெளியிடுதலும், ஆழ்வாரைப் புகழ்தலுமாகிய இரண்டு விசேஷங்களுண்டு. *அகில புவநேத்யாதி ச்லோகத்தில் மேற்சொன்ன இரண்டு விசேஷங்களையும் முன்னம் உபபாதிக்கிறேன். ஆழ்வாருளிச்செய்த மஹார்த்தங்களை வெளியிடுவதாகிற விசேஷத்தை முன்னங்கேண்மின்.

112. ச்லோகத்தின் முதற் பாதம் *அகிலபுவநஜந்மஸ்தேம பங்காதிலீலே * என்பது. இதில் "यतो वा इमानि भूतानि जायन्ते" இத்யாத்யுபநிஷத்வாக்ய ஸித்தமாயும் ஜந்மாத்யதிகரணபாஷ்ய ப்ரபஞ்சிதமாயுமுள்ள ஜகஜ்ஜந்ம ஸ்திதி லயங்கள் அருளிச்செய்யப்பட்டன. ஸ்திதியாவது ரக்ஷணம்; இதுவும் முதல் பாதத்தில் சொல்லியாயிற்றென்பது ஸ்பஷ்டம். இப்படியிருக்க, *விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே* என்று இரண்டாவது பாதம் எதற்கு? இதில் சொல்லப்படுகிற ரக்ஷணம் முதல்பாதத்திலேயே சொல்லப்பட்டிருக்க, ச்லோக பூரணர்த்தமாகவா இந்தத் தனிவிசேஷணம்? என்று கேட்கிருர்கள்.

113. இப்படிப்பட்ட ஸூக்திவிந்யாஸம் நம் பாஷ்யகாரரிடத்தில் தவிர இதரர்களிடத்தில் காணக்கிடைக்காது. ஸ்வாமி ஆழ்வாரருளிச் செயலை அடியொற்றியே இந்த விசேஷணமிட்டருளினர். எங்ஙனேயென்னில, ஆழ்வார்

திருவாய்மொழியில் (1-3-2). *எளிவருமியல்வினன்* என்கிற பாட்டில் "ஒளி வருமுழுநலம் முதலில கேடில" என்று அபரிமிதகல்யாணகுண முடைமை யைச்சொல்லி, உடனே "வீடாந் தெளிதரு நிலைமையது ஒழிவிலன்" என்கிறார். மோக்ஷமாகிற தெளிந்த நிலத்தைத் தருவதான அந்த ஸ்வ பாவத்தை [அதாவது, மோக்ஷப்ரதத்வத்தை] எப்போது முடையவன் என் பது இதன்பொருள். இங்கே நம் ஆசார்யர்கள், *ஒளிவருமுழுநலம் *என்ற திலேயே மோக்ஷப்ரதத்வமாகிற இந்த குணமும் அடங்காதோ? என்று கேட்டுக்கொண்டு "மோக்ஷப்ரதத்வம் தனியே சொல்லவேண்டுவதொரு குண மாகையாலே சொல்லுகிறார்" என்றருளிச்செய்கிறார்கள். இப்படி மோக்ஷப்ர தத்வத்தைத் தனிப்பட அருளிச் செய்தவர் நம்மாழ்வாரேயாவர். இங்கே யருளிச் செய்வது தவிரவும் இரண்டாம்பத்தில் *அணைவதரவணைமேல்* என்கிற திருவாய்மொழியாலும் மோக்ஷப்ரதத்வத்தை விசேஷேண அருளிச் செய்கிறார். தேசிகனும் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவலியிலும் ஸாரத் திலும் அந்தத் திருவாய்மொழிக்கு மோக்ஷப்ரதத்வமே அநுபாவ்யகுண மென்று அறுதியிடுகிறார். ஆக இங்ஙனே மோக்ஷப்ரதத்வத்தை ஆழ்வார் தனிப்பட அருளிச்செய்திருப்பது கொண்டே ஸ்வாமி ராமாநுஜரும் *விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே *என்பதனால் இதைத் தனிப்பட அருளிச் செய்தார்.

114. இதை ஸ்வாமி திருவாய்மொழியிலிருந்தே க்ரஹித்தாரென்ன வேணுமோ? உபநிஷத்துக்களிலிருந்து க்ரஹித்ததாக இருக்கலாகாதோ? என்று சிலர் கேட்கக்கூடும். இவ்விடத்தில் ச்ருதப்ரகாசிகையை ஸேவித்தால் இதில் வைசத்யம் விளையும். மோக்ஷப்ரதத்வத்தை ஸ்தேம சப்தத்திலாவது (புஜ) பங்க சப்தத்திலாவது அந்தர்ப்பாவம் செய்துவிடலாமானாலும் சாஸ்த் ரத்திற்கு இது பரமப்ரயோஜநமாகையாலே தனிப்படவே சொல்லவேண்டிய தாயிற்று என்றருளிச்செய்து இதற்கு ஆளவந்தாருடைய* ஜகதுத்பவஸ்திதி ப்ரணாசஸம்ஸாரவிமோசந* ஜகஜ்ஜந்மஸ்திதித்வம்ஸ மஹாநந்த* என்கிற ஸ்ரீஸூக்திகளையே பிரமாணமாகவெடுத்துக் காட்டியருளுகிறார். ஆளவந்தார் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியையே அடியொற்றியருளிச் செய்பவரென்பது நிர்விவா தம். ச்ருதப்ரகாசிகாகாரர் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியையே எடுத்துக்காட்டியிருக்க லாம்; ஸம்ஸ்க்ருத க்ரந்தமாகையாலும், இதரமதஸ்தர்களும் கண்வைக்கும் படி எழுதின க்ரந்தமாகையாலும் தமிழ்ப்பாசுரமெடுத்துக்காட்டாமல் அதை யநுஸரித்த ஸம்ஸ்க்ருதஸூக்தியை யெடுத்துக்காட்டினார். ஸம்ஸ்க்ருதக்ரந் தங்களில் தமிழ்ப் பாசுரங்களையும் கொள்ளுவதென்கிற பத்ததியை வாதி கேஸரி அவலம்பித்தார்; அவரையடியொற்றி தேசிகனும் கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகை, ஸச்சரித்ரரக்ஷை முதலான சில க்ரந்தங்களிலே ஆழ்வார் பாசுரங்களை ப்ரஸ்தாவித்தார். ஸ்ரீபாஷ்ய ச்ருதப்ரகாசிகா ஸஹஸ்ரநாமபாஷ் யாதிகளில் சப்தாநுவாதமில்லை, அர்த்தாநுஸந்தானம் அபரிமிதமாகவுள்ளது. ஆக, ஆழ்வார் வெளியிட்டருளின மஹார்த்தத்தை யநுஸந்தித்தே *விநத

விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே* என்கிற விசேஷணமருளிச் செய்யப்பட்டதென்பது நிஸ்ஸந்தேஹம்.

115. இனி, இந்த விசேஷணத்தில் மற்றொரு விசேஷார்த்தமும் ச்ருதப்ரகாசிகையிலும் தத்வடீகையிலும் காட்டப்படுகிறது. அதுவும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியிலிருந்தே கொள்ளப்பட்டதென்பதை நிரூபிக்கிறேன். [விநத விவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே] விநத - வணங்கிய, விவித - பலவகைப்பட்ட, பூதவ்ராத - ப்ராணிஸமூஹங்களை. ரக்ஷா - ரக்ஷிப்பதையே, ஏக தீக்ஷ - முக்கியமான விரதமாகக் கொண்டவன் எம்பெருமான் - என்பது சப்தார்த்தம். இங்கு (பூத வ்ராத) என்றவிடத்தில் ச்ருத ப்ரகாசிகாசார்யருடைய நிரூபணம் ஸதாசார்ய ஸந்நிதியில் அவர்தாம் கேட்டபடியே அழகாக அமைந்திருக்கிறது. (அதாவது) பூதவ்ராதமென்பதற்கு ப்ராணி ஸமூஹமென்று பொருளானாலும் இதில் சிறிது உட்புகுந்து ஆராய்ச்சி செய்கிறார் அவர். ப்ராஹ்மணஸமூஹம் என்று சொன்னால் பிராமணர்களிற் காட்டிலும் வேறுபட்ட வ்யக்திகள் இங்குத் தோன்றுவதில்லை. பல ப்ராஹ்மணர்களின் திரட்சியையேயன்றோ ப்ராஹ்மண ஸமூஹமென்று வழங்குகிறோம். 'ராஜ பரிஷத்' என்றும் ஒரு சப்த வ்யவஹாரமிருக்கிறது. ப்ராஹ்மணஸமூஹமென்ற வ்யவஹாரம் போன்றதன்று இந்த வ்யவஹாரம். பல அரசர்களின் திரட்சியை ராஜபரிஷத்தென்று சொல்லுகிறோமல்லோம். மந்திரிகளும் ப்ரஜைகளுமாகிய இதரர்களும் அரசனோடு கூடியிருக்குமிருப்பையே ராஜபரிஷத்தென்கிறோம். ப்ராஹ்மண ஸமூஹ: என்றவிடத்திலும் ஷஷ்டீதத்புருஷஸமாஸமே கொள்ளுகிறோம். ராஜபரிஷத் என்றவிடத்திலும் அந்த ஷஷ்டீதத்புருஷஸமாஸமேதான் கொள்ளுகிறோம். ஸமாஸத்தில்வாசியில்லையாயினும் பொருளில்நெடுவாசியுள்ளதென்று நிரூபிக்கிறார்; பூதவ்ராத மென்னு மிவ்விடத்தில் ச்ருத ப்ரகாசிகா ஸ்ரீஸூக்தியாவது:--" भूतसंबन्धी व्रातो भूतव्रातः। संश्रितसंबन्धिनोऽपि तत एव कारणात् भगवतो रक्ष्या इत्यभिप्रायः।....* पशुर्मनुष्यः पक्षी वा ये च वैष्णवसंश्रयाः। तेनैव ते प्रयास्यन्ति तद्विष्णोः परमं पदम् ॥*" என்று. விநத விவித பூதங்களை மாத்திரம் ரக்ஷிக்கையன்றிக்கே விநதப்ராணிகளின் ஸம்பந்தத்தைப் பெற்றவர்களையுங்கூட முற்சொன்ன விநதர்களின் விநதியே காரணமாக ரக்ஷிக்கிறானெம்பெருமான் என்றாராயிற்று. இந்த ஸ்ரீஸூக்தியானது விநதி செய்யவிருப்பமுடையாரைத் தடைசெய்ய மாட்டாது; விநதி செய்தாலன்றிப் பேறுபெற முடியாதென்று கூறுகிற சாஸ்த்ரங்களைக் கண்டிக்கவும் மாட்டாது. கண்டிப்பதற்காக அவதரித்தது மன்று. எம்பெருமானுக்குள்ளதானவோர் உண்மைப் பெருமையை மாத்திரம் வெளியிடவந்தது. தத்வடீகையில் இவ்வர்த்தத்தை வெகு அழகாக உபபாதித்துப் பொருந்த வைக்கிறார். விநதவிவித பூதங்களோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமோ பரம்பராஸம்பந்தமோ ஏதேனுமொருபடி தொடர்புடையவர்களையும் எம்பெருமான் ரக்ஷித்தருளுகிறானென்று கொள்ளவேணுமென்றும், ஸ்ரீபாஷ்யகாரர்க்கு இங்ஙனே விவக்ஷையில்லையாகில் இங்கே வ்ராத சப்தப்ரயோகம் பண்ணியிருக்கவே மாட்டார், இப்படி அர்த்தம் கொண்டால்தான் வ்ராதசப்தம் ஸப்ரயோஜநமாகும், இல்லையானால் விவித என்னும்

சப்தத்தோடே புநருக்தமாகும்— என்றும் தத்வடீகாகாரருடைய நிஷ்கர்ஷமாகத் தேறுகின்றது. தேசிகன் ஸ்பஷ்டமாக எழுதியிருப்பதிது.

116. இப்படி ச்ருதப்ரகாசிகாசார்யரும் தேசிகனும் எடுத்துக்காட்டுகிற அர்த்தம் *விநதேத்யாதி ஸ்வாமி ஸ்ரீஸூக்தியிலுள்ளதேயன்றி ஏறிட்டுரைக்கப்பட்டதன்று. இவ்வர்த்தம் *பசுர் மநுஷ்ய: பக்ஷீவா* இத்யாதி ஸம்ஸ்க்ருத ப்ரமாண ஸித்தமாயினும் ஸ்வாமி எம்பெருமானார் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டே யருளிச்செய்தார். திருவாய்மொழியில் *பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து பெரியவானுள் நிலாவுவரே* (6-10-11.) *எமர் கீழ்மேலெழு பிறப்பும் விடியா வெந்நரகத்து என்றும் சேர்தல் மாறினரே* (2-6-7.) என்றிவை முதலான பாசுரங்களே எம்பெருமானார்க்குச் சிறந்த ஹஸ்தாவலம்பமென்றுணர்க.

117. இதற்குமேல் மூன்றாவது பாதத்தில் ‘ஸ்ரீநிவாஸே’ என்றருளிச்செய்ததிலும் விசேஷித்து அவதானம் செல்லவேண்டும். *அகிலபுவநேத்யாதியான இந்த ச்லோகத்தில் பாஷ்யத்திற்கு மூலமான சாரீரகமீமாம்ஸையின் சாஸ்த்ரார்த்த ஸங்க்ரஹம் செய்யப்படுகிறதென்பது முக்கியமான விஷயம். இந்த சாரீரக மீமாம்ஸையில் ஒரு ஸூத்திரத்திலும் லக்ஷ்மீஸம்பந்தம் ப்ரஸ்தாவிக்கப்படவுமில்லை; அப்படியிருக்க ஸ்வாமி எதுகொண்டு ‘ஸ்ரீநிவாஸே’ என்றருளிச் செய்தாரென்று விமர்சிக்கவேணும். ஆழ்வார்கள் கோஷ்டியில் *திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு* [ஸ்ரீஸம்பந்தமில்லாத தெய்வத்தைத் தெய்வமாக நினைக்கவேண்டா] என்கிற உத்கோஷமிருப்பதனாலே அதை யாதரித்தே ஸ்வாமி இங்கு ‘ஸ்ரீநிவாஸே’ என்றருளிச்செய்தது.

118. இதற்குமேல் நாலாவது பாதத்தில் “பக்திரூபா சேமுஷீ பவது” என்றதும் அவதேயம். ‘மம பக்திர் பவது, மம பக்திரஸ்து’ என்றருளிச்செய்தால் போதுமே ‘பக்திரூபா சேமுஷீ பவது’ என்றது ஏன்? என்று ஆராயவேணும். திருவாய்மொழி முதற்பாசுரத்தில் “மதிநலமருளினன்” என்று ஆழ்வார் பாசுரமுள்ளது. மதியாவது ஞானம்; நலமாவது பக்தி. ஞானமும் பக்தியுமாகிற இரண்டையும் தந்தான் என்று சிலர் நிர்வஹித்தார்கள். நலமான மதியைத் தந்தானென்று கொண்டு, முளைக்கும்போதே வயிரம் பற்றி முளைக்கும் பதார்த்தம்போலே பக்திரூபாபந்நமான ஞானத்தைத் தந்தானென்பதே முக்கியமான நிர்வாஹமாகக் காட்டப்படுகிறது. எம்பெருமானார் இவ்விதமான அர்த்தத்தைத் திருவுள்ளம்பற்றியே “பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா” என்றருளிச் செய்தாரென்பதே இங்கு தலையான விஷயம். “புத்திர்மநீஷா திஷணா தீ: ப்ரஜ்ஞா சேமுஷீ மதி:” என்பது அமரகோசம். மதியும் சேமுஷியும் பர்யாயமே. பக்தியும் நலமும் பர்யாயமே. ஆழ்வார்க்கு மதிநலமருளினது போல அடியேனுக்கும் மதிநலமருளவேணுமென்று பிரார்த்தித்தாராயிற்று.

119. ஆக இவ்வளவால், ஆழ்வாரருளிச்செய்த மஹார்த்தங்களை ஸ்ரீபாஷ்யோபக்ரமத்தில் வெளியிட்ட விசேஷம் நிரூபிக்கப்பட்டது. ஆழ்வாரைப் புகழ்தலாகிய விசேஷம் இனி நிரூபிக்கப்படுகிறது. ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் செய்பவர்கள் முதல் நாளில் *அகிலபுவநேத்யாதி ஆரம்பித்து லகுபூர்வபக்ஷத்தளவிலேகொண்டு நிறுத்துவர் பலர்; உபய வேதாந்த ஸாகர பாரதர்சிகளான ஸத்ஸம்ப்ரதாய நிஷ்ணாதர்கள் முதல் ச்லோகத்தில் மாத்திரம் மூன்று நாள் காலக்ஷேபம் செய்வர்கள். முதல்நாளில் அந்த மங்களச்லோகத்தில் சாரீரக மீமாம்ஸார்த்த ஸங்க்ரஹமிருக்கும்படியை உபபாதிப்பர்கள். இரண்டாம் நாளில் திருவாய்மொழி திவ்யார்த்தங்கள் அதில் கமழும்படியை நிரூபிப்பர்கள். மூன்றுநாளில் ச்லோகம் முழுவதும் நம்மாழ்வாரைப் பற்றின ஸ்துதியென்று நிர்வஹிப்பர்கள். அந்த நிர்வாஹமே இங்கு ஸம்க்ஷேபமாகக் காட்டப்படுகிறது.

120. [அகிலபுவந ஜந்ம ஸ்தேம பங்காதிலீலே] இந்த விசேஷணம் ஆழ்வார்க்கு ஆகும்போது இரண்டுபடியாக யோஜனையாகும். அகிலபுவனங்களினுடைய ஜன்மஸ்தேமபங்கங்களுக்கு [ஆதி] காரணபூதனான எம்பெருமானோடே லீலாரஸம் அநுபவிப்பவர் ஆழ்வார். अखिलभुवनजन्मस्थेमभङ्गानां यः आदिः, (सर्वेश्वरः) तेन सह लीला यस्य, तस्मिन् என்று கொள்ளக்கடவது. திருவாய்மொழியில் (6-2)* என்னுடைய பந்துங்கழலும் தந்து போகுநம்பீ* *விளையாடப்போதுமினென்னப் போந்தோமை* என்றிவை முதலான பலபல பாசுரங்களினால் ஆழ்வார்க்கும் எம்பெருமானுக்கும் நிகழ்கின்ற லீலைகள் வாசாமகோசரம். இதுவொரு யோஜனை; மற்றொரு யோஜனையாவது, அகிலம் - புவநஜந்மஸ்தேமபங்காதிலீல: யஸ்ய - என்று கொண்டு, எம்பெருமானையே எல்லாமாகவுடையவர் ஆழ்வார்; (அதாவது) *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம்பெருமான்* என்றிருந்தவர் நம்மாழ்வார் என்றதாகிறது. இப்படியிருந்தவர் ஆழ்வாரொருவரேயாதலால் இந்த யோஜனையும் மிகப்பொருந்தும்.

121. [விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே] விநத விவித பூதவ்ராதரக்ஷகத்வம் எம்பெருமானுக்குச் சொல்லப்பட்டாலும் *அநதிக்ரமணீயம் ஹி சரணக்ரஹணம்* என்கிற நியாயத்தாலும் மந்த்ரரத்நப்ரக்ரியையாலும் அந்த ரக்ஷண பாரத்தை எம்பெருமானுடைய திருவடிகளே வஹிக்கும். அந்தத் திருவடிகளுக்கு ஸ்ரீ சடகோபனென்றும் ஸ்ரீ சடாரியென்றும் நம்மாழ்வாருடைய திருநாமமேயாயிற்று. ஆகவே இந்த விசேஷணம் நம்மாழ்வாரிடத்திலே மிகவெளிதாக அந்வயிக்கக் குறையில்லை. பாதுகாஸஹஸ்ரத்தில் ப்ரபாவபத்ததியில் (42) "ஜகதாம் அபிரக்ஷணே த்ரயாணாமதிகாரம் மணிபாதுகே வஹந்த்யோ:" என்றச்லோகம் இங்குப் பொருத்தமாக அநுஸந்தேயம். இந்த விசேஷணத்தில் ஆழ்வார் விஷயமான யோஜனையில் விவரிக்க வேண்டிய விசேஷங்கள் பலவுண்டு; விஸ்தரபயத்தாலே விடுகின்றதத்தனை.

122. [ச்ருதி சிரஸி விதீப்தே] ச்ருதி சிரஸ்ஸாவது உபநிஷத்து; அதில் விசேஷேண தீப்தர் ஆழ்வார். எங்ஙனேயென்னில்; *तद्विप्रासो विपन्यवो

जागृवांसस्समिन्धते* [தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ர்வாம்ஸஸ் ஸமிந்ததே] இத்யாதிகளான உபநிஷத்வாக்யங்கள் ஆழ்வாரையன்றோ ஓதுகின்றன. விப்ராஸ: என்றது விப்ரா: என்றபடி. *ந சூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:* என்கிறபடியே விப்ரத்வ ஸித்திபெற்றவர் ஆழ்வார். (விபந்யவ:) *பண ஸ்துதௌ* என்கிற தாதுவிலிருந்து நிஷ்பந்நமான சொல்லாகையாலே விசேஷித்து ஸ்துதிகர்த்தாக்க ளென்றபடி. "தேவிற்சிறந்த திருமாற்குத் தக்க தெய்வக் கவிஞன், பாவிற்சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனே" என்றபடி எம்பெருமானுக்குத் தகுந்த ஸ்தோதா ஆழ்வார். (ஜாக்ர்வாம்ஸ:) *கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலே* என்று சொல்லி இந்நிலத்திலே உறக்கமற்றிருப்பவர் ஆழ்வாரே. 'ஸமிந்ததே' என்றவிடத்து (ஸம்) என்கிற உபஸர்க்கத்தை நோக்கியே இங்கும் (விதீப்தே) என்று ஸோபஸர்க்கமாக வருளிச்செய்தது.

123. இதற்கு மற்றொரு யோஜனையுமுண்டு; ச்ருத்யாம் தீப்த:, ச்ருதிசிரஸி விதீப்த: என்கிறதாகக் கொள்க. ச்ருதி யென்றது திருவாய்மொழி; அதில் தீப்தர் ஆழ்வார்; பதிகந்தோறும் நிகமனப்பாசுரத்திலே 'குருகூர்ச் சடகோபன்' என்று விளங்குபவரென்கை. இனி, ச்ருதிசிரஸ்ஸாவது கண்ணிநுண் சிறுத்தாம்பு திவ்யப்ரபந்தம். அது திருவாய்மொழியின் முடிவிலே நியமேந அநுஸந்திக்கப்படுவதால் ச்ருதி சிரஸ்ஸாயிற்று. அதில் விசேஷேண தீப்தர் ஆழ்வார்; அந்த ப்ரபந்தம் முழுவதும் ஆழ்வார் விஷயமேயாதலால் அதில் விதீப்தரென்னக் குறையில்லையே.

124. [ப்ரஹ்மணி] "सर्वत्र बृहत्त्वगुणयोगेन हि ब्रह्मशब्द:" என்ற ஸ்ரீபாஷ்யத்தின்படி ப்ரஹ்மமென்றது மிகப்பெரிய வஸ்து வென்றபடி. ஆழ்வார் பெரிய திருவந்தாதியில் "புவியு மிருவிசும்பும் நின்னகத்த, நீ யென்செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார்" என்கிற பாசுரத்தினால்—மிகப் பெரியவனான எம்பெருமானையும் தம்முள் ஒரு மூலையிலடக்கியிருக்கையாகிற பெருமை தமக்கேயுள்ளதென்று ஸோபபத்திகமாக நிரூபித்திருப்பதனால் ஆழ்வாரை ப்ரஹ்ம மென்னத் தட்டில்லை. ஆழ்வார் தம்முடைய ப்ரஹ்மத்வத்தைத் தாமே உபபாதித்தருளி யிருப்பது விசேஷம். அப்பாசுரத்தின்படி எம்பெருமான் ப்ரஹ்மமாகவும் ஆழ்வார் பரப்ரஹ்மமாகவும் தேறுதலால் இங்கு 'பரஸ்மிந் ப்ரஹ்மணி' என்றது ஆழ்வார்க்கு மிகமிகப் பொருந்தும்.

125. [ஸ்ரீநிவாஸே]*ஸ து நாகவர: ஸ்ரீமாந்* *அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்*லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:* இத்யாதிஸ்தலங்களில் பகவத் கைங்கர்யருசியும் பகவத் பக்தியுமே ஸ்ரீயாகச் சொல்லப்படுகையாலே அந்த ஸ்ரீயானது ஆழ்வார் பக்கலிலே குறையற்றதாகையாலே ஸ்ரீநிவாஸத்வம் ஆழ்வார்க்கும் அநபாயம். ஆக இப்படிப்பட்ட ஆழ்வாரிடத்திலே தமக்கு பக்தியைவேண்டினாராயிற்று.

126. இனி ஸ்ரீபாஷ்யத்தின் உபஸம்ஹாரத்திலே திவ்யப்ரபந்தார்த்த விசேஷம் கமழ்கிறபடியும், ஆழ்வாருடைய ப்ரசம்ஸை பரிமளிக்கும்படியும் உப

பாதிக்கப்படுகிறது. *அநாவ்ருத்திச் சப்தாதநாவ்ருத்திச் சப்தாத்* என்பது சாரீரக மீமாம்ஸையின் முடிவான ஸூத்ரம். முக்தியடைந்தவனுக்கு மறுபடியும் இந்நிலத்தே திருப்பி வருதல் கிடையாது என்பதைத் தெரிவிக்கவந்தது இந்த ஸூத்ரம். *நச புநராவர்த்ததே நச புநராவர்த்ததே* என்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே திரும்பி வருதல் கிடையாது - என்னுமிவ்வளவே ஸூத்ரவிவக்ஷிதம். சங்கராசார்யர் தம்முடைய பாஷ்யத்தில் இவ்வளவே யெழுதியுள்ளார். அதை ஸ்வாமியும் ஸ்ரீபாஷ்யத்திலே யருளிச்செய்துவிட்டு, விசேஷித்து ஒரு விஷயம் மிகவருமையாக எழுதியுள்ளார்; அது ஆழ்வார் ஸ்ரீஸூக்தியிலிருந்தே கொள்ளப்பட்ட விஷயம். (அதாவது) மூலத்தில் (சப்தாத்) என்றதற்கு ஸம்ஸ்க்ருதோபநிஷத் ப்ரமாணம் எப்படி அர்த்தமோ அப்படியே த்ரமிடோபநிஷத் ப்ரமாணமும் அர்த்தமே யென்று ஸ்வாமி திருவுள்ளம்பற்றி த்ரமிடோபநிஷத் ஸித்தமானவோர் அர்த்தத்தை "न च परमपुरुषः सत्यसंकल्पः अत्यर्थप्रियं ज्ञानिनं लब्ध्वा कदाचिदावर्तयिष्यति — நச பரமபுருஷ: ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசி தாவர்த்தயிஷ்யதி* என்கிற ஸ்ரீஸூக்தியினால் அருளிச் செய்கிறார். இந்த ஸ்ரீஸூக்தியின் பொருளை மேலே விவரிப்போம்.

127. இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்தி நமது பாஷ்யகாரர் தவிர வேறு எந்த பாஷ்யகாரரிடத்திலும் அவதரிக்கப்பெறாது. திருவாய்மொழியை மேலெழ ஓதுமவர்களுக்கு இப்பொருள் நிலமன்று. எம்பெருமான் ஸ்ருஷ்டி பண்ணுவதும் அவதாரங்கள் பண்ணுவதும் சேதநரை லபிக்கைக்காகவே என்றும், சேதநலாபம் ஈச்வரனுக்குப் புருஷார்த்தமென்றும் அறுதியிடுவது திருவாய்மொழியின் ப்ரமேயமாகும். அதில் (9·6 10) *வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்றவென்னையொழிய என்னில் முன்னம் பாரித்துத், தானென்னை முற்றப் பருகினான், காரொக்குங் காட்கரையப்பன் கடியனே* என்கிற பாட்டு திருவாய் மொழியாயிரத்தினுள்ளும் ஸாரமானது. இதில் "என்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப் பருகினான்" என்பதுதான் உயிரான வார்த்தை. 'எம்பெருமானைக் கண்டால் அவனை வாரிக்கொண்டு விழுங்கவேணும்' என்று ஆழ்வார்தாம் ஆசைப்பட்டிருந்ததாகவும், தமக்கு முன்னே நெடுநாளாக எம்பெருமான் தம் விஷயத்திலே இப்படி பாரித்திருந்து தன்னுடைய பாரிப்பே நிறைவேறப்பெற்றானென்றும் இப்பாட்டிலருளிச் செய்யப்படுகிறது. இதனால் ஒரு சேதநனைப் பெறுவதற்கு எம்பெருமான் நெடுநாளாக மநோரதித்திருக்கிறானென்னும் பரமார்த்தம் வெளியிடப்பட்டதாயிற்று.

128. முக்தனுக்குப்புநராவ்ருத்தி கிடையாதென்று ஸித்தாந்தம் செய்வதற்கு இந்த பரமார்த்தத்தை யெடுத்துரைப்பதே பாங்காகுமென்று ஸ்வாமி திருவுள்ளம்பற்றி "நச பரமபுருஷ: அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா" என்கிற கம்பீரோதார சதுரமான ஸ்ரீஸூக்தியை விந்யஸித்தருளினார். அநேககாலமாக சேதநலாபத்துக்கு அபரிமிதக்ருஷிகள் செய்துகொண்டிருந்த பரமபுருஷன் அருந்தவப் பயனாகத் தனக்குக் கிடைத்த முக்தாத்மாவை எப்படி

திருப்பியனுப்புவன்? ஒருகாலும் திருப்பியனுப்ப மாட்டான் - என்று கல் வெட்டாக ஸ்வாமியருளிச்செய்தது திருவாய்மொழியை யவலம்பித்தே யென்பது நிஸ்ஸந்தேஹம்.

129. நநு, ஸ்ரீபாஷ்யத்தில் அவ்விடத்திலேயே "ய ஏவமாஹ" என்று தொடங்கி கீதாவசனத்தை ஸ்வாமியே யெடுத்துக்காட்டி யிருக்கிறாரே; அதனால் இது பகவத் கீதாஸித்தமென்று ஸ்பஷ்டமாக விளங்காநிற்க, திருவாய்மொழியை எதற்காக இங்கே கொண்டு கூட்டவேணுமென்று கேட்கவருவீர்கள்; கேண்மின்; எந்த கீதாச்லோகத்தை ஸ்வாமி இங்கு உதாஹரித்தருளுகிறாரோ அது *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்பது; இதற்கு சங்கரபாஷ்யமிருக்கும்படியைக் காணலாம்; அதைக் கண்டித்து ஸ்வாமி வெகு விரிவாக அர்த்தநிர்ணயம் செய்தருளுகிறார்; அது திவ்யப்ரபந்த மூலகமே யென்பதை நாம் அடுத்தபடியாகப் பரக்க நிரூபிக்கப்போகிறோம். ஆக, ஸ்வாமி ஸ்ரீபாஷ்யத்திலே கீதாவசனத்தை உதாஹரித்தருளியிருந்தாலும் அதன் பொருளும் ஸ்வாமிக்கு திவ்யப்ரபந்தாதீநப்ராப்திகமாதலால் "நச பரமபுருஷ" இத்யாதி ஸ்ரீபாஷ்யஸூக்தியானது திருவாய்மொழியையே மூலமாகக்கொண்டு அவதரித்ததென்னுமிடம் அப்ரத்ருஷ்யம்.

130. ஸ்ரீபாஷ்யத்தின் உபஸம்ஹாரத்திலே ஆழ்வாருடைய ப்ரசம்ஸையுமுள்ளது - என்றதை இனி உபபாதிக்கிறேன். ஸ்ரீபாஷ்யம் தொடங்கும்போது *அகில புவநஜந்மஸ்தேம பங்காதிலீலே* என்றார்; இது, புவநஜந்மஸ்தேம பங்காதி லீலனை எம்பெருமானை அகிலமுமாகவுடையவர் ஆழ்வார் என்று விவக்ஷித்து - என்பதைக் கீழே உபபாதித்திருக்கிறேன். "வாஸுதேவஸ் ஸர்வம்" என்றிருக்கிற மஹாத்மா துர்லபனென்று கண்ணபிரான் இழவோடே போனான்; உடனே நம்மாழ்வார் திருவவதரித்து "வாஸுதேவஸ் ஸர்வமென்றிருக்கிற மஹாத்மா நான்காண்" என்று சொன்னார் திருவாய்மொழியில். எங்கே சொன்னாரென்னில்; *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் தமக்குக் கண்ணனேயென்று (6-7-1) பாசுரத்திலே ஸ்பஷ்டமாக வருளிச்செய்தார் தாய் பாசுரத்தாலே. ஆகவே *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸமஹாத்மா ஸுதுர்லப:* என்கிற கீதாவசனம் நம்மாழ்வாரை நோக்கியதென்பது ஸத்ஸம்ப்ரதாயப் பேராசிரியர்களின் நிர்வாஹம். அந்த ச்லோகத்தோடே ஸ்ரீபாஷ்யத்தைத் தலைக்கட்டியிருப்பது உபக்ரமோபஸம்ஹாரப் பொருத்தமென்றுணர்க. இதை மேலே நன்கு விவரிக்கிறோம். ... (16)

## 17. *வாஸுதேவஸ் ஸர்வமும் - ஆழ்வார் நினைவைப் பின்சென்ற கீதாபாஷ்யமும்.

131. பகவத்கீதை (7-19.) *பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே, வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்னுமிந்த ச்லோகத்தின் சங்கரபாஷ்யத்தையும் ஸ்ரீ ஸ்வாமி பாஷ்யத்தையும் உற்று

நோக்கவேணும். சங்கரர் கீழே* ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ* என்றவிடத்தில் ‘ஜ்ஞாநீ’ என்பதற்கு எவ்விதமான அர்த்தம் செய்தாரோ அவ்விதமான அர்த்தமே ‘ஜ்ஞாநவாந்’ என்பதற்கும் அவர் செய்யலாவது. ஸ்வாமியோ வென்னில் கீழே செய்தருளினபடியே இங்கும் “ मच्छेषतैकरसात्म-याथात्म्यज्ञानवान्- மச்சேஷதைகரஸ ஆத்ம யாதாத்ம்யஜ்ஞாந வாந்” என்றே செய்தருளினர். இந்த ச்லோகத்தில் இதுவன்று முக்கியமான விஷயம்.

132. *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்கிற உத்தரார்த்தத்திற்கு சங்கரர் பணித்தபொருள் *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* இத்யாதிஸ்தலங்களில் போலவே அத்வைதமாகவுள்ளது; “மம வாஸுதேவ ஏவ ஸர்வம்” என்பதாகக் கொள்ளப்படவேயில்லை. பரப்ரஹ்மத்திற் காட்டில் வேறுபட்ட பொருள் எதுவுமேயில்லையாகையாலே, எல்லாம் பரப்ரஹ்மமேயென்று என்னைப் பணிகின்ற மஹாத்மா துர்லபன் - என்று கீதாசார்யன் சொல்லுவதாக சங்கரபாஷ்ய ப்ரக்ரியை. இதை நமது பாஷ்யகாரர் கண்டிக்கிருரென்பது “ वासुदेवस्सर्वमित्यस्य अयमेवार्थः” என்கிற ததீயபாஷ்ய ஸூக்தியாலும், “ वासुदेवस्सर्वमिति सामानाधिकरण्यस्य पराभिमतमर्थं प्रतिक्षिपन् स्वोक्तं द्रढयति - वासुदेव इति” என்கிற தாத்பர்யசந்த்ரிகாஸூக்தியாலும் அறியவெளிது. இங்கு சங்கரர் பணித்தபொருளானது அவசியம் கண்டிக்கத்தகுந்தது தாஞேவென்று பார்க்கவேணும். (सर्ववस्तुसामानाधिकरण्यार्हत्वरूपवस्तुपरिच्छेदराहित्य) ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யார்ஹத்வரூபவஸ்து பரிச்சேதராஹித்யத்தை ப்ரஹ்மத்தினிடத்தில் விசிஷ்டாத்வைதிகளான நாமும் இசைந்தேயிருக்கிருேம். தாத்பர்யத்தில் வாசியேயொழிய சப்த ஸந்தர்ப்பத்தில் ஒருவாசியுமில்லைநமக்கும். இங்கே சங்கரர் எழுதிவைத்த பொருள் அஸம்பாவிதமன்று. *ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்* என்கிற வடமொழி வேதத்தையும், *அவனே யவனுமவனு மவனும், அவனே மற்றெல்லாமுமறிந்தனமே* என்கிற தமிழ் வேதத்தையும் நிர்வஹிக்கிற ரீதியிலே *வாஸுதேவஸ் ஸர்வ மென்கிற விதையும் சங்கரர்க்கு அபிமதமான பொருளிலே எளிதாக நிர்வஹிக்கலாமாயிருக்க இங்கே கண்டனம் அவச்யமன்றேயென்று ப்ரத்யவஸ்தாநம் ப்ராப்தமாகும்.

133. अत्रेदमवधेयम् ॥ சங்கருடைய அத்வைதாபிப்ராயத்தை ஸ்வாமி கீழே வெகு விரிவாகக் கண்டித்தேயிருக்கிருர். [2-12 பாஷ்யம் ஸேவிப்பது. 13-2. பாஷ்யத்திலும் வெகு விரிவாக ஸேவிப்பது.] அதை இங்கும் கண்டிக்கவேண்டிய அவச்யமில்லைதான். இங்குக் கண்டிக்கிற விதம் வேறு. இவ்வர்த்தம் இந்த ப்ரகரணத்திற்குச் சேராதென்று திருவுள்ளம் பற்றியே இவ்விடத்தில் ப்ரதிக்ஷேபமுள்ளது. இங்கே ஸ்வாமியருளிச்செய்த பொருள் என்னவென்று பார்ப்போம். ‘வாஸுதேவஸ் ஸர்வ’ மென்பதற்கு ஸ்வாமியருளிய பொருள் இதுவே—“ वासुदेव एव मम परमप्राप्यं प्रापकं च, अन्यदपि यन्मनोरथवर्ति स एव मम तत्सर्वम्” என்பது கீதாபாஷ்யஸூக்தி. இதை தேசிகன் தாத்பர்ய சந்த்ரிகையில் விவரிக்கும்போது தா (धा) ரகபோஷக போக்யங்

களும் எம்பெருமானே யென்று கொள்ளுகிற மஹாத்மாவை விவக்ஷிப்பது தான் இவ்விடத்திற்குச்சேரும் - என்று ஸ்பஷ்டமாக எழுதியுள்ளார். திருவாய்மொழியில் *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்* என்று ஆழ்வாருளிச்செய்தது *வாஸுதேவஸ் ஸர்வமென்கிற இத்தையநுஸரித்தே யென்று ஆளவந்தார் முதலானோர் நிர்வஹித்து வந்தார்கள். திருவாய்மொழியின் வ்யாக்யாதாக்களான பூர்வாசார்யர்களும் அங்கு இந்த கீதாவசனத்தை யுதாஹரித்தே வியாக்கியானம் செய்தருளியுள்ளார்கள். சங்கரருக்குத் திருவாய்மொழியில் ப்ரவேசமில்லாமையாலே அவர்தாம் வேறு வகையாக பாஷ்யமிட்டாலும் திருவாய்மொழியமுதக்கடலிலே ஆழ்ந்தவரான ஸ்வாமி அவ்வர்த்தத்தை எங்ஙனே இசையக்கூடும் ?

134. *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்று சொல்லுகிற கீதாசார்யனும் நம்மாழ்வாரை நெஞ்சில்கொண்டே அது சொல்லியிருக்க, அதற்கு இணங்காத பொருள் ஸ்வாமிபாஷ்யத்தில் எப்படி ஏறும்? அப்பொருளை ஸ்வாமி எப்படி ஸஹிப்பர்? தமக்கு *எல்லாங் கண்ணனென்று சொல்லுகிற மஹாத்மாவாகிய நம்மாழ்வார் அந்தோ! என் கண்ணுக்குக் கிடைக்கவில்லையே யென்று அழுதுகொண்டே யன்றோ கீதாசார்யன் இந்த ச்லோகம் பணித்தான். கண்ணன் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளின பின் சில நாளிலே ஆழ்வாருடைய திருவவதாரம். கண்ணபிரான் ஆழ்வாரை ஸேவித்துவிட்டுத் தன் அவதார ஸமாப்தியைச் செய்துகொள்ள மிகவும் ஆசைப்பட்டிருந்தான்; அந்த பாக்யம் அவனுக்கு துர்லபமாயிற்று; அது இந்த ச்லோகத்தில் *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்பதனாலே ஸூசிதமாகிறது - என்று ஆசார்யர்கள் நிர்வஹித்துப்போருவது ஸோபபத்திகமென்று கீதாபாஷ்ய ஸூக்திகளாலறிகிறோம்.

135. 'ஜகத் ஸர்வம் வாஸுதேவ:' என்பதாக சங்கரர் கொண்டார்; அங்ஙனன்றிக்கே 'மம ஸர்வம் வாஸுதேவ:' என்பதாக நம் ஸ்வாமி கொண்டார். இதுதான் திருவாய்மொழிக்குச் சேர்ந்ததும், திருவாய்மொழியிலிருந்து தெரிந்து அருளிச்செய்யப்பட்டதுமான பொருள் என்று தெளியவேணும்.(17)

## 18. ஜீவாத்மாவின் அந்தரங்க நிரூபகத்தை பாஷ்யகாரர் நிர்ணயித்தது திருவாய்மொழிகொண்டே.

136. பகவத் விஷயம் (ஈடு), ஸ்ரீவசநபூஷண வியாக்கியானம், குருபரம்பராப்ரபாவம் முதலான க்ரந்தங்களிலே காண்பதோரிதிஹாஸத்தைச் சுருக்கமாகக் கேண்மின்; எம்பெருமானார் உபய வேதாந்தப்ரவசநம் நடத்தியருளாநிற்க "ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிரூபகமாகச் சொல்லப்படாநின்றதே, இவற்றினுள் அந்தரங்க நிரூபகம் எது?" என்கிற ப்ரஸ்தாவம் திருவோலக்கத்திலே நிகழ, ஸ்வாமி ஸர்வஜ்ஞராயெழுந்தருளியிருக்

கச் செய்தேயும் இதனை ஆசார்யமுகேந வெளியிடுவிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருக்கோட்டியூர் நம்பிபக்கலிலே சென்று ஸேவித்து இதனையறிந்து வரும்படி ஆழ்வானை யனுப்பியருள, ஆழ்வானும் திருக்கோட்டியூர்க்குச் சென்று நம்பி பக்கலிலே ஆறுமாஸம் காத்திருந்து *அடியேனுள்ளானுடலுள்ளான்* (8 8 2.) என்கிற திருவாய்மொழிப் பாசுரத் துணுக்கையைப் பெற்றுக்கொண்டு எம்பெருமானாரிடம் வந்து சேர்ந்து அதை விஜ்ஞாபிக்க, மஹாநிதியான இந்த ஸ்ரீஸூக்தியின் உட்பொருளை ஸ்வாமி திருவோலக்கத்திலே விவரித்தருளினர்—

137. அடியேனென்கிற சொல் நாலாயிர திவ்யப்ரபந்தத்தினுள் நூற்றுக் கணக்கான விடங்களிலுண்டு; நம்மாழ்வார் பாசுரம் பேசத்தொடங்கும் போதே 'அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்று அடியேன் சொல்லையிட்டே பேசுகிறார். இப்படி பல நூறிடங்களில் அடியேன்சொல் இருக்கவும் அவற்றையெல்லாம விட்டுத் திருவாய்மொழியில் ஒரு மூலையிலிருக்கும் பாசுரத் துணுக்கையொன்றைத் திருக்கோட்டியூர்நம்பி எடுத்துக் கொடுத்தனுப்பியிருக்கிறார்; அது எட்டாம்பத்தின் எட்டாப்பதிகத்தின் இரண்டாம் பாட்டிலுள்ளது. அங்கேயே முதற்பாட்டின் முடிவிலும் 'ஒருவனடியேனுள்ளானே' என்று அடியேன் சொல்லுள்ளது: அதையும் விட்டு அடுத்தபாட்டினடியை யெடுத்துக் காட்டியுள்ளார். இதில் என்ன விசேஷமென்பது நுண்ணுணர்வினர் நுண்மதிக்கே கோசரமாகக் கூடிய விஷயம். கேண்மின்;

138. எந்த இடத்திலும் அடியேனென்கிற சொல்லுக்கு தேஹவிசிஷ்டனை ஆத்மாவே பொருளாகும். *அடியேன் செய்யும் விண்ணப்பமே* என்னுமிடத்தை யெடுத்துக் கொள்வோம்; தேஹமின்றிக்கே வெறும் ஆத்மா விண்ணப்பம் செய்ய முடியாதன்றே. தேஹவிசிஷ்டனை ஆத்மாவே விண்ணப்பஞ் செய்ய முடியுமாதலால் இங்கு வெறும் ஆத்மாவை அர்த்தமாகக் கொள்வதற்கில்லை; *அடியேன் சிறிய ஞானத்தன்* என்கிற மற்றோரிடத்தையும் (1.5.7.) எடுத்துக்கொள்வோம்: இங்கு 'ஞானத்தன்' என்று ஞானமுடைமை சொல்லியிருப்பதனால் அது தேஹத்திற்கு அஸம்பாவிதமாய் ஆத்மாவுக்கே ஸம்பாவிதமாகையாலே இங்கு அடியேனென்பது வெறும் ஆத்மாவையே சொல்லியாகவேண்டுமென்று சிலர் ப்ரமிக்கக்கூடும்; அப்படியில்லை; இங்கும் அடியேனென்கிற சொல் தேஹவிசிஷ்டனை ஆத்மாவையே சொல்லுகிறது; ஏனென்னில், "காண்பானலற்றுவன்" என்கிற க்ரியையிலே அச்சொல் அந்வயிக்கவேண்டும்; வெறும் ஆத்மா அலற்ற முடியாதாகையாலே அங்கும் தேஹவிசிஷ்டனை ஆத்மாவே அடியேன் சொல்லுக்கு அர்த்தமாக வேண்டியது அவசியமாயிற்று. இப்படி எந்தவிடத்திலும் தேஹ விசிஷ்டனை ஆத்மாவையே அடியேன்பதம் சொல்லிநிற்கு மென்பது திண்ணமாயிற்று. *ஒண் சங்கதை வாளாழி யானொருவனடியேனுள்ளானே* என்கிறவிடத்திலும் அப்படியே.

139. இனி *அடியேனுள்ளானுடலுள்ளான்* என்கிறவிடத்தில் மாத்திரம் அடியேனென்பதற்கு வெறும் ஆத்மாவே அர்த்தமாகவேண்டிய நிர்ப்பந்தமுள்ளது. ஆத்மாவுக்கு விசேஷண பூதமான தேஹத்திற்கு வாசகமான சொல் உடலென்பது தனிப்பட இருப்பதனால் அடியேனில் தேஹத்தைச்சேர்த்து அர்த்தங்கொள்ளவேண்டிய அவச்யமில்லை; எம்பெருமான் ஜீவாத்மாவையும் உடல்பொருளையும் அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று சொல்ல வேண்டுவது இங்கு விவக்ஷிதம். உடலினுள்ளானென்பதனால் ஜடப்பொருளை அநுப்ரவேசித்திருக்குமவன் என்பது சொல்லிற்றாயிற்று. 'ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று விவக்ஷிதமான பொருளுக்கு *அடியேனுள்ளானென்று வாசகமிடப்பட்டிருக்கிறது. ஆத்மா அஹமர்த்தமாகையாலே என்னுள்ளானென்று சொல்லியிருக்கலாம்; அப்போதும் ஆத்மாவிலுள்ளானென்னும் பொருள் தேறிவிடும். ஆனால் ஆழ்வார் அப்படியருளிச் செய்யாமல் *அடியேனுள்ளானென்றருளிச் செய்திருக்கையாலே, ஆத்மாவென்றும் அடியேனென்றும் பர்யாயம் - (அதாவது) ஆத்மாவுக்கு சேஷத்வமே அந்தரங்க நிரூபகம் - என்பது ஆழ்வார் திருவுள்ளமாக அறுதியிடலாகிறது.

140. இப்படி எம்பெருமானார் நிர்ணயித்ததாகச் சொல்லுமைதிஹ்யம் உண்மையாயிருக்கவேண்டுமாகில் இது ஸ்ரீபாஷ்யகார திவ்யஸூக்திகளில் எங்கேயாவது ஏறியிருக்கவேணும். இல்லையாகில் இந்த ஐதிஹ்யத்திற்கு கௌரவமில்லை. ஸ்ரீபாஷ்யத்தில் *ஜ்ஞோத ஏவ* என்கிற ஸூத்ரத்தின் விவரணத்தில் இது தெரிவிக்கப்படவில்லை. அங்கு "அயமாத்மா ஜ்ஞாத்ருஸ்வரூப ஏவ" என்று இவ்வளவே முடிவாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே மேலே விவரித்த ஐதிஹ்யம் யதார்த்தமாயிருக்கத் தகுதியில்லையென்று குருகுலவாஸபாக்யமில்லாதார் சிலர் சொல்லுவதுண்டு. அன்னவர்களை "எண்ணாத மானிடத்தை எண்ணாத போதெல்லாமினியவாறே" என்கிற ரீதியில் விட்டிட்டு தத்வஜிஜ்ஞாஸுக்களான ஸுக்ருதிகளுக்கு மருமமுணர்த்துகிறேனிங்கு. இந்த மஹார்த்தம் எம்பெருமானார் திருவுள்ளத்திலேயே ஊறியிருந்து கீதாபாஷ்யத்தில் தகுந்த இடத்தில் வெளியிடப் பெற்றது.

141. கீதையில் (7-16.) *சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந!, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப!* என்றவிடத்தில் சங்கரபாஷ்யத்தை முன்னம் நோக்கிப் பிறகு ஸ்வாமி பாஷ்யத்தை நோக்குமின். "ஜ்ஞாநீ - விஷ்ணோஸ் தத்த்வவித்" என்றார் சங்கராசார்யர்; நம் ஸ்வாமி அப்பொருளை ஒன்றாக எண்ணாது "பகவச் சேஷதைகரஸ ஆத்மஸ்வரூபவித் ஜ்ஞாநீ" என்று அருளிச்செய்துளர். இப்படி ஓரிடமன்று. ஜ்ஞாநீ என வருமிடங்களிலெல்லாம் இங்ஙனேயருளிச்செய்கிறார். ஜீவாத்மாவின் ஜ்ஞானத்திற்கு ப்ரயோஜனம் தன்னுடைய சேஷத்வத்தை யறிவதுதான் என்று ஸ்வாமியின் திருவுள்ளம் தேறுகிறது. ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் அவகாஹநமில்லாமல் இங்ஙனே யருளிச்செய்ய இயலாது. (18)

## 19. சரணாகதிகத்யத்தில் அருமையான விஷயமொன்று.

142. சரணாகதிகத்யத்திலே *அகிலஹேயப்ரத்யநீகாதி (5) சூர்ணையில் "மஹா விபூதே! ஸ்ரீமந்நாராயண! ஸ்ரீவைகுண்டநாத!" என்கிற ஸம்போதநங்களுக்குப் பிறகு "அபார காருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்யௌதார்யைச்வர்ய ஸௌந்தர்ய மஹோததே!" என்கிற ஸம்போதநத்தில் வாத்ஸல்யகுணமும் சேர்த்துப் படிக்கப்பட்டிருக்கச் செய்தேயும் மறுபடியும் (அவ்விடத்திலேயே)* ஆச்ரித வாத்ஸல்யைக ஜலதே!* என்று மற்றொரு ஸம்போதநமும் அருளிச்செய்யப் பட்டிருக்கிறது. கீழுள்ள ஸம்போதநத்திலேயே வாத்ஸல்யகுணமும் சேர்ந்திருக்கவும் மீண்டும் வாத்ஸல்யத்தை மாத்திரமிட்டுத் தனியே ஒரு ஸம்போதநமருளிச் செய்திருப்பது எதற்காகவென்று விமர்சிக்கவேணும். கீழ் ஸம்போதநத்தில் வாத்ஸல்யத்தை மற்றும்பல திருக்குணங்களோடே சேர்த்துப்படித்ததில் த்ருப்தியில்லாமல் வாத்ஸல்யத்தை மாத்திரம் தனிப்பட எடுத்துரைக்க வேணுமென்று திருவுள்ளமுண்டாகி இங்ஙனேயருளிச் செய்திருப்பதாக ஸ்பஷ்டமாய்த் தெரிகிறது. பெருவிடாய்ப்பட்டவன் நீரிலே விழுந்து நீரைப் பலமுகமாக உபயோகங்கொள்ளுமாபோலே பகவத்குணகண கீர்த்தனத்திலே அத்விதீயமான உத்கண்டையையுடைய எம்பெருமானார் அலமாப்பின் மிகுதியாலே யருளிச்செய்யுமதுக்கு நாம் ஒரு அடைவு தேடவேண்டாவாகிலும், இந்த புநருக்தி வாத்ஸல்ய குணத்திலே யானபடியாலே நம் ஆசார்யர்கள் இவ்விடத்தில் விசேஷாவதாநம் செலுத்தி வெளியிட்டிருக்குமது இங்குத் தெரிவிக்கலாகிறது. வெகு நுட்பமான விஷயமிது.

143. திருவாய்மொழியில் (6-10-10)* அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா!* என்று ஆழ்வார் பெரிய பிராட்டியாரை முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ப்ரபத்திபண்ணுகிறபோது எம்பெருமானை அடுத்த இரண்டாமடியில் *நிகரில் புகழாய்!* என்று ஸம்போதித்திருக்கிறார். ஒப்பற்றவொரு திருக்குணத்தை யுடையவனே யென்கிறார். அந்த திருக்குணம் எதுவாக இருக்குமென்று ஆராய்ந்தால் ப்ரகரணத்தை யநுஸரித்து வாத்ஸல்யமே அது - என்று எம்பெருமானார் திருவுள்ளம் பற்றுகிறார். தோஷபூயிஷ்டனான சேதநன் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக வரிப்பது எதற்காக வென்னில்; தன்னுடைய தோஷங்களைக் கண்டு எம்பெருமான் தன்னை நிக்ரஹித்தருளாமைக்காகவன்றோ; அப்பிராட்டியினுடைய புருஷகாரபலத்தாலே எம்பெருமானிடத்தில் முதன் முதலாக எந்த திருக்குணம் விகாஸமடைகிறதென்னில்; வாத்ஸல்யகுணமே யென்பது நிர்விவாதம்.

144. வாத்ஸல்யமாவது தோஷாதர்சித்வமா? தோஷபோக்யத்வமா? என்கிற விசாரம் இவ்விடத்தில் சிறிதும் கொள்ளப்படவில்லை. எதுவாயினுமாகுக. தோஷாதர்சநமே வாத்ஸல்யமென்று கொள்வோம். அக்குணம் எம்பெருமானுக்கு உள்ளதேயானாலும் சேதநனுடைய அபராத பாஹுள்யத்தாலே அது உள்ளே அமுங்கிக்கிடந்ததென்றும், பிராட்டியின் புருஷகார பலத்தாலே அது தலையெடுக்கிறதென்றும் ஆசார்யர்கள் கண்டறிந்து கூறு

கிறார்கள். இவ்விஷயத்தை தேசிகனும் ரஹஸ்யத்ரயஸாரத்தில் த்வயாதிகாரத்திலும் மற்றும் சிறு ரஹஸ்யங்களிலும் ஸுஸ்பஷ்டமாக வெளியிட்டுள்ளார். *நிகரில்புகழாய்!* என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் விவக்ஷிதமான குணம் வாத்ஸல்யமே யென்பது பிள்ளை லோகாசார்யருடைய ரஹஸ்யங்களோடு தேசிக ரஹஸ்யங்களோடு வாசியற எல்லாவற்றிலும் விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆக, இந்த வாத்ஸல்ய குணத்தை ஆழ்வார் நிகரற்றதாகத் திருவுள்ளம்பற்றின படியாலே, ஸ்வாமி ராமாநுஜர் இதை மற்ற திருக்குணங்களோடு சேர்த்துப்படித்த வளவால் த்ருப்திபெறாமல் தனிப்படவும் ஒரு சூர்ணிகை இதற்காக இட்டருளினர். இதனால் ஆழ்வாரருளிச் செயலில் எம்பெருமானர் வைத்திருந்த கௌரவாதிசயம் விசதம். ... (19)

## 20. "துஷ்யந்திச ரமந்திச"—திவ்யப்ரபந்தார்த்த விசேஷம்.

பகவத்கீதை பத்தாவது அத்யாயத்தில் ஒன்பதாவது ச்லோகம் (10-9.)

145. "मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् । कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च—

*மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம், கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்திச ரமந்திச" என்பது. இந்த ச்லோகம் பாகவத சிகாமணிகளின் அழகிய போதுபோக்கைப்பற்றிப் பகவான் [கீதாசார்யன்] பரமஸந்தோஷம் பொலியச் சொன்னது. பாகவதர்கள் இப்படி வர்த்திக்க வேணுமென்று சிக்ஷிக்கின்றதாகவும் அமைந்துள்ளது இந்தச்லோகம். இதை நெஞ்சில் ஆவ்ருத்தி பண்ணப் பண்ண விலக்ஷணமான வோர் ஆனந்தம் பக்தர்களுக்கு உண்டாகியேதீரும். கீதைக்குப் பல பாஷ்யங்கள் அவதரித்திருந்தாலும் நம் ஸ்வாமி எம்பெருமானாருளிச் செய்திருக்கும் பாஷ்யத்தின் மாதுர்யமும் காம்பீர்யமும் ஒப்புயர்வற்றது. அதிகமான விரிவு இன்றிக்கே ஸம்க்ஷிப்தமாகவே யிருந்தாலும் அர்த்தபுஷ்டி அந்யாத்ருச மென்பதை அநுபவரஸிகர்களே அறியமுடியும். அதற்கு முக்கியமான ஹேது ஸ்வாமிக்குண்டான திவ்யப்ரபந்தாவகாஹனமே யென்னத் தட்டில்லை. ப்ராக்ருத ச்லோகத்தின் முடிவில் "துஷ்யந்திச ரமந்திச" என்றுள்ளது. க்ரியாபதங்களிரண்டுக்கும் 'ஸந்தோஷிக்கிறார்கள்' என்பதொன்றே பொருளாகத் தேறுகின்றது. இந்த புநருக்தி எதற்காகவென்று ஆராயும்போது பாஷ்யங்களை யெடுத்துப் பார்க்க ஆவல் கிளர்கின்றது.

146. சங்கர பாஷ்யத்தைப் பார்த்தாலோ அதில், "तुष्यन्ति—परितोषमुपयान्ति ; रमन्ति च—रतिं च प्राप्नुवन्ति, प्रियसंगत्या इव" என்றுள்ளது. பரிதோஷமாவது என்ன ? ரதியாவது என்ன ? என்பதை நுண்ணுணர்வினர் நுட்பமாக அறிவர் போலும். இனி மத்வபாஷ்யத்தைப் பார்த்தாலோ, இங்கு 8, 9, 10, 11, ஆகிய நான்கு ச்லோகங்களுக்கு பாஷ்யமே கிடையாது. "सन्ति च भजन्तः केचिदित्याह अहमित्यादिना" என்று எட்டாவது ச்லோகத்திற்கு அவதாரிகையிட்டு, மேல் பதினோராவது ச்லோகம் வரையில் ஸ்பஷ்டார்த்தகமென்று முடித்திட்டார். அந்த பாஷ்யத்தின் ப்ரக்ரியை பெரும்பாலும் இத்தகையதே.

147. இனி நம் ஸ்வாமியின் பாஷ்ய ஸூக்திகள் காண்மின் ; [तुष्यन्ति च रमन्ति च] वक्तारः तद्वचनेन अनन्यप्रयोजनेन तुष्यन्ति । श्रोतारश्च तच्छ्रवणेन अनवधिकातिशयप्रियेण रमन्ते" என்றுள்ளது. பகவத் கதைகளைச் சொல்லி மகிழ்வார் சிலர்; அவற்றைக் காதாரக் கேட்டு மகிழ்வார் சிலர். இவ்வகையான பேதத்தையிட்டு க்ரியாபத பேதம் செய்ததாக ஸ்வாமி திருவுள்ளம் பற்றுகிறார். மூலத்தில் "போதயந்த: பரஸ்பரம்" என்றிருப்பதனாலே வக்தாக்களும் ச்ரோதாக்களுமாக இரண்டு வகுப்பினர் அவசியம் தேறுகிறார்கள். அவ்விரு வகுப்பினரிடத்தும் அந்வயிக்குமாறு இரண்டு க்ரியாபதங்களை கீதாசார்யன் ப்ரயோகித் திருப்பதாக உரை செய்திருக்கிறார் ஸ்வாமி ராமாநுஜர். இதை தேசிகன் தாத்பர்ய சந்த்ரிகையில் விவரிக்கும் போது, இரண்டு க்ரியாபதங்கள் பொருந்துவதற்காக வ்யக்திபேதம் கொண்டால் ச்லோகத்தை அந்வயிக்க ச்ரமப்படுவர்களென்று கருதி *कथनश्रवणयो रेकस्मिन्नेव कालभेदेन संभावितत्वात्* கதநச்ரவணயோரேகஸ்மிந்நேவ காலபேதேந ஸம்பாவிதத்வாத்* இத்யாதியால் ஒரே அதிகாரி ஒரு ஸமயத்தில் ப்ரவசநம் செய்து ஸந்தோஷிப்பதும், அந்த அதிகாரியே மற்றொரு ஸமயத்தில் ச்ரவணம்பண்ணி ஸந்தோஷிப்பதும் உலகில் ஸம்பாவிதமேயென்று காட்டி அந்வயக்லேசத்தைத் தவிர்த்திருக்கிறார். உண்மையில் பாஷ்யகாரருக்கும் இதுவே திருவுள்ள மென்பது எளிதாக அறியக்கூடியதே. ஒரு வ்யக்திக்கே ஒருகால் வக்த்ருத்வமும் மற்றொருகால் ச்ரோத்ருத்வமும் ஸம்பாவிதமேயன்றோ. தாம் சொல்லுகிற காலத்திலே உண்டாகும் ஆனந்தம் ஒருவிதம்; தாம் கேட்கும் காலத்திலே உண்டாகும் ஆனந்தம் மற்றொருவிதம். இப்படி இரண்டு வகையான ஆநந்தத்தையும் காட்டுவதற்காகவே துஷ்யந்தி, ரமந்தி என்று இரண்டு க்ரியைகள் பிரயோகிக்கப்பட்டன வென்னுமிது இதர பாஷ்யகாரர்க்கு ஸ்புரியாமல் நம் பாஷ்யகாரர்க்கு மாத்திரம் ஸ்புரித்ததற்குக் காரணம் திவ்யப்ரபந்தாவகாஹனமே.

148. எங்ஙனே யென்னில்; திருமழிசைப்பிரான் நான் முகன் திருவந்தாதியில் "தெரித் தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்றருளிச் செய்துள்ளார். இதில், வக்த்ருத்வம் ச்ரோத்ருத்வமாகிய இரண்டும் ஆழ்வார்தமக்கே காலபேதேந இருப்பதாகக் காட்டப்பட்டிருக்கிறது. எப்படி யென்னில், 'தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும்* என்ற விதில் தெரிக்கையாவது தெரிவிக்கை; அதாவது ப்ரவசநம் பண்ணுகை; அது ஒரு காலத்தில்; மற்றொரு காலத்தில் பிறர்சொல்ல ச்ரவணம் பண்ணுகையை (கேட்டும்) என்பதனால் தெரிவித்துள்ளார்.

149. ஒரு வ்யக்திக்கே வக்த்ருத்வமும் ச்ரோத்ருத்வமும் காலபேதேந ஸம்பவிக்கு மென்பதைத் தெரிந்து கொள்ள ஆழ்வார் பாசுரம் வேணுமோ? இது ஒவ்வொருவரும் ஸ்வத: தெரிந்து கொள்ளக் கூடியதன்றோ? என்று கேட்பீர்கள். இங்கு முக்கியமான விஷயம் என்ன வென்றால், ஆழ்வார் அந்த பாசுரம் தொடங்கும் போதே "தரித்திருந்தேனாகவே" என்று தொடங்குகிறார்; தெரித்தும்கேட்டும் போதுபோக்குவது ஸ்வாத்மா தரிப்பதற்காகவேயென்றும்,

இல்லையாகில் ஸ்வாத்மதாரணம் துர்லபம் என்றும் காட்டினர். அதையே ஸ்வாமி ஸம்ஸ்க்ருதத்திலெழுதியுள்ளார். "मया विना आत्मधारणमलभमानाः" என்று. 'மத்கதப்ராணா:' என்கிற மூலத்திற்கு "மயா விநா ஆத்மதாரண மலபமாநா:" என்று பொருளருளிச்செய்தது "தரித்திருந்தேனாகவே" என்கிற திருமழிசையாழ்வார் பாசுரம் திருவுள்ளத்தில் ஊறிக்கிடந்ததனாலேயே என்பதில் ஐயமுண்டோ? சங்கராசார்யர்க்கு இப்பொருள் தோன்றவில்லையே; அவரெழுதியுள்ள பொருள் அருளிச்செயலமுதக்கடலிலூறின ஸ்வாமியின் திருவுள்ளத்திற்கு ருசிக்கவில்லையே. ... ... ... (20)

## 21. கீதாபாஷ்யத்தின் ஸாரம்.

150. ஸ்வாமியின் கீதாபாஷ்யத்தை ஆழ்ந்து அநுபவித்தால் அதிலுள்ள ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் திவ்யப்ரபந்தத்தை யுட்கொண்டே அருளிச்செய்தவையென்று நிச்சயிக்கலாம். க்ரந்த விஸ்தரபயத்தினால் கீதாபாஷ்யத்திலிருந்து இப்போது ஸாரதமமாக ஒன்றே யெடுத்துக்காட்டி நிற்கிறேன்.

151. கீதை (10—10.) "தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதி பூர்வகம், ததாமி புத்தியோகம் தம்" என்றவிடத்தில் சங்கராசார்யர் 'ப்ரீதி பூர்வகம் பஜதாம்' என்று அந்வயக்ரமம் காட்டி "ப்ரீதி:- ஸ்நேஹ:; தத்பூர்வகம் மாம் பஜதாம் இத்யர்த்த:" என்று எழுதியுள்ளார். இந்த அர்த்தத்தில் என்ன குறை சொல்லமுடியும்? ஆனாலும் ஸ்வாமி "ப்ரீதிபூர்வகம் ததாமி" என்றே அந்வயம் காட்டியருளுகிறார். சேதநன் செய்கிற பஜனத்தில் ப்ரீதிபூர்வகத்வத்தைக் கூட்டாமல் எம்பெருமான் செய்யுமருளிலே அதைக் கூட்டுகிறார் ஸ்வாமி; இதற்கு உண்மையான காரணம் தெரியுமோ? திருவாய்மொழியில் (8-7.8) *என்னையாளும்பிரானார் வெறிதே யருள்செய்வர் - உகந்து* என்றுள்ளது. எம்பெருமான் தான் விஷயீகரிக்கத் திருவுள்ளமான விடத்தில் அவ்யாஜமாகச் செய்யுமருளை உகந்து செய்வதாக ஆழ்வார் அருளிச் செய்கிறார்; இப்படி யருளிச்செய்த ஆழ்வார்க்கு நிர்திஷ்டகீதா ச்லோகத்தில் "ப்ரீதிபூர்வகம் ததாமி" என்னுமந்வயமே திருவுள்ளத்திலுறைந்திருக்கு மென்று ஸ்வாமி நிச்சயித்து அதற்கு அநுரூபமான பாஷ்யத்தை இட்டருளினர். இவ்வண்ணமாக கீதாபாஷ்யத்தில் ஆழ்ந்து பார்த்தால் மஹாநிதிகள் மேலைமேலையாகக் கிடைக்கும். ... ... ... (21)

## 22. திருவாய்மொழியே வடிவெடுத்த ப்ரஹ்மஸூத்ரபாஷ்யம்.

152. சாரீரகமீமாம்ஸா—த்விதியாத்யாய—த்விதீய பாதத்தில் ஸர்வதாநுபபத்தியதிகாணத்தில் ஸர்வசூந்யவாதிகளான பௌத்த ஏகதேசிகளின் பக்ஷம் நிரஸிக்கப்படுகிறது. பரப்ரஹ்மமே ஜகத்காரண மென்று நன்கு நிலைநாட்டத்தோன்றிய இந்த அத்யாயத்தில் ஸர்வசூந்யத்வ வாதத்தை நிரஸிக்க என்ன ப்ரஸக்தியென்று சிலர் நினைக்கக் கூடும். ஜகத்காரண வஸ்து ப்ரதாநமா? பரமாணுவா? பரப்ரஹ்மமா? என்கிற விசாரம்

எப்போது பொருந்துமென்னில்; உண்மையில் ஜகதுத்பத்தி யென்பதொன்று நிரூபிக்க முடியுமானால் அப்போது பொருந்தும். அடியோடு இல்லாதவொரு பிள்ளைக்கு மாதாபிதாக்களைப்பற்றி விசாரம் செய்வதுண்டோ? ஜகதுத்பத்தியே நிரூபிக்கமுடியாததாயிருக்க, எது ஜகத் காரணம்? என்கிற சர்ச்சை ஏதுக்கு? உத்பத்தியானது भाव (பாவ) த்திலிருந்து அங்கீகரிக்கப்படுகிறதா? அபாவத்திலிருந்து அங்கீகரிக்கப்படுகிறதாவென்று கேட்கிறோம். भाव த்திலிருந்து என்பது சேராது; மண்பிண்டத்திலிருந்து பானை முதலியன உண்டாகின்றனவென்றால் மண்பிண்டத்தை உபமர்த்தித்துக் கொண்டுதானே யுண்டாகின்றன. எந்த காரியப்பொருளும் காரணப்பொருளை உபமர்த்தியாமல் உண்டாவதில்லை யென்பதைக் காணுகின்றோம். காரணகாரத்தின் விநாசந்தானே உபமர்த்தமாவது; அதுதான் அபாவமே. ஆக भाव த்தில் நின்றும் உத்பத்தியில்லை யென்று தேறிற்று. அபாவத்தில் நின்றுங்கூட உத்பத்தியில்லையென்பது அநாயாஸமாகத் தெரியவரும். அபாவத்திலிருந்து பூவோத்பத்தி ஸம்பவிக்கமாட்டாதன்றோ. ஆக உத்பத்தியே நிரூபிக்க முடியாதிருப்பதால் உத்பத்திக்குப் பிற்பட்டனவான விகாரங்கள் எதுவுமே கிடையாவென்பது ஸித்தம். லோகவ்யவஹாரமெல்லாம் ப்ரம மூலகமே. [இது ஸர்வசூந்யவாதிகளின் வாதப்ரக்ரியை.]

153. இப்படி சூந்யமே தான் தத்துவம்=என்பவர்கள் இங்கு நிரஸிக்கப்படுகிறார்கள். * सर्वथाऽनुपपत्तेश्च * [ஸர்வதாநுபபத்தேச்ச] என்பது ஸூத்ரம். ப்ரமேயங்களோ ப்ரமாணங்களோ எதுவும் உண்டாகிலுமாம், இல்லையாகிலுமாம்; பூர்வபக்ஷிக்கு அபிமதமான சூந்யத்வம் ஒருவிதத்திலும் தேறாதாகையாலே மாத்யமிகதர்சநம் அஸமஞ்ஜஸ மென்றபடி. 'ஸர்வம் சூந்யம்' என்று சொல்லுபவர்கள் தங்களுக்கு அபிமதமான இவ்வர்த்தத்தை ஸாதித்துத் தரும்படியான ப்ரமாணமொன்று உண்டென்று இசையும் பக்ஷத்தில் ப்ரமாண ஸத்பாவத்தையிசைந்தபோதே ஸர்வசூந்யவாதம் தொலைந்தது. ப்ரமாணமில்லையென்னும் பக்ஷத்தில், ப்ரமாணமில்லாமையினாலேயே தங்களுக்கு அபிமதமான அர்த்தம் அஸித்தமென்று முடிந்தது. மேலும், 'ஸர்வம் சூந்யம்' என்கிற விந்த வார்த்தையினால் நாஸ்தித்வந்தானே விவக்ஷிதமாகவேணும். ஒரு ரூபத்தை விட்டு மற்றொரு ரூபத்தையடைவதே நாஸ்தி பதார்த்தமாகையாலே ரூபாந்தரத்தாலே அஸ்தித்வமே சொல்லப்பட்டதாக முடிகிறது. மண்ணுண்டையொன்று இருந்தது. பானை தோன்றும்போது அந்த ம்ருத்பிண்டம் நசிக்கிறது. அது நசித்தவளவிலே 'ம்ருத்பிண்டோ நாஸ்தி' என்று சொல்லுகிறான். இந்த வ்யவஹாரத்தில் பானையென்கிற அவஸ்தைதானே விஷயமாகிறது.

154. உலகில் அஸ்தி நாஸ்தித்வங்களை வழங்குகிறவர்கள் 'இப்போது மண்ணுண்டையிருக்கிறது, இப்போது மண்ணுண்டையில்லை; இங்கு மண்ணுண்டையிருக்கிறது, இங்கு மண்ணுண்டையில்லை'? என்றிப்படி இடத்தையும் காலத்தையும் உட்படுத்தியே வ்யவஹரிக்கிறார்கள். தேச காலங்களைச்

சேர்க்காமல் வெறுமனே 'மண்ணுண்டையில்லை' என்கிற ப்ரதீதியோ வ்யவஹாரமோ எங்கும் காண்பதில்லை. 'இப்போது ம்ருத்பிண்டமிருக்கிறது' என்றோ 'இங்கு ம்ருத்பிண்டமிருக்கிறது' என்றோ ஒருவன் வ்யவஹரித்தால் மண் என்னும் த்ரவ்யத்திற்கு பிண்டத்வாவஸ்தை விஷயம். 'இப்போது ம்ருத்பிண்டமில்லை' என்றோ 'இங்கு ம்ருத்பிண்டமில்லை' என்றோ வ்யவஹரித்தால் பிண்டத்வாவஸ்தையின் நாசமாகிய घट (கட) த்வாவஸ்தை விஷயம். ஆக நாஸ்தித்வவ்யவஹாரம் பண்ணினாலுங்கூட வேறொரு ஆகாரத்தாலே அஸ்தித்வமே தேறிநிற்கிறதென்பதை ஸர்வாநுபவஸாக்ஷிகமாகக் காணலாம். இன்ன வஸ்து இங்கில்லை என்றால் மற்றோரிடத்திலுள்ளதாகத் தேறியே தீரும். இப்போதில்லையென்றாலும் மற்றொருபோதில் உண்டென்றதாகத் தேறியேவிடும். ஆகவே ஒருபடியாலும் ஸர்வசூந்யவாதம் ஸித்தியாது என்றதாயிற்று. ஸூத்ரத்தின்மேலே பொருள் காண்பது எங்ஙனேயென்னில்; ஸர்வதா—ஸர்வப்ரகாரத்தாலும், அநுபபத்தே:—ஸ்வாபிமதமான ஸர்வசூந்யவாதம் உபபந்நமாகாமையினாலே என்றபடி. 'ஸர்வப்ரகாரத்தாலும்' என்றதை ஸ்ரீ பாஷ்யத்தில் ஸ்வாமி விவரித்தருளும்போது "सदिति प्रतिज्ञायाम् असदितिप्रतिज्ञायां च" என்றருளிச்செய்கிறார். சங்கரபாஷ்யத்தில் இவ்விதமான வழியில் அர்த்தம் செய்யப்படவில்லை. 'देवदत्तः सर्वथा अयोग्यः, यज्ञदत्त सर्वथा मूर्खः' என்றால் இதற்கு எவ்விதமாகப் பொருள் கொள்ளுகிறோமோ அவ்விதமாகவே சங்கராசாரியர் பொருள் கொண்டார். நம்ஸ்வாமி கொண்ட பொருள்தான் உண்மையில் ஸமஞ்ஜஸமானது. ஸ்வாமிக்கு இப்பொருள் தோன்றினது எதனாலென்னில்; திருவாய்மொழியில் (1—1—9) *உளனெனிலுளன் அவனுருவ மிவ்வுருவுகள், உளனலனெனில் அவனருவ மிவ்வருவுகள், உளனென விலனென விவைகுண முடைமையின், உளனிருதகைமையொ டொழிவிலன் பரந்தே* என்ற பாசுரங்கொண்டே இந்த ஸூத்ரத்தின் பொருளை ஸ்வாமி அறுதியிட்டருளினாரென்பது நிஸ்ஸந்தேஹம். அப்பாசுரத்தின் ஆறாயிரப் படியை ஸேவித்தால் இஃது எளிதிற் புலனாம். அப்பாட்டிற்குத் தமிழ் மொழியாலெழுதப்பட்டுள்ள பொருள்தான் ஸ்ரீபாஷ்யத்தில் வடமொழியாலெழுதப்பட்டுள்ளதென்பதை விசதமாக நிரூபித்துக்காட்டுகிறேன் காண்மின்;

| திருவாய்மொழி ஸூக்தி | ஸ்ரீபாஷ்ய ஸூக்தி |
|---|---|
| உளனெனில் உளன் ;<br>அவனுருவம் இவ்வுருவுகள் ; | किं भवान् सर्वं सदिति प्रतिजानीते ?<br>(तथासति) तवाभिप्रेतं तुच्छत्वं न संभवति ; |
| உளனலனெனில் உளன் ;<br>அவனருவ மிவ்வருவுகள் ;<br>இருதகைமையோடு உளன். | किं भवान् असदितिप्रतिजानीते ? (तदाऽपि) तुच्छत्वं न संभवति । शून्यमितिप्रतिजानता सदिति प्रतिजानतेव सर्वस्य विद्यमानस्य अवस्थाविशेषयोगितैव प्रतिज्ञाता भवतीति तुच्छता न कुतश्चिदपि सिध्यति ॥ |

155. வேதாந்த தீபத்திலும் ஸாரத்திலும் ஸம்க்ஷேபமாக ஸாதித்திருக்கிற ஸூக்திகளை ஸேவித்தாலும் திருவாய்மொழிக்கு நேர்மொழிபெயர்ப்பாகவே விளங்கும். இதர பாஷ்யகாரர்கள் இங்ஙனே ஸூத்ரத்தை நிர்வஹியா தொழிந்தது திவ்யப்ரபந்தத்தில் ப்ரவேசமில்லாமையினாலேயே என்பது திண்ணமாக வெண்ணத்தக்கது ... ... ... (22)

## 23. நித்யக்ரந்தத்தில் நிதியான ஸூக்தியொன்று.

156. ஸ்வாமி ராமாநுஜர் நவரத்நமாகவருளிச்செய்த ஒன்பது திவ்யக்ரந்தங்களில் சரமமென்று சொல்லப்பட்டு வருகிற நித்யக்ரந்தத்திலிருந்து ஒரு நிதியை யெடுத்துக் காட்டுகிறேனிங்கு. ஸ்ரீவைஷ்ணவர்கள் தினப்படி செய்யும் திருவாராதனத்தில் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை யநுஸந்தித்தே தலைக்கட்ட வேண்டுமென்றும், ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளின் அநுஸந்தானமில்லாத திருவாராதனத்தினால் எம்பெருமானுடைய திருவுள்ளம் உகவாதென்றும் ஸத்ஸம்ப்ரதாய வ்ருத்தர்களின் அத்யவஸாயமுள்ளது. அநுஷ்டானமும் இவ்வண்ணமாகவே அநாதிகாலமாக எங்கும் நிகழ்ந்து வருகிறது. இதுபற்றி ஸ்வாமியெம்பெருமானாருளிச்செய்த திருவாராதந ப்ரயோகத்தில் [நித்யக்ரந்தத்தில்] ஒன்றும் அருளிச்செய்யப்பட்டிருக்கவில்லையேயென்றும், அவருடைய காலத்தில் இங்ஙனே அனுஷ்டான மிருந்திருந்தால் இதை ஸ்வாமி அருளிச் செய்யாது விட்டிடுவரா? என்றும் சிலர் கலங்கிப் பேசுவதுண்டு.

157. "அர்ச்சாவதாரம் சாஸ்த்ரீயமாக இருந்தால் இதைப்பற்றி வேதத்தில் சொல்லப்படாமலிருக்குமா? வேதத்தில் ஓரிடத்திலும் அர்ச்சாவதார ப்ரஸ்தாவமேயில்லையே; அப்படியிருக்க அர்ச்சாவதார ப்ராமாண்யம் எங்ஙனே இசையலாகும்?" என்று சிலர் கோலாஹலம் செய்வதுண்டு; இவர்கள் வேதங்களைப் பூர்த்தியாகப் பார்த்து விட்டதாகவும் ஓதிவிட்டதாகவுமெண்ணியன்றோ இப்படி ஸம்ப்ரமிக்கிறார்கள். இங்ஙனே பலபல விஷயங்களுண்டு. ஒன்றையும் உற்று நோக்காமல் மேலெழப்பார்க்கும் சிலருடைய வார்த்தைகளையே வேதமாக நம்பி 'அதில் இது கிடையாது; இதில் அது கிடையாது' என்று ஸர்வஜ்ஞர்கள்போல் பேசிக்கொண்டு சில பாமரர்களை ப்ரதாரணம் பண்ணுமவர்கள் எங்குமுளர். அதுபோலவே ஸ்வாமியின் நித்யக்ரந்தத்தை ஊன்றி நோக்காமலே யாரோ சிலர் சொல்லும் வார்த்தை யிது.

158. நித்யக்ரந்தத்தில் "श्रुतिसुखैः स्तोत्रैरभिष्टूय—ச்ருதிஸுகை: ஸ்தோத்ரைரபிஷ்டூய" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளுக்கு "செவிக்கினிய செஞ்சொல்" என்றே வ்யபதேசம். "கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" (திருவாய்மொழி. 10 6-11.) என்று ஆழ்வார் தாமேயருளிச் செய்யும்படியாயிற்று. 'செவிக்கினிய' என்றதற்குப் பர்யாயமாகவே ஸ்வாமி (ச்ருதிஸுகை:) என்றருளிச் செய்தது. வைதிக ஸூக்தை:' என்றோ வேறுவிதமாகவோ அருளிச்செய்யாமல் இங்ஙனே

யருளிச் செய்தது ஸ்வாமிக்கே அஸாதாரணமான கம்பீரஸரணி. "ச்ருதி ஸூக்தை: ஸூக்தை:" என்றும் சில ஸ்ரீகோசங்களிற் பாடங்காண்கிறது. அது வும் மிகப்பொருந்தும். எம்பெருமானாருடைய கம்பீரஸூக்தி ஸரணியைப் பற்றி அடுத்த வியாஸம் ஆழ்ந்து அநுபவிக்கத் தக்கது. ... (23)

---

## 24. பகவத்ராமாநுஜ ஸ்ரீஸூக்திசைலி

159. இதுவரை நாம் செய்த நிரூபணங்களை ஊன்றி நோக்குமவர்கள், பகவத் ராமாநுஜர் திவ்யப்ரபந்தாம்ருத ஸாகரத்தில் ஆழ்ந்தவரே யென்பதை அந்தரங்கஸாக்ஷிகமாக அறுதியிடுவர்களென்பதில் ஐயமில்லை. ஆனாலும் சிலருடைய உள்ளத்தில் ஒரு தோற்ற முதிக்கக் கூடியதுண்டு; (அதாவது)— இங்ஙனே நுட்பமாக எடுத்துக்காட்டவேண்டும்படி கஹனமாக அருளிச் செய்வானேன்? ஸூவ்யக்தமாகவே கூரத்தாழ்வான் பட்டர் முதலானாரைப் போலே அருளிச்செய்திருக்கலாகாதா? என்று.

160. இந்த சங்கை யுக்தமானதே. இது சிலர்க்கு மாத்திரமல்ல; பலர்க்கும் உதிக்கக்கூடியதே. ஸ்ரீபாஷ்ய ப்ரவசநப்ரவீணர்களான மஹாமதிகளுங்கூட இங்ஙனே எண்ணுவதுண்டு. ஸ்வாமிக்குப் பரமாதரணீயரான ஆளவந்தார் *மாதாபிதாச்லோகமருளிச் செய்திருக்கிறார்; ஆழ்வான் பட்டர் முதலானார் ஆழ்வாரைப்பற்றி அபரிமிதமாக அருளிச் செய்திருக்கிறார்கள்; அப்படி எம் பெருமானார் ஏன் அருளிச்செய்யக்கூடாது? என்று கேட்பவர்கள் பலருண்டு. இதற்குப் பெரியார்கள் பகர்வது இவ்வளவே; ஒவ்வொருவருடைய உக்திசைலி ஒவ்வொருவிதமானது; ஆளவந்தாரும் "வகுளாபிராமம்" என்கிற ஒரு விலக்ஷணோக்தியினால் விளங்கவைத்தாரேயல்லது வேறில்லை. அவருடைய உக்திசா துர்யத்திற்காட்டிலும் மிக அற்புதமானது எம்பெருமானாருடைய உக்தி சாதுர்யம். இவர் 'பஞ்சாசார்யபதாச்ரிதர்' என்பது ஸூப்ரஸித்தம். அந்த ஐந்து ஆசார்யர்களின் திருநாமங்களை தேசிகனும் எடுத்துக்காட்டியிருப்பத னாலே ஸ்வாமி பஞ்சாசார்ய பதாச்ரிதரென்பதில் யார்க்கும் ஸம்சயமோ விவாதமோ இருக்க ப்ரஸக்தியில்லை. அந்த ஆசார்யர்களைப்பற்றி ஸ்வாமி எவ்விதமான ஸ்துதிகளை யருளிச் செய்திருக்கிறாரென்று பார்க்கவேணும். அந்த ஆசாரியர்கட்கு அந்நாள் தொடங்கி வழங்கிவரும் தனியன்கள் ஸ்வாமி தாம் அருளிச்செய்தவையென்று பலர் சொல்லுவதுண்டு. அது விவாதக்ரஸ்தமென்றே விட்டிடுவோம். ஆளவந்தார்க்குத் தனியனை *யத்பதாம்போரு ஹேத்யாதிச்லோகம் ஸ்வாமியருளிச் செய்ததென்பது நிர்விவாதம். இது கீதாபாஷ்யத்திலேயே சேர்ந்ததாதலால் ஸ்வாமி ஸூக்தி யென்பதில் விவாத லேசமுமில்லை. இந்த ச்லோகம் அமைந்திருக்குமழகை ஆராய்ந்தால் ஸ்வாமி யின் உக்திஸரணி லோகவிலக்ஷணமானதென்பதை அல்ப ப்ராஜ்ஞர்களும் அறுதியிடக்கூடும். அந்தச்லோகத்திற்குப் பெரியார்கள் பரம்பரையாக உப தேசித்துவரும் அர்த்தவிசேஷங்களை ஆஸ்திகர்களுக்கு உபகரிக்கிறோமிங்கு.

" யத்பதாம்போருஹத்யாந வித்வஸ்தா சேஷகல்மஷ:,
வஸ்துதாமுபயாதோஹம் யாமுநேயம் நமாமி தம்."

இது ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகளை மாத்திரம் சிந்திப்பதாகச் சொல்லவந்ததன்று ; *யத்பதாம்போருஹபதத்தினால் பதினான்கு திருவடிகள் உத்தேசிக்கப்படுகின்றன. (யத்பதாம்போருஹ) என்கிற ஆறெழுத்துக்களுக்கு வர்ணக்ரமம் சொன்னால் பதினான்கெழுத்துக்கள் தேறும். யகார அகார, தகார, பகார அகார, தகார ஆகார, மகார, பகார ஓகார, ரேப,உகார, ஹகார அகார=என்றாயிற்று வர்ணக்ரமம் சொல்லும் வழி. இவ்வகையில் தேறுகிற பதினான்கெழுத்துக்களும் பதினான்கு திருவடிகளைத் தெரிவிக்கும். அவை எவையென்னில் ; ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகள் தெரிந்தேயிருக்கின்றன. அவ்வாளவந்தார் தமக்குப் பரமநிதியாகக்கொண்ட [*ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா* என்ற] நம்மாழ்வாருடைய இரண்டு திருவடிகள் ; ஆக நான்கு. அவ்வாளவந்தாருடைய திருவடிகளை ஆச்ரயித்திருந்து ஸ்வாமிக்கு ஆசார்யர்களான பஞ்சாசார்யர்களின் திருவடிகள் பத்து. ஆக இப்பதினான்கு திருவடிகளைச் சிந்தித்து ஸத்தை பெற்றதாகத் தெரிவிப்பது இந்த ச்லோகம். அதனை விவரித்துக்காட்டுகேன் காண்மின்.

161. யஸ்ய பதாம்போருஹே—யத்பதாம்போருஹே ; என்று ஸமாஸம். (ஸம்பந்த ஸாமாந்யே ஷஷ்டீ என்று அறிக.) ஆளவந்தாருடைய திருமேனியிலுள்ள பாதாரவிந்தங்களைச் சொன்னபடி. மறுபடியும் 'யஸ்ய பதாம்போருஹே, என்றால்—ஆளவந்தார்தாம் *மாதா பிதா யுவதய:* என்கிற ச்லோகத்தில் " ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா *என்று தம்முடைய சென்னிக்கு அணியாகப் பரிக்ரஹித்த நம்மாழ்வாருடைய உபயபாதங்களும் யத்பதாம்போருஹ சப்தத்தினாலேயே எளிதாகத் தெரிவிக்கப்படும். இப்போது ஷஷ்டிக்கு அர்த்தம்—பரிக்ராஹ்ய பரிக்ராஹக பாவரூபமான ஸம்பந்தம். மீண்டும் 'யஸ்ய பதாம்போருஹாணி யத்பதாம்போருஹாணி" என்று கொள்க. உலகில் சிஷ்யர்களைத் திருவடிகளென்றே ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் வழங்குவராதலால் ஆளவந்தாருடைய ஐந்து சிஷ்யர்களையே ஆளவந்தாருடைய திருவடிகளாகச் சொன்னபடி. 'பதாம்போருஹ' என்பதில் இரண்டுபதங்கள் உள்ளனவன்றோ ; (பத என்றும், அப்போருஹ என்றும். திருவடிக்கு வாசகமான பத சப்தத்தினால் அவருடைய சிஷ்யர்களைச் சொல்லி, தாமரைக்கு வாசகமான அம்போருஹ சப்தத்தினால் அவர்களுடைய திருவடிகளைச் சொல்லுகிற தென்றும் கொள்ளலாம். அம்போருஹமென்றால் திருவடிகளைச் சொல்லுமோவென்னில் ; *தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே* (திருவாய்மொழி. 6—9—9.) என்கிற ஆழ்வார் பிரயோகத்தை யறிந்தவர்கள் இதில் விப்ரதிபத்தி பண்ணமாட்டார்கள். " தாவி வையங்கொண்ட தடந்தாளிணை " என்ன வேண்டுமிடத்தில் திருவடிக்குப் பர்யாயமாகத் தாமரையையே சொல்லியிருப்பது காண்க. இந்த நடை வடமொழியிலுமுண்டு ; அபஹ்நுதி யலங்கார மென்பர்கள். ரூபகாதிசயோக்தியுமாகும். " பச்ய நீலோத்பலத்வந்த்வாத் நிஸ்ஸரந்தி சிதாச் சரா:."

162. ஆக, பரமாசார்யரான நம்மாழ்வாரையும் ப்ராசார்யரான ஆளவந்தாரையும் ஸ்வாசார்யர்களான ஐவரையும் ப்ரகாசப்படுத்தியே தனியனிட்டிருக்கு மழகு ஸஹ்ருதய ஹ்ருதயங்கமம். "குரும் ப்ரகாசயேத் சிஷ்ய:" என்னுமல் "குரும்ப்ரகாசயேத் தீமாந்" என்று மூலப்ரமாணத்தில் இருக்கையாலே மஹாமேதாவிகள் எவ்விதமாக ஆசார்ய ப்ரகாசநம் பண்ணலாமோ அவ்விதமாகவே ஸ்வாமி தாமும் தம்முடைய மேதாவைபவம் விளங்க இங்ஙனே ச்லோகரசநம் தொடுத்திருப்பது மிகவற்புதம். மஹான்களுடைய திருநாவின் வீறு இங்ஙனே யன்றோ இருப்பது.

163. இப்படி நுட்பமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்படி ஏதுக்கு ச்லோக மியற்ற வேணும்? எல்லாரும் ஸுஸ்பஷ்டமாகவே நன்கு தெரிந்து கொள்ளும்படி யியற்றலாகாதோ வென்று கேட்பவர்கள் யாவஜ்ஜீவம் அப்படியே கேட்டுக்கொண்டிருக்கலாம்.

164. *யத்பதாம்போருஹேத்யாதியான மேற்குறித்த தனியனில் மற்றொருவிசேஷமும் நுட்பமாக உய்த்துணரத் தக்கதுண்டு; அதாவது—[ பதாம்போருஹ ] என்று ஐந்து எழுத்துக்களையிட்டு ஆளவந்தார்திருவடிகளை நிர்தேசித்திருப்பதானது ஆளவந்தாருடைய ஐந்து திருவடிகள் [அதாவது, ஐந்து சிஷ்யர்கள்] தம்முடைய சிந்தனைக்கு இலக்கானவர்களென்றும் தெரிவிக்கப்பட்டதாகிறது. அதுதன்னிலும் முதலிலே பகாரத்தையிட்டிருப்பதானது அந்த ஐந்து ஆசாரியர்களுள் தலைமையாசிரியரே தமக்குத் தலைவரான ஆசார்யராக வாய்த்தார் என்பதற்கு ஸூசகமாகிறது. எங்ஙனே யென்னில்; ஸ்வாமிக்குத் தலைமையாசிரியர் பெரிய நம்பி; அவருடைய நிஜநாமதேயம் பராங்குசதாஸர் என்பது. வாக்ய குருபரம்பரையில் "ஸ்ரீமதே ராமாநுஜாயநம:, ஸ்ரீமத்யாமுநமுநயே நம:" என்ற வாக்யங்களுக்கிடையில் "ஸ்ரீபராங்குச தாஸாய நம:"என்றிருப்பது கொண்டும் பெரியநம்பியினுடைய திருநாமம் பராங்குச தாஸ ரென்பதே யென்றறியலாம். பதாம்போருஹ என்றதில் முதலிலுள்ள பகாரம் பராங்குச தாஸராகிற தம் முதலாசிரியரை ப்ரத்யபிஜ்ஞாபநம் பண்ணவல்லது என்றுணர்க. இதற்குமேல் ஒன்று கேட்கக்கூடும்; முதலெழுத்தினால் பெரியநம்பி ஸூசிதராகிறப்போலே, மற்றை நான்கெழுத்துக்களினாலும் நான்கு ஆசார்யர்கள் ஸூசிதர்களாகிறபடியையும் காட்டவேண்டாவோ? என்று. கேண்மின்; தலைவரான ஆசிரியரைக் காட்டுமளவே போதுமானது. ஒவ்வோராசிரியரையும் இங்ஙனே காட்டியாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. மஹா விவேகிகளான சதுரர்கள் இன்னமும் உட்புகுந்து ஆராய்ந்து பார்த்தால் அந்த வழியும் புலப்படக்கூடும். அதையும் மற்றொருகால் நாமே காட்டுவோம்.

165. ஆக இந்த உபபாதந ப்ரக்ரியையினால் எம்பெருமானார் அரியபெரிய விசேஷங்களை நுட்பமாகவே அருளிச்செய்யுமியல்வினர் என்பதை விவேகிகள் நிர்ணயிக்கக் குறையில்லை. திருமாலையாண்டான் திருவடிகளிலே ஸ்வாமி திருவாய்மொழிப்பொருள் கேளாநிற்கையில் "த்ரோணாசார்யர்க்கு ஏகலவ்யன் போலே ஆளவந்தார்க்கு நான்" என்றருளிச் செய்ததாக சரித்திர நூல்களிலே ப்ரஸித்தமாகவுள்ளது. இதை தேசிகன் அப்படியே ஸம்ஸ்க்ருதப்படுத்தி

அருளிச்செய்கிறுர்—“த்ரோணுசார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹமித்யபிப்ராயேண” என்று *யத்பதாம்போருஹ ச்லோக வியாக்கியானத்தில். ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமே வடிவெடுத்தவரான ஆளவந்தாருடைய திருவடிகளைச் சிந்தித்துத் தாம் ஸத்தை பெற்றதாகச் சொல்லிக் கொள்ளுமெம்பெருமானுர் ஆழ்வார்திருவடிகளிலும் அவருடைய திவ்ய ஸூக்திகளிலும் ஆளவந்தாரைவிட அதிசயிதமான ப்ராவண்யமுடையவரே யென்பது சிலாலிகிதமே. ... ... ... (24)

---

## 25. ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்த நிர்ணயமும் திவ்யப்ரபந்தத்திலிருந்தே.

166. நம்முடைய விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தில் சரீராத்மபாவமென்பது ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்தமென்று குலாவப்படுகிறது. உபநிஷத்துக்களில் சேதநா சேதந ஈச்வரர்களுக்கு அபேதம் சிலவிடங்களிலும், பேதம் பலவிடங்களிலும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அபேதம் தெரிவிக்கப்பட்ட இடங்களை மாத்திரம் அத்வைதிகள் முக்கியமாகக்கொண்டு, பேதம் தெரிவிக்கப்பட்ட இடங்களை கௌணமாக்கி நிர்வஹிக்கிறுர்கள். த்வைதிகளோவென்னில் பேதம் தெரிவிக்கப்பட்ட இடங்களை மாத்திரம் முக்கியமாகக் கொண்டு அபேதச்ருதிகளை கௌணமாக்கி நிர்வஹிக்கிறுர்கள். ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் அப்படியன்றிக்கே உபயச்ருதிகளையும் ஸமப்ரதாநமாகவே கொண்டு நிர்வஹித்து விசிஷ்டாத்வைதிகளென்று பேர்பெற்றுவருகிறோம். பேதம் அபேதம் ஆகிய இரண்டையும் தெரிவிக்கிற உபயச்ருதிகளையும் ஸமப்ரதாநமாக எப்படி நிர்வஹிக்கிறோமென்றுல் சரீராத்ம பாவத்தைக் கொண்டு நிர்வஹிக்கிறோம்.

167. இதை இங்கு நாம் விரிவாக விவரிக்கவேண்டிய ஆவச்யகதையில்லை. ஸுபாலோபநிஷத்து அந்தர்யாமிப்ராஹ்மணம் முதலான உபநிஷத்துக்களைக்கொண்டே ஆளவந்தார் எம்பெருமானுர் முதலான ஆசார்யர்கள் இந்த நிர்வாஹ ப்ரக்ரியையைப் பேணி வருகிறுர்களென்று நம்மவர்கள் சொல்லி வருகிறுர்கள். இதை நாம் மறுப்போமல்லோம். ஆனுல் இங்கு ஒன்று நாம் ஆலோசிக்கவேண்டும். அந்தர்யாமி ப்ராஹ்மணுதிகள் நமக்கு மாத்திரமே தோன்றினவையல்ல; அவை மதாந்தரஸ்தர்களுக்குமுண்டே; ஆகிலும் அவர்கள் அந்த உபநிஷத் பாகங்களில் ஆதரமின்றிக்கே யிராநின்றுர்கள்; ஆளவந்தாரெம்பெருமானுர் முதலான நம் ஆசார்யவர்யர்களே அவற்றில் விசேஷத்ருஷ்டியைச் செலுத்தியிருக்கிறுர்கள். இதற்கு என்ன காரணமென்னில், *அருளினுன் அவ்வருமறையின் பொருள், அருள் கொண்டாயிரமின் தமிழ் பாடினுன், அருள்கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே* என்றுர் ஸ்ரீமதுரகவிகள்; *சடகோபனருளினுலே* என்றுர் தேசிகன்; * तदादौ गाथाभिर्मुनिरधिकविंशाभिरिह नः कृती सारग्राहं व्यतरदिह संगृह्य कृपया * இத்யாதிகளாலே த்ரமி

டோபநிஷத் ஸாரதாத்பர்யரத்நாவளிகளில் விரிவாகவுமருளிச் செய்தாரவரே. இங்கு இருபது பாசுரங்களிலுலென்னுமல் " अधिकविंशाभिः गाथाभिः " என்றும், ரத்நாவளியில் " विंशतिर्विक्ति साम्रा " என்றும் சொச்சமும் கூட்டியருளிச் செய்திருக்கையாலே திருவாய்மொழியில் முதலிரண்டு தசகங்களும் மூன்ரும் தசகத்தில் இரண்டு பாசுரங்களும் பாஷ்யகாரருடைய வேதாந்தார்த்த நிஷ்கர்ஷங்களுக்கு மிகவும் ஹஸ்தாவலம்பமாயிருந்தனவென்று நம் ஆசார்ய கோஷ்டியில் ப்ரஸித்தமாகச் சொல்லி வருமது தேசிகஸூக்தியால் ப்ரதிஷ்டாபிதமாயிருக்கிறது. ஆசார்யர்களெல்லாரும் இதில் ஸமகண்டர்களே யன்ரே.

168. முக்கியமாக பேதாபேதச்ருதிகளை சரீரசரீரிபாவத்தாலே நம் ஆசார்யர்கள் பொருந்தவிட்டது ஆழ்வார் ஸ்ரீஸூக்தியைக் கொண்டே யென்பதில் ஸந்தேஹமில்லை. திருவாய்மொழியில் (1-1-7). *உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்* என்கிற பாசுரத்திலிருந்தே நிதிகண்டு பெற்று நிர்மலஹ்ருதயரானுர்கள். அப்பாசுரத்திற்குப் பிள்ளானுடைய ஆருயிரப்படி வியாக்கியானம் வெகு விரிவாக அவதரித்திருக்கின்றது. அவ்வளவு விரிவு ஆயிரத்திலுள் வேறு எந்த பாசுரத்திற்கும் கிடையாது. ஸ்வாமி பாஷ்யகாரர்க்கு அந்த பாசுரமே நிதிகாட்டிக்கொடுத்த தென்பதைப் பிள்ளான் தம் முடைய விசதவ்யாக்யானமுகத்தாலே தெளிவித்தாராயிற்று.

169. இவ்விஷயம் போலவே, நிர்க்குணச்ருதிகளுக்கு ஹேயகுண ராஹித்ய ப்ரதிபாதனத்திலே நோக்கென்று ஒதுக்கி எம்பெருமானை அநந்த கல்யாண குணமஹோததியாக ஆளவந்தாரு மெம்பெருமானுரும் நிஷ்கர்ஷித்தருளினதும் ஆழ்வார்ஸூக்திகளைக் கொண்டேதான்; சாரீரகமீமாம்ஸையின் முதல் ஸூத்ரம் *அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா* என்பது. இதில் ப்ரஹ்மசப்தத்திற்கு சங்கராசார்யரும் அர்த்தம் செய்கிருர், நமது ஸ்ரீபாஷ்யகாரரும் விவரணம் செய்தருளுகிருர். இரண்டிடங்களையும் பார்ப்போம். *ब्रह्म च वक्ष्यमाणलक्षणम् जन्माद्यस्य यत इति* என்றிவ்வளவேயுள்ளது சங்கரபாஷ்யம். ஸ்வாமி பாஷ்ய ஸூக்தியோவென்னில்; *ப்ரஹ்ம சப்தேந ஸ்வபாவதோ நிரஸ்த நிகில தோஷ: அநவதிகாதிசயா ஸங்க்யேய கல்யாண குணகண: புருஷோத்தம: அபிதீயதே* என்றுள்ளது. ஆழ்வார் திருவாய்மொழி தொடங்கும் போதே *உயர்வறவுயர் நலமுடையவன்* என்றருளிச்செய்த சந்தையையே ஸ்வாமி நேராக மொழி பெயர்த்திருக்கிருர். உயர்வு அற = அநவதிகாதிசய, உயர்-அஸங்க்யேய, நலமுடையவன் - கல்யாணகுணகண:, யவனவன்—புருஷோத்தம:.

170. ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் முழுதும் பகவத்குணகணமயமேயாதலால் அந்த அம்ருத ஸாகரத்திலே யூறின ஸ்ரீராமாநுஜர் அதற்குத் தகுந்தபடியே யருளிச்செய்கிருர். தமிழில், மால் என்றும் நெடுமால் என்றுமுள்ள சொற்களுக்கு எவ்வகையான அர்த்தங்களை நாம் பகவத் விஷயத்தில் அநுபவிக்கிரேமோ அவ்வர்த்தங்களையே ப்ரஹ்மசப்தார்த்தமாக ஸ்வாமி உபபாதித்தருளும் பரிசை அநுபவிக்க இட்டுப் பிறந்தவர்களே பரமபாக்ய சாலிகள். (25)

இனி ஆளவந்தாருடைய திவ்யஸூக்திகளி லிறங்குவோம்.

## 26. ஆளவந்தாரும் ஆழ்வார்களும்.

171. யாமுநாசார்யரென்பவரே ஆளவந்தார்; திவ்யப்பிரபந்தங்களைப் புநருத்தாரம் செய்தருளின ஸ்ரீமந்நாத முனிகளின் திருப்பேரனார் இவர், ஸ்ரீராமாநுஜர்க்கும் பரமாசாரியர். இவரைப்போன்ற மஹாவித்வான் *நபூதோ நப விஷ்யதியென்பதை உலகமறியும். *மீமாம்ஸா சாஸ்த்ரயுக்மச்ரமவிமலமநா: ம்ருக்யதாம் மாத்ருசோந்ய:* என்றும் *நவயம் கவயஸ்து கேவலம் நவயம் கேவலதந்த்ர பாரகா:, அபிது ப்ரதிவாதிவாரண ப்ரகடா டோப விபாடந க்ஷமா:* என்றும் ஸமயவிசேஷத்தில் தம் பெருமையைத் தாமே வெளியிட்டுக் கொள்ள நேர்ந்ததிவர்க்கு. இப்படி ப்ரசண்ட பண்டிதோத்தமரான இப்பேராசிரியர் பணித்த திவ்யக்ரந்தங்களுள் ஸ்தோத்ரரத்நம் என்பது ஜகத்ப்ரஸித்தமானது. ஆளவந்தார் ஸ்தோத்ரமென வழங்கப்படுவது இதுவே. இதில் ஆழ்வாரைக் கொண்டாடியிருக்கும் ச்லோகம் ஒன்று, ஆழ்வார்கள் வெளியிட்டருளின அர்த்தவிசேஷங்களைக் கையாண்டமை காட்டும் ச்லோகங்கள் பல. இவற்றைப்பற்றி இங்குச் சுருக்கமாக வெழுதுகிறோம்.

172. *மாதா பிதா யுவதய:* என்னும் சுலோகமானது நம்மாழ்வார் விஷயமாக அமைந்திருக்கும் விதம் மிக அற்புதம். ஆழ்வாருடைய திருநாமத்தை நேராகக் குறிப்பிடாமல் "ஆத்யஸ்ய ந: குலபதே:" என்கிற சொற்றொடரை அமைத்துள்ளார். நம்மாழ்வாரைத் தம்முடைய குலக்கொழுந்தாகத் தெரிவிக்கிறார். லக்ஷ்மீநாதஸமாரம்பாம்......வந்தே குருபரம்பராம்* என்ற கூரத்தாழ்வானது ஸ்ரீஸூக்தியின்படி லக்ஷ்மீபதியான எம்பெருமான் நமது குருபரம்பரையின் தலையிலே வீற்றிருப்பதனால் ஆளவந்தார் அத்திருமாலையே 'ஆத்யஸ்ய ந: குலபதே:' என்கிற சொற்றொடரால் குறிக்கின்றாரென்று கொள்ளலாகாதோ வென்னில்; அப்படி கொள்வதற்கிடமில்லை. அடுத்தபடியாக வகுளாபிராமம் என்கிற சொல்லையிட்டுத் தெளிவு பெறுவித்துள்ளாரன்றோ; திருமாலின் திருவடி திருத்துழாய்கமழநின்றதேயன்றி மகிழமலர் கமழநின்றதன்றே. *நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்* என்று திருவாய்மொழியில் ஆழ்வார்தாமே அருளிச் செய்தபடி மகிழமாலை நம்மாழ்வார்க்கேயன்றோ நிரூபகம். *வகுளாபரணம் வந்தே ஜகதாபரணம் முநிம்* என்று பின்புள்ளாரும் போற்றுகின்றனர். ஆகவே, *வகுளாபிராமம் ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்* என்றதற்குச் சேர ஆத்யகுலபதியென்றது நம்மாழ்வாரையே யென்பது திடமாயிற்று. திருமாலையே ஆத்யகுலபதி யென்றதாகக் கொண்டாலும் குறையில்லை; நம்மாழ்வார் அத்திருமாலின் திருவடியாகவே எங்கும் என்ஞான்றும் ப்ரஸித்தராதலால் வகுளாபிராமம் அங்க்ரியுகளம் என்ற சொற்போக்கினால் நம்மாழ்வாரை வெளியிட்டதாகக் கொள்வதும் சிறக்கும். ஆயினும் பெரியவாச்சான் பிள்ளையும் தேசிகனும் பணித்துள்ள வியாக்கியானங்களுக்குப் பொருத்தமாக முந்தின பொருளே கொள்ளத்தகும்.

173. இவ்விடத்தில் ஓர் ஆராய்ச்சி; இந்த ஸ்தோத்ரரத்னத்தில் முதல் மூன்று சுலோகங்கள் ஸ்ரீமந்நாதமுனிகள் விஷயமானவை; நான்காவது

ச்லோகம் ஸ்ரீவிஷ்ணுபுராணகர்த்தாவான பராசரமஹர்ஷி விஷயமானது; ஐந்தாவது ச்லோகமே *மாதாபிதாயுவதய: என்கிறவிது. இவ்விதமாக ஏன் அமைக்கவேணும்? ஸ்ரீமந்நாதமுனிகளுக்கும் நம்மாழ்வார்க்கும் சிஷ்யாசார்ய க்ரமம் ப்ரஸித்தமாக இருக்கும்போது நாதமுனிகளுக்கு அடுத்தபடியாகவே நம்மாழ்வார்துதியை அமைத்திருக்கவேண்டுமே; இடையில் பராசர முனிவரைப் புகவிட்டு அவர்க்குப் பிறகு நம்மாழ்வார்துதியை அமைத்தது ஏன்? என்று விமர்சிக்கவேண்டியது அவசியமாகும். பராசர முனிவருடைய புராணத்திற் காட்டிலும் ஆழ்வாருடைய திருவாய்மொழி முதலான திவ்யப் பிரபந்தங்கள் பல காரணங்களினால் பரமவிலக்ஷணங்களாகையாலே இந்த வைலக்ஷண்யம் தோற்றுவதற்காகவே பராசரமுனிவர்க்குப் பிறகு ஆழ்வாருடைய துதி அமைந்ததென்று ஸ்தோத்ரபாஷ்யத்தில் தேசிகன் காட்டியருளுகிறார்—* पराशरप्रबन्धादपीत्यादिना ॥

174. அன்றியும் பெரியார்கள் பணிப்பதாவது;—நம்மாழ்வாரை எம்பெருமானுடைய அவயவைகதேசமாகவே திருவுள்ளம் பற்றியிருப்பதனால் எம்பெருமானுடைய துதியோடு கூடவே ஆழ்வாருடைய துதியும் தொடர்ச்சியுற்றிருக்கவேணுமென்கிற எண்ணங்கொண்டே பராசரமுனிவரை முன்னே தள்ளிவிட்டுப் பிறகு பகவத் பாதாரவிந்தமான ஆழ்வாரைத் துதிக்கவிழிந்தார் என்பதே. *மாதாபிதாச்லோகத்திற்கு அடுத்தச்லோகத்தை உற்று நோக்கினால் இந்த நிர்வாஹத்தின் சுவை இனிதுவிளங்கும். ஆக ஆளவந்தார் ஆழ்வாரைக்கொண்டாடின விஷயம் விவரிக்கப்பட்டது. இனி, ஆழ்வார்களருட்டிய பொருள்களை ஆளவந்தார் கையாண்ட விதம் விவரிக்கப்படுகிறது.

175. (ச்லோ. 12.) *க: ஸ்ரீ:ச்ரிய:*="திருவுக்குந்திருவாகிய செல்வா" என்கிற திருமங்கையாழ்வாரருளிச்செயலை யுட்கொண்டு [ச்ரிய: ஸ்ரீ:] என்றார். மேல் 45 ஆம் ச்லோகத்தில் "ச்ரிய: ச்ரியம்" என்றதுங் காண்க.

176. (ச்லோ. 26.) *நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே*. இந்த சுலோகம் முழுவதும் *தருதுயரந்தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை, விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்டம்மானே, அரிசினத்தாலீன்ற தாய் அகற்றிடினும், மற்றவள் தனருள் நினைந்தேயழுங் குழவியதுவே போன்றிருந்தேனே* என்கிற பெருமாள் திருமொழிப் (5—1.) பாசுரத்தின் கருத்தையே கொண்டது. அந்தப் பாசுரத்தின் மொழிபெயர்ப்பே இந்த ச்லோகம்.

177. (ச்லோ. 38 ஸ்வவைச்வ.) இதில் "குணேந ரூபேண விலாஸசேஷ்டிதைஸ் ஸதா தவைவோசிதயா தவ ச்ரியா" என்கிற உத்தரார்த்தமானது 'உனக்கேற்குங் கோல மலர்ப்பாவைக்கன்பா" (10—10—6.) என்கிற திருவாய்மொழிப்பாசுரத்தைச் செவ்வனே விவரிப்பது.

178. (ச்லோ. 40 நிவாஸசய்யாஸந.) இது *சென்றால் குடையாமிருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள், என்றும் புணையாமணி விளக்காம் பூப்பட்டாம் புல்குமணையாம் திருமாற்காவு* என்கிற பொய்கையார் பாசுரத்திற்கு ப்ரதிச்சந்தமாயமைந்தது.

179. (ச்லோ 47. நிகசுசிமவிநீதம்.) திருவாய்மொழியில் (1 5)* வளவேழுலகு பதிகத்தின் ப்ரமேயமே இந்தச்லோகமாக வடிவெடுத்தது.

180. (ச்லோ. 52. 53. வபுராதிஷு, மமநாத.) இவ்விரண்டு ச்லோகங்களும் “எனதாவிதந் தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே..... எனதாவியார் யானார் தந்த நீ கொண்டாக்கினையே” என்ற (2-3 4) திருவாய்மொழிப் பாசுரத்தின் ப்ரதிச்சந்தமே.

181. (ச்லோ. 56 *ஸக்ருத்த்வதாகார) அருளிச்செயல்களில் பலசந்தைகளை யுட்கொண்டருளிச் செய்த ச்லோகமிது. *ஒருநாள் காணவாராயே* நம்மை யொருகால் காட்டி நடந்தால் நாங்களுய்யோமே* எம்மாவீட்டுத்திறமும் செப்பம்* என்பன முதலான பல பாசுரங்களைக் கொண்டே யருளிச்செய்தது. இதில் மஹாத்மபி: என்றது ஆழ்வார்களையே.

182. (ச்லோ 57. *ந தேஹம் ந ப்ராணந்.) இந்தச்லோகமும் திருவாய்மொழியில் *எருளுமிறையோன் (4.8.) பதிகமும் பர்யாயமே. அந்த பத்துப் பாசுரங்களை ஒரு ச்லோகமாக ஆக்கியிருக்கிறாரென்பது ஸுஸ்பஷ்டம். இவ்வதிகாரத்தை விரிவுக்கு அஞ்சி ஸங்க்ரஹமாக நிகமித்துக்கொண்டோம்.*

---

## 27. ஆழ்வானும் ஆழ்வாரும்

183. கூரத்தாழ்வானுடைய திவ்ய ஸூக்தியான பஞ்சஸ்தவத்திலும் ஆழ்வாரைப்பற்றின ஸ்துதிகளும் ஆழ்வாரருளிச் செயல்களை யுபஜீவித்த அர்த்த விசேஷங்களும் மலிந்திருக்கிறபடியை ஸம்க்ஷேபமாக விஜ்ஞாபிக்கிறேன். ஆழ்வானுடைய பஞ்சஸ்தவத்தில் முதல் ச்லோக மொன்றினால் எம்பெருமானாரையுபச்லோகித்து அடுத்த இரண்டு ச்லோகங்களினால் நம்மாழ்வாரை வெகு அற்புதமாக ஸ்துதிக்கிறார். முதலில் ஸ்துதிக்கப்பட்ட எம்பெருமானார் *மாறனடி பணிந்துய்ந்த விராமாநுச னாகையாலே அந்த நம்மாழ்வாரை உபச்லோகித்தா லல்லது அவ்விராமாநுசனுடைய திருவுள்ளம் உகவா தாகையாலும், ஆளவந்தார் தாமும் *மாதா பிதா யுவதய:* இத்யாதியால் ஆழ்வார் திருவடியை வணங்கியே எம்பெருமானைத் துதிக்க இழிந்தாராகையாலும் ஆழ்வாரை வணங்காமல் எம்பெருமானை யடிபணிந்தால் அங்கே முகம் பெறுவது அருமைப்படு மாகையாலும் இரண்டு ச்லோகங்களால் ஆழ்வாரைத் தொழு திறைஞ்சுகிறார். அவற்றுள் முதல் ச்லோகம் :—

> த்ரைவித்ய வ்ருத்த ஜநமூர்த்த விபூஷணம் யத் ஸம்பச்ச ஸாத்விகஜநஸ்ய யதேவ நித்யம்,
> யத்வா சரண்யமசரண்ய ஜநஸ்ய புண்யம் தத் ஸம்ச்ரயேம வகுளாபரணங்க்ரி யுக்மம்.

184. (இந்த ச்லோகத்தின் கருத்து.) நம்மாழ்வாருடைய பரமபாவநமான திருவடியிணையை ஆச்ரயிக்கக்கடவோம்; அதுவே பல வைதிகர்களின் சிரஸ்ஸுக்கு அலங்காரமா யிருக்குமது; அதுவே ஸர்வகாலமும் ஸாத்விகர்களுக்கு ஸகலைச்வர்யமுமாக இருப்பது. அதுவே புகலொன்றில்லாதவர்களுக்குப் புகலிடமாயு மிருக்குமது.

185. இனி இதற்கடுத்த ச்லோகம் வருமாறு :—

பக்திப்ரபாவ பவதத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸாரரஸௌகபூர்ண:,
வேதார்த்தரத்ந நிதிரச்யுததிவ்யதாம ஜீயாத் பராங்குசபயோதி ரஸீமபூமா.

இந்த ச்லோகத்தாலே ஆழ்வாருக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறார். ஆழ்வாரை ஒரு கடலாக ரூபணம் பண்ணிப் பேசுகிறார் ரிதில். பயோநிதியாக ரூபணம் பண்ணுகைக்குப் பொருத்தமுண்மையை நான்கு விசேஷணங்களினால் நிரூபிக்கிறார். பயோநிதிக்கு இருக்கக் கடவ தன்மைகளெல்லாம் ஆழ்வார் பக்கலில் குறையற் றிருக்கிறபடியை ஒவ்வொரு விசேஷணமும் மூதலிக்கின்றது. [பக்திப்ரபாவபவதத்புத-பாவபந்த ஸ்ந்துக்ஷித ப்ரணய ஸார ரஸௌகபூர்ண:] கடலானது ரஸௌகசப்தவாச்யமான ஜலப்ரவாஹத்தாலே பரிபூர்ணமா யிருக்கும். ஆழ்வாரோ வென்னில், ச்ருங்கார வீர கருணாத்புதஹாஸ்ய பயாநக ரௌத்ர பீபத்ஸ பக்திரஸங்களாலே பரிபூர்ணராயிரா நின்றார். இப்படிப் பட்ட ரஸவிசேஷங்கள் ஆழ்வார் பக்கலிலே விளைந்தமைக்கு நிதாநமேதென்னில், விலக்ஷணமான பக்தி விசேஷத்தாலே ஆச்சரியமான பாவபந்தங்களுண்டாகி அந்த பாவபந்தங்கள் பலதலைத்து நாநாரஸ பரிபாகங்களாயின வென்கிறார். இது இரவும் பகலும் திருவாய்மொழியை யநுபவித்து ஸாதித்தது.

186. [பக்திப்ரபாவ] ஆழ்வாருடையபக்திக்குஒப்புச்சொல்லலாவதில்லை; *காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி யென்று முதலில் கடல்போலேயாய், பிறகு *கொண்டவென் காதலுரைக்கில் தோழீ! மண்டிணி ஞாலமுமேழ்கடலும் நீள்விசும்புங் கழியப் பெரிதால்* என்றாய், அநந்தரம்* சூழ்ந்ததனிற் பெரிய வென்னவா* என்று தத்வத்ரயத்தையும் விளாக்குலை கொள்ளவல்லதாய் ஆக விப்படி மேன்மேலும் பெருகிச் செல்லுமதான பக்தியின் ப்ரபாவத்தினாலே. [பவத் அத்புத பாவபந்த] உண்டான அற்புதமான பாவபந்தங்களினாலே. அதாவது—அந்த பக்திதானே ச்ருங்கார வ்ருத்த்யா பரிணமித்து தலைமகள் பாசுரமாகவும் தாய்பாசுரமாகவும் தோழிபாசுரமாகவும் பேசும்படிக்கீடான பல வகைப்பட்ட ஆச்சர்ய பாவபந்தங்களை யுண்டாக்கி நிற்கு மென்கை. [ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌகபூர்ண:] அப்படிப்பட்ட பாவபந்தங்கள் ப்ரணய ரஸத்தை வளரச்செய்யுமாயிற்று.

187. *உயர்வற வுயர் நலம்* வீடுமின் முற்றவும் *பத்துடை யடியவர்க்கெளியவன் ,பிறவித்துயரற* பொருமாநீள்படை* என்னுமிவைபோல்வனவான திருவாய் மொழிகளில் ஸாதாரண பக்திரஸம் விளங்கு மத்தனையல்லது ப்ரணயரஸம் விளங்கமாட்டாதிறே. *அஞ்சிறையமட நாராய் *மின்னிடை மடவார்கள் *வேய்மரு தோளிணை* முதலான திருவாய் மொழிகளிலேயாயிற்று அத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸாரம் விளங்குவது. அப்படிப்பட்ட ப்ரணயம் மீதூர்ந்து வெளிவரும் ஸ்ரீஸூக்திகளில் நவரஸமும் பொலியுமிறே. நவரஸங்களுள், ச்ருங்காரம் வீரம் கருணம் அத்புதம் பயாநகம் சாந்தி (-பக்தி) ஆகிற இந்த ரஸங்கள் ஓரோதிருவாய்மொழிகளில் ப்ரதானமாகப் பொதிந்திருக்கும்; மற்ற ஹாஸ்ய பீபத்ஸ ரௌத்ரரஸங்கள் ஓரோவிடங்களிலே மறைய நின்று சிறிது சிறிது தலைகாட்டி நிற்கும். *வீடுமின்

முற்றவும்* சார்வேதவநெறிக்கு *கண்ணன் கழலிணை* முதலான திருவாய் மொழிகளிலே பக்திரஸம் தலையெடுத்திருக்கும். *மின்னிடை மடவார்கள்* *நங்கள் வரிவளை* வேய் மரு தோளிணை* முதலான திருவாய் மொழிகளிலே ச்ருங்கார ரஸம் தலையெடுத்திருக்கும். *மாயாவாமனனே* புகழு நல்லொருவன் * நல்குரவுஞ் செல்வும் * முதலான திருவாய் மொழிகளிலே அத்புத ரஸம். *உண்ணிலாவிய வைவரால்* இத்யாதிகளிலே பயாநக ரஸம். *ஊரெல்லாந்துஞ்சி* வாயுந்திரையுகளும்* ஆடியாடி யகங்கரைந்து *இத்யாதிகளிலே கருணாரஸம். *குரவையாய்ச்சியரோடு கோத்ததும் *வீற்றிருந்தேழுலகுங்* இத்யாதிகளிலே வீரரஸம். ஆக இங்ஙனே நாநாரஸங்கள் பொதிந்த ஸ்ரீஸூக்திராசிகளை யருளிச்செய்யும் முகத்தாலே ரஸௌக பரிபூர்ணராயிருப்பராய்த்து ஆழ்வார்.

188. [வேதார்த்த ரத்ந நிதி:] கடல் ரத்நாகரமாகையாலே ரத்நநிதியாயிருக்கும். பராங்குச பயோநிதியும் அப்படியேயிருக்கிறபடி பாரீர். *ஓதம்போல் கிளர் வேத மென்றும் *ச்ருதி ஸாகர மென்றும் சொல்லுகிறபடியே கடல் போன்றுள்ள வேதசாஸ்த்ரங்களிலே அல்பஸாரமாயும் ஸாரமாயும் ஸாரதரமாயுமிருக்கின்ற அர்த்தங்கள் போக, ஸாரதமங்களாகவுள்ள அர்த்தங்களே ரத்நமாகும். *த்ரைகுண்ய விஷயா வேதா:* என்கிறபடியே எல்லாம் கலந்த கட்டியாயிருக்கும் வேதங்கள். ஸத்வரஜஸ்தமோ குணங்களாகிற மூன்று குணங்களிலும் ஊன்றினவர்களுக்கு அபேக்ஷிதங்களான விஷயங்களை யெல்லாம் வெளியிடுமவையிறே வேதங்கள் ; *மாற்றங்களாய்ந்து கொண்டு மதுசூதபிரானடிமேல் குருகூர்ச் சடகோபன் சொன்ன சொற்களிலே ஸாரதமமான பொருள் தவிர வேறொன்றும் அவகாசம் பெறுமையாலே எல்லாம் ரத்நங்களாயிருக்கும். அப்படிப்பட்ட ரத்நங்களுக்கு நிதியாயிருப்பராய்த்து ஆழ்வார்.

189. [அச்யுத திவ்யதாம]* மாலுங் கருங்கடலே! என்னோற்றாய்? வையக முண்டு ஆலினிலைத் துயின்ற வாழியான்—கோலக் கருமேனிச் செங்கண்மால் கண் படையுள், என்றுந் திருமேனி நீ தீண்டப் பெற்று* (முதல் திருவந்தாதி) என்கிறபடியே எம்பெருமானுக்கு திவ்யாலயமாயிருக்கும் கடல். ஆழ்வாரும் அப்படியேயா யிருப்பர். *கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம்!, வெல்ல நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத்தகம்* *கொண்டல் வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன் குனிசார்ங்கன் ஒண்சங்கதை வாளாழியானொருவன் அடியேனுள்ளானே* என்கிறபடியே ஆழ்வார் எம்பெருமானுக்கு நித்யநிகேதநமாயிருப்பரிறே. *இவையுமவையு முவையுமென்கிற திருவாய்மொழியிலே இது தன்னை விசதமாகக் காணலாம்.

190. [அஸீமபூமா] பூமா என்றது ப்ருஹத்த்வ மென்றபடி. " ப்ருஹத்த்வஞ்ச ஸ்வரூபேண குணைச்ச" என்று ஸ்ரீ பாஷ்யத்தி லருளிச்செய்தபடியே ஆகாரத்தாலும் குணத்தாலும் த்விவிதமா யிருக்குமிறே ப்ருஹத்த்வம் ; பெரிய மலை, பெரிய குளம், பெரிய மாளிகை என்றால் அங்கே விவக்ஷிதமான பெருமை ஆகாரத்தினாலாகும். பெரியமனிசர் என்று சில மஹா புருஷர்களைச் சொல்லுவோ

மாகில் குணங்களினுலாகிய பெருமையே அங்கு விவக்ஷிதமாகும். ஆக இப்படி இருவகைப்பட்ட பெருமையில் ஆகாரப்ரயுக்தமான பெருமை கடலுக்கு ஆனுப்போலே குணப்ரயுக்தமான பெருமை ஆழ்வார்க்காயிற்று. *அருள் கொண்டாயிரமின் தமிழ் பாடினு னருள்கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே* எனனும்படியாய் எல்லைகாணவொண்ணுத க்ருபாகுண மொன்றின் பெருமை போதுமே. ஆக இப்படியன்ருே ஆழ்வார் பெருமையை ஆழ்வான் வெளியிட்டது. கூரத்தாழ்வானுடைய திவ்ய ஸூக்திகளில் நம்மாழ்வார் விஷயமான இவ்விரண்டு ச்லோகரத்னங்களே போதும். ஆழ்வாருளிச்செய்த அர்த்த விசேஷங்களை ஆங்காங்கு பொதிய வைத்தும் ஆழ்வாரிடத்திலே ப்ராவண்யாதிசயத்தைக் காட்டியும் அருளிச்செய்த ச்லோகங்கள் பலபல. க்ரந்த விஸ்தரபயத்தாலே சில விடங்களை மாத்திரம் இங்கெடுத்துக் காட்டி நிற்கிறேன்.

191. (ஸ்ரீவைகுண்டஸ்தவத்திலேயே) ச்லோ. 7. [ஆம்நாயமூர்த்தநிச மூர்த்தநி சோர்த்வபும்ஸாம்.] இதில், *திருமாலிருஞ் சோலைமலையே திருப்பாற்கடலே என் தலையே* என்றும், *என்னுச்சியுளானே* என்றும் அருளிச்செய்துள்ள திருவாய்மொழிப் பாசுரங்களை யடியொற்றி "ஊர்த்வபும்ஸாம் மூர்த்தநி சகாஸ்தி" என்றருளிச் செய்தார். ஆகவே நம்மாழ்வாரை ஊர்த்வபுருஷரென்ருராயிற்று. வரதராஜஸ்தவத்தில் *யச்ச மூர்த்தா சடாரே:* என்று ஸூவ்யக்தமாகவேயருளிச் செய்திருப்பது இங்குச் சேரவநுஸந்தேயம்.

192. (ச்லோ. 10.) [ப்ரேமார்த்ர விஹ்வலகிர: புருஷா: புராணுஸ் த்வாம் துஷ்டுவுர் மதுரிபோ மதுரைர் வசோபி:] *கேட்டு ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே* என்றும் *தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்றும் *குழலின்மலியச் சொன்னவோராயிரமென்றும் தாங்களே சொல்லும்படியான மாதுர்யம் மலிந்த திவ்யஸூக்திகளாலே எம்பெருமானே! முன்னோர்கள் உன்னைத் துதித்தார்கள். அப்படி துதித்தவர்கள் யாரென்னில்; [ப்ரேமார்த்ர விஹ்வலகிர: புருஷா: புராணு:] *உள்ளெலாமுருகிக் குரல் தழுத் தொழிந்தேனுடம்பெலாம் கண்ண நீர் சோர* என்றும் *வேவாராவேட்கை நோய் மெல்லாவியுள்ளுலர்த்த* என்றும் *ஆராவமுதே அடியேனுடலம் நின்பாலன்பாயே நீராயலைந்து கரைய வுருக்குகின்ற* என்றும் ஹார்தமான ப்ரேமத்தாலே நெஞ்சுகனிந்து குரல் தழதழத்துப் பேசுகின்ற ஆழ்வார்கள்.

193. இனி அடுத்த அதிமாநுஷஸ்தவத்திற்குச் செல்வோம். இதில் மூன்ருவது ச்லோகம் ஆழ்வானுக்கு நம்மாழ்வாரிடத்திலுள்ள பக்தியே வடிவெடுத்தபடி யென்னவேணும். [ஸ்ரீமத்பராங்குசமுநீந்த்ரமநோநிவாஸாத் தஜ்ஜாநுராகரஸமஜ்ஜநமஞ்ஜஸாப்ய, அத்யாப்யநாரத ததுத்திதராகயோகம் ஸ்ரீரங்கராஜசரணும்புஜமுந்நயாம:] என்னுமந்த ச்லோகம் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளை வருணிப்பது. பாதங்களின் சிவப்பை வருணிக்கும் லௌகிக கவிகள் "ரக்தௌ தவாங்க்ரீ ம்ருதுலௌ புவி விக்ஷேபணுத் த்ருவம்" என்கிருர்கள். ஆழ்வானருளிச் செய்வது அப்படியா இருக்கும்?

ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகள் வெகுகாலம் நம்மாழ்வாருடைய திருவுள்ளத்திலுறைந்து அவ்விடத்திலுள்ள அநுராகரஸத்திலே ஊறிக்கிடந்தபடியாலே அந்த ராகயோகம் இன்னமும் மாறாமலிருப்பதாக அருளிச் செய்தவிது விலக்ஷணப்ரக்ரியை. நம்மாழ்வார்க்கு ஸ்ரீரங்கநாதன் திருவடிகளிலே எவ்வளவு பக்தியோ அதிற்காட்டிலும் பதின்மடங்கு பெருத்தது ஆழ்வானுக்கு நம்மாழ்வாரிடத்திலுண்டான பக்தியென்று இந்தவொரு ச்லோகத்தினல் எளிதாக அறுதியிடலாமன்றோ. இவ்வதிமாநுஷஸ்தவத்தில் உத்தரபாகம் ஸ்ரீக்ருஷ்ணகுணாநுபவம். அது முழுவதும் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளிலிருந்தே அற்புதமாக அமைந்ததென்பதை அடியேனுடைய வியாக்கியானங் கொண்டு உணரலாம்.

194. இனி ஸுந்தரபாஹுஸ்தவத்தை யெடுத்துக் கொண்டாலோ அதுவும் அருளிச்செயல் மயமே. ஸ்வல்பமாகவே இங்கு விஜ்ஞாபிக்கிறேன். ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் (9.1.) *மந்தரம் நாட்டியன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான்* என்றருளிச் செய்ததை இந்த ஸ்தவத்தில் (ச்லோ. 4.) *உததிகமந்தராத்ரிமதிமந்தநலப்தபயோமதுரரஸேந்திராஹ்ருஸுதஸுந்தரதோ:பரிகம்* என்று மொழிபெயர்த்தருளினர். திருவாய்மொழியில் *மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை* என்றதை (5) *சசதாரிங்கணுட்பசிகம்* என்றார். *அதிர்குரல்சங்கத்தழகர்தங்கோயில்* என்ற திருவாய்மொழிப்பாசுரத்தை (5) "பிதுர்தஸப்தலோக ஸுவிச்ருங்கல சங்கரவம்" என்று மொழிபெயர்த்தார். பெரியாழ்வார் திருமொழியில் *கருவாரணம் தன்பிடி துறந்தோடக், கடல்வண்ணன் திருவாணைகூறத் திரியும் தண்மாலிருஞ் சோலையே* என்ற பாசுரத்தை (8) "ஸுந்தரதோர்திவ்யாஜ்ஞா" என்ற ச்லோகத்தினல் மொழிபெயர்த்தருளினர். (ச்லோ. 12.) *வகுளதரஸரஸ்வதீவிஷக்த......* என்கிற ச்லோகத்தில் அருளிச்செய்யுமது அற்புதம்; கிந்நரஸ்த்ரீகள் அழகரை ஸேவிக்கத் திருமாலிருஞ் சோலைமலைத் தாழ்வரைகளிலே வந்து சேர்ந்து, நம்மாழ்வாருடைய திருவாய்மொழிப் பாசுரங்களை ஸுஸ்வரமாகவும் ரஸவத்தரமாகவும் ஸாபிப்ராயமாகவும் பாடுகிறார்களாம்; *மரங்களுமிரங்கும் வகை மணிவண்ணவோ வென்று கூவுமால்* என்னும்படியான அருளிச்செயல்களை அப்படி பாடும்போது கல்லும் உருகாநின்றது; உருகின அதுதானே சிலம்பாறென்று பேரெடுத்துப் பெருகாநின்ற தென்கிறார். அழகருக்கு *ஏறுதிருவுடையான்* என்று ஆண்டாள் சாத்தின திருநாமத்தை (16, 17.) *ப்ராரூடச்ரியம்* என்றும் *ஆரூடஸ்ரீ:* என்றும் மொழிபெயர்த்தருளினர்.

195. திருவாய்மொழியில் *ஏழையராவிப்பதிகத்தில் பகவத்கேசபாசவர்ணநம் "கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின் உட்கொண்ட நீலநன் னூல்தழைகொல்! அன்று மாயன்குழல்* என்றுள்ளது; அதை அப்படியே மொழிபெயர்க்கிறார் (40) "அந்தம் தமஸ் திமிரநிர்மிதமேவ யத் ஸ்யாத் தத்ஸாரஸாதிதஸுதந்து-அதிவ்ருத்தவார்த்தம்—ஈசஸ்ய அலகாளிஜாலம்" என்று. ஆண்டாள் *களிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ்

பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிர நின்று விளையாட* என்றும், திரு மங்கையாழ்வார் *மைவண்ண நறுங்குஞ்சி குழல்பின்தாழ மகரஞ்சேர்குழை யிருபாடிலங்கியாட* என்றும் தனித்தனியே யநுபவித்த அழகுகளைச் சேரப் பிடித்து (49.) "ஸதம்ஸஸம்ஸஞ்ஜித குந்தலாந்திகாவதீர்ண கர்ணாபரணாட்ய கந்தர:" என்ற ஸ்ரீஸூக்தியினால் அநுபவிக்கிறார். நாச்சியார் திருமொழியில் (7-7.) *செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல், செங்கட்கரு மேனி வாசுதேவனுடைய, அங்கைத்தலமேறி யன்னவசஞ் செய்யும் சங் கரையா!* என்ற பாசுரத்தை (55.) "ஸ்ரீமத்வநாத்ரிபதிபாணிதலாப்ஜ" என்ற ச்லோகத்தினால் மொழிபெயர்த்தருளினர். திருவாய்மொழியில் (4-5-8) *தண்டாமரை சுமக்கும் பாதப்பெருமானை* என்ற பாசுரத்தில் "சுமக்கும்" என்றதன் ஸ்வாரஸ்யத்தை (62, 63.) இரண்டு சுலோகங்களினால் வியாக்கி யானித்தருளுகிறார். இதை அடியேனுடைய வியாக்கியானத்தில் விரியக் கண்டு கொள்வது.

196. (ச்லோ. 92) "ப்ரலயஜநீரபூரபரிபூரிதஸ்வ......" இத்யாதி மஹத் தர ச்லோகமானது திருமங்கையாழ்வாருடைய "நிலையிட மெங்குமின்றி" என்கிற மத்ஸ்யாவதாரப் பாசுரத்திற்கு மொழிபெயர்ப்பாக மாத்திரமேயல்லா மல் வ்ருத்தபங்கியும் ஒன்றேயாக அமைந்தது. ச்லோகம் பாதந்தோறும் இருபத்துமூன்றெழுத்து கொண்டது. கலியன் பாசுரமும் அடிதோறும் ஒற்றொழித்து இருபத்துமூன்றெழுத்துக் கொண்டது. இப்படியாக ஸுந்தர பாஹுஸ்தவத்திலுள்ள அதிசயங்கள் அபரிமிதம்.

197. இனி வரதராஜஸ்தவத்தில் ஒன்றே காட்டி நிற்கிறேன். (ச்லோ. 59.) *பக்தாநாம் யத் வபுஷி தஹரம்* என்பதில் *ஆம்நாயாநாம் யதபி ச சிரோ யச்ச மூர்த்தா சடாரே: ஹஸ்த்யத்ரேர் வா கிமதிஸுகதம் தேஷு பாதாப்ஜ யோஸ் தே* என்கிற உத்தரார்த்தம் பரமமதுரமானது. பேரருளாளனே! உபநிஷத்துக்கள், நம்மாழ்வாருடைய திருமுடி, ஸ்ரீஹஸ்திகிரிசிகரம் என்னு மிவற்றுள் உன் திருவடிக்குப் பாங்கான விடம் எது? என்று கேள்வி கேட் கிறாரிதில். இங்கு நம்மாழ்வாருடைய திருமுடியையும் சேர்த்துக் கேள்வி கேட்கிற ஆழ்வானுடைய திருவுள்ளத்தை ஆரேயறிய வல்லார்? ... (27)

## 28. பட்டரும் ஆழ்வார்களும்

198. நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் பட்டர் மற்றையாசார்யர்களைப் போலல் லர்; இவருடைய திருநாவீறு ஸர்வாதிசாயியானது. நாலாயிர திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் பல நூற்றுக்கணக்கான விடங்களில் பட்டருடைய நிர்வாஹம் விசேஷித்துக் காணப்படுகிறது. அருளிச்செயலமுதக்கடலில் எம்பெருமானாருடைய ஆழங்காலும் பட்டருடைய ஆழங்காலும் அநந்வ யாலங்கார லக்ஷ்யமாகவே யிருக்கும். பட்டாருளிச்செய்த பகவத்குண தர்ப் பணமென்கிற ஸஹஸ்ரநாமபாஷ்யம் ஒப்புயர்வற்ற பெருமை பெற்றிருப் பதற்குக் காரணம் ஆழ்வார்ஸ்ரீஸூக்திகளையே பின்பற்றியருளிச்செய்ததுதான்.

அந்தபாஷ்யத்திலிருந்து திவ்யப்ரபந்தார்த்தரஸங்களை யெடுத்தெழுதுவதானுல் ஒரு மஹாபாரதமாகும். தனியாக அப்படியொரு க்ரந்தமெழுதியுமிருக்கிறேன். இங்கு ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலிருந்து மாத்திரம் ஸ்வல்பமாகச் சில ஸ்ரீஸூக்தி விசேஷங்களைக் காட்டி இந்நூலை உபஸம்ஹரிக்கிறேன்.

199. இவருடைய திருத்தகப்பனுரான ஆழ்வான் தம்முடைய ஸ்தவத்தின் உபக்ரமத்தில் நம்மாழ்வார் விஷயமாக இரண்டு ச்லோகங்கள் பெரிதாக அருளிச்செய்தார்; இவர் தம்முடைய ஸ்தவத்தின் தொடக்கத்தில் அவ்வாழ்வார் விஷயமாகச் சிறியதொரு ச்லோகமே அருளிச்செய்கிருர்; சுலோகம் சிறிதாயினும் அர்த்தம் மிகப்பெரிது.

*ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமிவோதிதம்,
ஸஹஸ்ரசாகாம் யோத்ராக்ஷீத் த்ராமிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம்.* (6)

(இதன் கருத்து.) எம்பெருமான் விஷயமான ஆசைப்பெருக்கே ஆழ்வாராக வடிவெடுத்துவந்ததோ! என்னும்படி பகவத் விஷயத்தில் அளவிறந்த காதல் கொண்டவரும், த்ரமிடோபநிஷத்தென்னப்பட்ட திருவாய்மொழியை இந்தவுலகிலிருள் நீங்க வெளியிட்டருளினவருமான நம்மாழ்வாரென்னும் மஹர்ஷியைப் பணிவோமென்பதாம். இதில் (ருஷிம்) (அத்ராக்ஷீத்) (த்ராமிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம்) என்ற ஸூக்திகள் விசேஷித்து ஊன்றி நோக்கத்தக்கவை.

200. (ச்லோ. 13.) *அமதம் மதம் மதமதாமதம் ஸ்துதம் பரிநிந்திதம் பவதி நிந்திதம் ஸ்துதம், இதி ரங்கராஜமுதஜூகுஷத் த்ரயீ* என்கிற விதில் பூர்வார்த்தத்தில் "அமதம் மதம்......" என்று ஸாதித்திருப்பது "யஸ்யாமதம் தஸ்ய மதம்" என்கிற உபநிஷத் வாக்யத்தை யுட்கொண்டதென்பது ப்ரஸித்தம். உடனே "ஸ்துதம் பரிநிந்திதம் பவதி நிந்திதம் ஸ்துதம்" என்று ஸாதிக்கிருர். இப்படி வேதத்தில் ஓதியிருப்பதாகக் காட்டுகிருர். இது ஸம்ஸ்க்ருத வேதத்தில் எங்கும் கிடையாது. தமிழ்வேதத்தில் தானுள்ளது. நம்மாழ்வாருளிய பெரிய திருவந்தாதியில் (2) *புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம், இகழ்வோம் மதிப்போம் மதியோமிகழோம்* என்று தமிழிலுள்ளதை ஸம்ஸ்க்ருதமாக்கினுர். ஆக, த்ரயீ என்கிற சொல்லால் உபய வேதங்களையும் நிர்தேசித்தருளினமை புலனுயிற்று. (மேலே 16.) *ஸ்வம் ஸம்ஸ்க்ருதத்ராவிடவேதஸூக்தை:* என்றருளிச் செய்ததும் காண்க.

201. திருமாலையில் தொண்டரடிப்பொடி யாழ்வார் *தெளிவிலாக் கலங்கல் நீர்சூழ் திருவரங்கம்* என்று திருக்காவேரி தெளிவின்றிக்கே கலங்கி யிருக்கும்படியை அருளிச் செய்ததை (ச்லோ. 21.) "துக்தாப்திர் ஜநகோ ஜநந்ய ஹமியம்" என்கிற பெரிய ச்லோகத்தினுல் இன்சுவைப்படுத்தி யருளிச் செய்தார். (36) திருமங்கையாழ்வார் திருப்பணியான ப்ராகாரமண்டப கோபுராதிகளை *ஜிதபாஹ்யஜிநாதிமணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணுந் விததே பரகாலகவி: ப்ரணமேபஹி தாந்* என்கிற ச்லோகத்தினுல் தொழுதிறைஞ்சுகிருர். கோயிலில் ப்ராகாரமண்டப கோபுராதிகளில் திருவாழி திருச்சங்கு திருமண்காப்பு முதலிய வைதிக சின்னங்கள்

பொலிவுற்றிருப்பதனுல் "வைதிகயந்நிவ" என்றருளிச் செய்தார். சந்த்ர புஷ்கரிணியின் கீழ்த் திசையிலே கோயில்கொண்டெழுந்தருளி யிருக்கிற ஆழ்வார்கள் பதின்மரையும் "பூர்வேண தாம்.....பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந்" என்கிற (41) ச்லோகத்திஞல் மங்களாசாஸநம் செய்தருளினர்.

202. (ச்லோ. 49.) சந்த்ரபுஷ்கரிணியின் கரையிலுள்ள திருப்புன்னை மரத்தைத் துதிக்கையில் "புந்நாகதல்லஜம் அஜஸ்ரஸஹஸ்ரகீதிஸேகோத்த திவ்ய நிஜ ஸௌரபமாமநாம:" என்றருளிச் செய்திருப்பதிற் காட்டிலும் ரஸவத்தரமான விஷயம் வேறில்லை. இந்த திருப்புன்னையினடியில் இருந்து கொண்டு திருவாய்மொழியின் மூலத்தை உருச்சொல்லுவாரும் அர்த்தங்களை யாராய்ச்சி செய்வாரும் ஓய்தலொழிவின்றிப் பலருண்டாகையாலே இம்முகத்தால் திருவாய்மொழியின் திவ்ய பரிமளமும் இதிலே கமழ்கின்றதென்கிருர்; இதனுல் நம் முன்ஞேர்களின் போதுபோக்கு தெரிவிக்கப்படுவதுடன் திவ்ய ப்ரந்தப்ரபாவாதிசயமும் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

203. அழகிய மணவாளனுடைய திருக்கண்ணேக்கத்தி லிருக்கும் இரண்டு தூண்களுக்கு குலசேகராழ்வார் திருமணத்தூணென்று திருநாமம் சாத்தி "கடியரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் மாயோனை மணத்தூணேபற்றி நின்று என்வாயாரவென்று கொலோ வாழ்த்துநாளே" என்றருளிச் செய்தார்; இதில் 'மணத்தூண்' என்றதை (59ல்) *ஆமோதஸ்தம்ப மென்று மொழி பெயர்த்தார்; "மணத்தூணருகில் நின்றுகொண்டு" என்னுமல் "மணத்தூணே பற்றிநின்று" என்றருளிச் செய்ததன் மருமத்தைக் கண்டறிந்து "சேஷசயலோசநாம்ருத நதீரயாகுலித லோலமாநாநாம், ஆலம்பமிவாமோதஸ்தம்பத்வய மந்தரங்க மபியாம:" என்றருளிச் செய்கிருர் (பட்டர்.) அழகிய மணவாளனுடைய திருக்கண்ணேக்கமாகிற அமுதவாற்றின் பெருவெள்ளமானது அநுபோக்தாக்களை ஒருமித்து நிலைநின்று அநுபவிக்க வொட்டாமல் தூக்கித்தள்ளி யசைக்குமளவில் அவர்கள் கைப்பிடிப்பாகப்பற்றிகொண்டு நிற்பதற்குப் பாங்காக நாட்டப்பட்ட தூண்களென்னலாம்படி யிருக்கிறதாம் திருமணத்தூண். இதனுல் "மணத்தூணே பற்றிநின்று" என்றருளிச்செய்த ஆழ்வாருடைய உட்கருத்தை உள்ளபடி யுணர்ந்து விவரித்தாராயிற்று.

204. (ச்லோ. 78.) *வடதள தேவகிஜடரவேதசிர: கமலாஸ்தந சடகோப வாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்* என்ற ச்லோகம் அதிவிலக்ஷணமாயமைந்தது. ஸ்ரீரங்கநாதன் தனது மந்திரத்தை திருவாய்மொழிதானே இப்படியொரு வடிவெடுத்து வந்ததாகத் திருவுளம்பற்றி அதில் உகந்து பள்ளிகொண்டிருப்பதாக அருளிச்செய்தவிது மற்றையோருடைய மதிக்கு நிலமன்றே. திருவாய்மொழியில் (3-1-1.) *முடிச் சோதியாய் உனதுமுகச்சோதி மலர்ந்ததுவோ* என்ற ஒரு பாதத்தை *கிரீடசூட ரத்நராஜி: ஆதிராஜ்ய ஜல்பிகா, முகேந்துகாந்திருந்முகம் தரங்கிதேவ ரங்கிண:* (91.) என்று ஒரு ச்லோகமாக்கியருளினர். பெரிய திருவந்தாதியில் (72) *முதலாந் திருவுருவம் மூன்

றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர், முதல்வா! நிகரிலகுகாருருவா! நின்னகத்ததன்றே, புகரிலகு தாமரையின்பூ* என்றருளிச்செய்த பாசுரத்தையே (ச்லோ. 116.) "த்ரயோ தேவாஸ் துல்யா:" என்கிற ச்லோகத்தாலே மொழிபெயர்த்தருளினர்.

205. இப்படியாக பட்டருடைய ஸ்ரீஸூக்திகளிலிருந்து பன்னியுரைக்குங்கால் பாரதமாம். அடியேனுடைய வியாக்கியானங்களை ஆநுபூர்வியாகக் கடாக்ஷித்தருள்பவர்க்கு அவற்றிலிருந்து அநவதிகமாக அநுபவிக்கக் கிடைக்குமாதலால் இங்கு இந்த ஸங்க்ஷேபமே பர்யாப்தமென்று நிற்கின்றேன். (28)

---

## 29. உபஸம்ஹாரம்

206. ஆளவந்தார் எம்பெருமானார் முதலான நம் பூர்வாசார்யர்கள் உபநிஷத்துக்களிலும் சாஸ்த்ரங்களிலும் நல்ல விரகர்களாயிருந்துவைத்து ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களைக் கொண்டே போதுபோக்கி வாழ்ந்து வந்தார்களென்பது அவரவர்களது சரித்திரங்களாலும் அவரவர்கள் தாமியற்றிய நூல்களாலும் அறியக்கிடக்கின்றது. சரித்திரங்களிற்புகாது நூல்களிற் புகுந்து விமர்சித்தோமிவ்வளவும். எம்பெருமானாருடைய ஸ்ரீஸூக்திகளில் மிகவிரிவான ஆராய்ச்சிகளையே செய்தோம். ஆளவந்தார், கூரத்தாழ்வான், பட்டர் ஆகிய மூன்று ஆசாரியர்களை எடுத்துக்கொண்டு இவர்கள் தம் தமது நூல்களில் ஆழ்வார்களைக் கொண்டாடியிருக்கும் விதத்தையும் ஆழ்வார்கள் வெளியிட்டருளின அர்த்தவிசேஷங்களைத் தாங்கள் கையாண்டிருக்கும் விதத்தையும் மிக விரிவாக நிரூபித்து வேறே ஒரு க்ரந்தமியற்றியிருக்கிறோம். அதிலிருந்து ஒரு பகுதியை மாத்திரமே இதில் வெளியிட்டோமிப்போது. முடிவாக எம்பெருமானார் விஷயமான வொருச்லோகரத்நத்தை வியாக்கியானித்து இந்த க்ரந்தத்தை உபஸம்ஹரிக்கிறோம்.

"पुरा सूत्रैर्व्यासः श्रुतिशतशिरोऽर्थं ग्रथितवान् विवव्रे तत् श्राव्यं वकुलधरतामेत्य स पुनः ।
उभावेतौ ग्रन्थौ घटयितुमलं युक्तिभिरसौ पुनर्जज्ञे रामावरज इति स ब्रह्ममुकुरः ॥

[புரா ஸூத்ரைர் வ்யாஸ: ச்ருதிசதசிரோர்த்தம் க்ரதிதவாந்
விவவ்ரே தத் ச்ராவ்யம் வகுளதரதாமேத்ய ஸ புந:,
உபாவேதௌ க்ரந்தௌ கடயிதுமலம் யுக்திபிரஸௌ
புநர் ஜஜ்ஞே ராமாவரஜ இதி ஸ ப்ரஹ்மமுகுர:."]

இந்த ச்லோகத்தை முன்னமே (பக்கம் 21ல்) உதாஹரித்திருக்கிறேன். இதனைச் சிறிது விவரித்து இந்த க்ரந்தத்தை நிகமிக்கிறேன். *ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய:* என்று வேதம் புகழ்ந்த வ்யாஸரும், நம்மாழ்வாரும், பகவத்ராமாநுஜருமாகிய மூன்று மஹநீயர்களே ஆஸ்திகவுலகுக்கு மஹோபகாரகர்களென்னுமிடம் மேலெடுத்த ச்லோகரத்நத்தில் கூறப்படுகிறது. முதலில் வ்யாஸபகவான் ப்ரஹ்மஸூத்ர மென்கிற சாரீரக

மீமாம்ஸையைப் பணித்து அதிலுள்ள நான்கு அத்யாயங்களிலும் வேதாந்த விழுப்பொருள்களைத் தொடுத்து வைத்தார். அந்த வ்யாஸர்தாமே பிறகு மகிழ்மாலை மார்பரான நம்மாழ்வாராகப் புநரவதாரம் செய்து அந்த சாரீரக மீமாம்ஸைதன்னையே செவிக்கினிய செஞ்சொற்களாலே விவரித்தருளினர். (அதாவது) ப்ரஹ்மஸூத்ரம் முரட்டு ஸம்ஸ்க்ருதமா யிருந்ததை செந்திறத்த தமிழோசை யாக்கினது மாத்திரமன்றிக்கே, அதற்கிருந்த முக்கியமான சில குறைகளையும் தீர்த்தார். எங்ஙனேயென்னில்; ப்ரஹ்மஸூத்ரத்தில் எம்பெருமான் காரணபூதனென்பது பரக்க நிரூபிக்கப்பட்டதே யொழிய அவன் பல அவதாரங்களைப்பண்ணி கார்யபூதனுமாகிறு னென்பது ஒரு ஸூத்ரத்திலும் கூறப்படவில்லை. வேதத்தில் * अजायमानो बहुधा विजायते * * पिता पुत्रेण पितृमानू योनियोनौ* இத்யாதி வாக்கியங்கள் எம்பெருமானுடைய அவதாரங்களை ப்ரஸ்தாவித்திருக்கவும் ஸூத்ரகாரர் அதை மீமாம்ஸிக்கப் புகவில்லை. இது அந்த சாஸ்த்ரத்திற்குப் பெரிய குறையே. இன்னமும், எம்பெருமானை ப்ரஹ்மஸூத்ரமானது ஸாமாந்ய சப்தமான ப்ரஹ்மசப்தத்திலேயே சொல்லிக்கொண்டு போந்ததே யொழிய ஒரு ஸூத்ரத்திலும் நாராயண சப்தத்தையிட்டுச் சொல்லிற்றில்லை. இதுவுமொரு குறையே. இன்னமும், எம்பெருமானுடைய அதிசயங்களுள் தலையானது லக்ஷ்மீபதித்வம். இதுவும் ப்ரஹ்மஸூத்ரத்தில் ஓரிடத்திலும் அணுமாத்ரமும் ப்ரஸ்தாவிக்கப் படவில்லை. இங்ஙனே பல குறைகளுண்டு அதற்கு. அக்குறைகளை ஆழ்வார் வெகு அழகாகத் தவிர்த்தருளினர்.

207. எங்ஙனேயென்னில்; நம்மாழ்வாருடைய திருவாக்கில் அவதரித்த நான்கு திவ்யப்ரபந்தங்களுள் முதலது திருவிருத்தம். அது தொடங்கும் போதே *உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்!* என்று அவதார ப்ரசம்ஸை செய்தருளினர். அன்றியும் *பிறந்தவாறும்!* என்று சொல்லி ஆறுமாஸம் மோஹித்துக் கிடந்தார். நாராயணுதி விசேஷ சப்தங்களைப் பல்லாயிரமுறை புகவிட்டிருக்கிறுர் தமது திவ்யஸூக்திகளில். அப்படியே லக்ஷ்மீபதித்வத்தையும் பன்முறை பணித்தார். ஆக, பல குறைகளுக்கு இடமாக ப்ரஹ்மஸூத்ரம் பணித்த வ்யாஸமஹர்ஷியே மறுபடியும் ஆழ்வாராக அவதரித்து செவிக்கினிய செஞ்சொற்களாலே அக்குறைகளைத் தீர்த்துக்கொண்டாராயிற்று. ஆகவே “விவவ்ரே தத் ச்ராவ்யம் வகுளதரதாமேத்ய ஸ புந:” என்கிற இரண்டாம் பாதம் மிகப் பொருத்தமாயிற்று.

208. இனி மூன்று நான்கு பாதங்களினுல் பகவத்பாஷ்யகாருடைய பெருமை சொல்லுகிறது. [உபாவேதௌ க்ரந்தௌ கடயிதுமித்யாதி.] மேலே சொன்ன ஸம்ஸ்க்ருத த்ராவிட சாஸ்த்ரங்களான இரண்டையும் பலபல உபபத்திகளாலே ஏக சாஸ்த்ரமாக்கி நிர்வஹித்தருள ஸ்ரீராமாநுஜராக அந்த வ்யாஸர்தாமே மீண்டுமவதரித்தா ரென்கிறது. உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யரான ஸ்வாமி யெம்பெருமானுர் நிர்வஹித் தருளின ப்ரகாரங்களைக் கீழே பரக்க நிரூபித்தோம். ப்ரஹ்மஸூத்ரத்திலே இல்லாதவையாய் ஆழ்வார்

ஸ்ரீஸூக்திகளிலிருந்தே க்ரஹிக்கக்கூடியவையான அர்த்த விசேஷங்களும் நமக்கு பகவத்பாஷ்யகார ஸ்ரீஸூக்திகளிலே காணக்கிடைக்கின்றனவாதலால் விசிஷ்ய மஹோபகாரகர் ஸ்வாமி யெம்பெருமானாரே யாவர்.

209. *க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும்* *வ்யாஸாய விஷ்ணுரூபாய* இத்யாதிப்படியே ஸ்ரீமந்நாராயணனே வ்யாஸராக அவதரித்தான்; அந்த வ்யாஸரே நம்மாழ்வாராகவும் எம்பெருமானாராகவும் அவதரித்து ஸ்வவிவக்ஷிதார்த்தங்களை யெல்லாம் [உள்ளே யடக்கிவைத் திருந்தவைகளையுங்கூட விடாமல்] ஸுவிசதமாக வெளியிட்டு உலகத்தை வாழ்வித்தா ரென்றதாயிற்று.

210. ஆழ்வாருளிச்செயல்கள் போலவே பகவத்பாஷ்யகார திவ்யஸூக்தி களும் கடல்போன்றிருத்தலால் இந்த நூலுக்கு உத்தேச்யமாகக்கொண்ட விஷய விசேஷ விசதீகரணம் ஒரு திவலையளவே ஆயிற்றிதில். க்ரமேண வேறு வேறு நூல்களில் இன்னமும் விசதீகரிப்போமாக. ... (29)

211. शठवैरिकलिवैरिमुखसूरिफणितिष्ववगाह्य यतिराज इह यद्यदलिखत् ।
तदशेषमुपवर्ण्य भवितास्मि नियतं क्रमशश्च कृतकृत्य इति वच्मि सुदृढम् ॥

212. श्रीवैष्णवकुलोत्पन्ना अपि केचिद्भाग्यतः ।
अन्यथैव प्रचारेषु निरता इति शोच्यते ॥

213. वस्तुस्थित्या ते खलु महान्तमुपकारमादधुर्जगति ।
यदियं कृतिरवतीर्णा विद्वद्रसिकान्तरात्महर्षकरी ॥

214. इत्थं वादिभयङ्करवंशीयाण्णङ्गरार्यसंग्रथितम् ।
द्रमिडोपनिषद्वैभवसर्वस्वं जगति जयतु सततमिह ॥

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசார்யர்**

எழுதிய

**த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்**

முற்றுப்பெற்றது.

---